ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸுதர்சனர் பதில்

(ஏழாவது சதகம்)

## மதங்கள், சாஸ்திரங்கள், இலக்கியங்களில் வாசகர்களின் 100 ஐயவினாக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்


ஆசிரியர்:—

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,** M.A.B.L.

(ஸுதர்சனர்)

'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.


---


ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப

தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.




---


விலை ரூ. 5.00] 1983. [தபால் 0.75

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

## இதில் விமர்சிக்கப்பட்ட பத்திரிகைகளும் பிரமுகர்களும்

1. கல்கி—1, 36 கேள்விகள்
2. குங்குமம்—4
3. காமகோடி பீடாதிபதிகள்— 4, 23, 31, 34, 38, 50, 73, 83, 85, 86
4. ஹிந்து—5, 35, 40, 77, 95
5. தினமணி—5, 50, 83, 85
6. ஞானபூமி—9, 23, 34, 46, 62, 67, 74, 94
7. ஹரிதாஸ் சுவாமிகள்—9
8. தினமலர்—14, 31, 55
9. வாரியார்—14, 48
10. குமுதம்—15, 39
11. தருமபுரம் ஆதீனம்—16
12. ஸப்தகிரி—32
13. நஜன்—32
14. கலைமகள்—33, 47, 89, 90
15. விடுதலை—37, 91
16. தாய்—88
17. அக்னிஹோத்ரம் ராமாநுஜதாதாசார்யர்—40
18. மகராஜன் குழு—45
19. சிருங்கேரி பீடாதிபதி—47
20. நீரோட்டம்—61, 78
21. கௌடிய—62
22. இதயம்—79, 99
23. விகடன்—84, 96
24. மங்கையர்மலர்—86
25. சாண்டில்யன்—88
26. கீதாசார்யன்—88
27. கி. வ. ஜகந்நாதன்—89
28. துக்ளக்—92
29. ஸ்ரீரங்கநாதபாதுகா—93
30. நா. மகாலிங்கம்—94
31. T. S. பாலசுப்ரமணிய சாஸ்த்ரிகள்—77, 95

---

## தலையங்கங்களும் கேள்விகளும்


ஸ்ரீமதழகியசிங்கரும் கல்கியும்—கேள்வி 1
அகில உலக இந்து மகாநாடு—2
இந்து மதத்தை ஒன்றுக்க முடியுமா? ஞானபூமியைக் குறித்துச் சில கேள்விகள்—23
மகராஜன் குழு அறிக்கையின் விதண்டாவாதங்கள்—45
ஞானபூமியா பொய்பூமியா?—46
சிருங்கேரி பீடாதிபதியைக் குறித்துச் சில கேள்விகள் — 47
வைதிகமதத்தின் பழைய நிலையும் இப்பொழுது ஒற்றுமைக்கு வழியும்-47
தமிழுக்கு வைணவர் சேவை, அரசியல்வாதிகளுக்கு அறிவுரை—61
அவைஷ்ணவ வைதிகர்களுக்கு அறிவுரை-1—67
அடியாரின் நேர்மை—78
அவைஷ்ணவ வைதிகர்களுக்கு அறிவுரை-2—67
வைஷ்ணவர்களுடைய கடமை
துக்ளக் துர்வாசரின் கட்டுரைகள்—92
துக்ளக்கின் தடுமாற்றம் & துக்ளக்கின் நேர்மை & புராணங்கள் பற்றிய [ஓர் ஆராய்ச்சி—92
திராவிடர் கழகத்தை வரவேற்கிறோம்—93
வாரப்பத்திரிகைகளும் நடமாடும் தெய்வங்களும்—92
ஸ்ரீரங்கநாதபாதுகைக் கட்டுரைகள்—93

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# ஸுதர்சனர் பதில் — ஏழாவது சதகம்

T. A. பாஷ்யம், சென்னை-1.

*1. ஸ்ரீமதழகியசிங்கர் கல்கியில் பேட்டியளித்தது பற்றி ஏராளமான கல்கி வாசகர்கள் கண்டனக் கணைகள் தொடுத்திருப்பது குறித்து 'கல்கிக்கு'க் கடிதம் எழுதினேன். தங்கள் கருத்தையும் தெரிவிக்கவேண்டுகிறேன்.*

தமிழ்நாட்டில் நாஸ்திகனுக்கும் மற்ற எந்த மதத்தைச் சேர்ந்தவனுக்கும் பொதுஜனப் பத்திரிகைகளில் தன் கருத்தைக்கூற உரிமையுண்டு. வைஷ்ணவன் ஒருவனுக்கே அவ்வுரிமை கிடையாது என்பதே இன்றுள்ள நிலை. கடந்த ஐம்பது வருடங்களாக, பிரபலமான தமிழ் மாத வாரப் பத்திரிகைகள் வைஷ்ணவத்தைத் தங்கள் இஷ்டப்படி திரித்துக்கூறியே பொதுமக்களை ஏமாற்றி வந்தன. "எல்லா தெய்வமும் ஒன்று; எம்மதமும் சம்மதம் என்பதே நம் வேத சாஸ்திரங்களின் கருத்து" என்னும் பொய் இடைவிடாமல் பிரசாரம் செய்யப்பட்டு வந்தது. இந்தப் பொய்ப்பிரசாரத்தை மறுத்து, கடந்த கால்நூற்றாண்டுகாலம் நாம் ஸுதர்சனத்தில் பல கட்டுரைகள் எழுதியுள்ளோம். பொதுஜனப் பத்திரிகைகள் அவற்றை இருட்டடிப்பு செய்துவிட்டன. இப்போது பகவத் ஸங்கல்பத்தாலே ஸ்ரீமதழகியசிங்கரின் பேட்டியைக் கல்கி வெளியிட்டவுடன் நீண்டகாலப் பொய்ப்பிரசாரத்தாலே மூளைச்சலவை செய்யப்பட்டிருக்கும் 'கல்கி' வாசகர்கள் சீறி விழுந்திருக்கிறார்கள். இனியாவது பொதுஜனப் பத்திரிகைகள் வைஷ்ணவத்தைத் தங்கள் இஷ்டப்படி திரித்துக் கூறாமல் உள்ளபடி பிரசாரம் செய்து இந்த அவலநிலையைப் போக்குவார்கள் என்று நம்புகிறோம். இதுபற்றி துந்துபி வைகாசி (414) இதழ் தலையங்கம் வாசிக்கத்தக்கது.

S. முரளி, அந்தநல்லூர். (2,3 கேள்விகள்)

*2. இலங்கையில் நடந்த அகில உலக இந்து மகாநாட்டைப் பற்றித் தங்கள் கருத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.*

ஆத்மாவின் முன்னேற்றத்துக்கு வழிகாட்டுவதே மதமாகும். நம்நாட்டில் வைஷ்ணவம், சைவம், அத்வைதம்

என்னும் மூன்று மதங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட மூன்று ஆத்மோஜ்ஜீவன வழிகளைக் காட்டுகின்றன. அத்வைதம் இன்று "எம்மதமும் சம்மதம், எல்லா தெய்வங்களும் ஒன்று" என்னும் இரு கொள்கைகளையே கொண்டதாக மாறி விட்டது. இப்படிக் கூறுவது அரசியல்வாதிகளுக்கும், எந்த மதத்திலும் பற்றில்லாத லோகாயத மனப்பான்மை கொண்ட பெரும்பான்மையான ஜனங்களுக்கும் மிகவும் இனியதாயிருக்கிறது. ஆக இப்படி முரண்பட்ட பல மதங்களையும் கருத்துக்களையும் ஆதரிப்பவர்கள் நிறைந்த இந்து ஸமூஹம் வைதிகமதத்துக்கு "இந்து மதம்" என்ற புதுப்பெயரை ஏற்றுக்கொண்டு ஒரு மகாநாடு நடத்துவதால் என்ன நற்பயன் விளையமுடியும்? பல்லாயிரக்கணக்கான தமிழர்களைக் கொலை செய்த பௌத்தர்கள் நிறைந்த இலங்கையில், அந்தப் பழியை மூடி மறைப்பதற்காக இலங்கை அரசால் நடத்தப்பட்ட கண்துடைப்பு வேலையே இது என்று பலர் கருதுகிறார்கள். இதுபற்றி துந்துபி வைகாசி (414) இதழில் வெளியிடப்பட்டுள்ள தலையங்கமும் குறிக்கொள்ளத்தக்கது. இது இந்த ஏழாவது சதகத்தின் அநுபந்தமாகவும் இணைக்கப்பெற்றுள்ளது.

*3. திருச்சியில் நடைபெற்ற இரண்டாவது மாநில பிராம்மண மாநாடு பற்றித் தங்கள் கருத்து என்ன? இம்மாநாட்டில் தாங்கள் கலந்து கொண்டீர்களா?*

பிராம்மணர்கள் தங்களுடைய ஆன்மீக முன்னேற்றத்தையும் கருதி இம்மாநாடுகளை நடத்துவதாயிருந்தால் நாம் மிகவும் ஸந்தோஷப்பட்டிருப்போம். நாம் அவற்றில் கலந்து கொண்டுமிருப்போம். ஆனால் தங்கள் ஒழுக்க நிலையிலிருந்து மிகவும் கீழ் இழிந்துவிட்ட பிராம்மண ஸமூஹம் அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் லௌகிக முன்னேற்றம் ஒன்றையே கருத்தில் கொண்டு இம்மாநாடுகளை நடத்துகிறது. ரெட்டியார் மாநாடு, செட்டியார் மாநாடு முதலானவற்றை நடத்தி மற்ற ஸமூகத்தினர் தங்கள் ஸமூக நலனுக்குப் பாடுபடுவது போலே, பிராம்மணர்களும் தங்கள் ஸமூஹ நலனுக்குப் பாடுபடுவது நியாயமே.

R. கோவிந்தராஜன், திருச்சி-4.

*4. 9—5—82 குங்குமம் பத்திரிகையில் ஜெயகாந்தன் எழுதிய கட்டுரையில் ஒரு பிராம்மணப் பெண் "ஒன்பது கஜ மடிசார் புடவை கட்டிக்கொள்வது அவசியமா? அதை விட்டு விடலாமா?" என்று காமகோடி புதுப் பெரியவாளைக் கேட்ட தாகவும். அதற்கு அவர்:—*

"பு. பெரியவாள் பதில் : "வேலைக்குத் தகுந்த வேஷம் போட்டுத்தான் ஆக வேண்டும். உதாரணமாக ஆபீசுக்குப் போகும்போது ஓர் உடை, வீட்டில் இருக்கும்போது ஓர் உடை, இப்படி அணிகிறோம் அல்லவா? அந்தந்த உடையை அணியும்போது, மனத்திலும் அதற்கேற்ற பக்குவம் வந்துவிடுகிறது. அதேபோலப் பூஜை செய்யும் நேரத்தில் அதற்கேற்ற உடையை அணிகிறோம். மனத்திலும் அந்த சமயத்தில் அதற்கு ஏற்ற பக்குவம் வந்துவிடும். இதை நாம் ஒரு கடமையாகக் கருதவேண்டும்—தகுந்த உடையுடன் ஆபீசுக்கு போய் வருவதைப் போல!"

*என்று பதில் கூறியதாகவும் வெளிவந்துள்ளது. இது பற்றித் தங்கள் கருத்தைத் தெரிவிக்கக்கோருகிறேன்.*

இன்று மதத்தலைவர்கள் காலத்துக்கேற்ற வேஷம் போடுகிறார்கள் என்பதையே இது காட்டுகிறது. 'உலகம் பொய்' என்று கூறும் அத்வைத மதத்தை ப்ரசாரம் செய்யாமல், காலத்துக்கேற்ற வேஷமாய் சைவ சாக்த மதங்களை ப்ரசாரம் செய்வதும் இந்த மனப்பான்மையை உறுதிப்படுத்துகிறது. இதனாலேயே இப்படி மனம் போனபடி பேசி ஜெயகாந்தனிடம் நன்றாக வாங்கிக்கட்டிக்கொண்டிருக்கிறார் பு.பெ.

S. வேங்கடம், சமயபுரம்.

*5. புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் 'தக்ஷிண காளிகா தேவி மூலமந்த்ர லக்ஷத்ரய மஹா யஜ்ஞம்' என்னும் யஜ்ஞம் ஒன்று மே மாதம் முழுவதும் நடக்கிறது. இது பற்றி 'ஹிந்து' 'தினமணி' முதலான பத்திரிகைகளில் விளம்பரம் வந்துள்ளது' அதில் கபால மாலை தரித்து ஒரு கையில் தலையும் ஒரு கையில் வாளும் கொண்டு காளி சிவனைச் சவமாக்கிக் கீழே தள்ளி மிதித்துக்கொண்டு நர்த்தனமாடுவதாகப் படம் அச்சிடப்பட்டுள்ளது. இது சைவத்துக்கோ, சாக்தத்துக்கோ பெருமை சேர்க்குமா?*

சைவசாக்த புராணங்களில் இப்படிப்பட்ட கதைகள் மலிந்துள்ளன. சக்தி சிவனைச் சவமாக்கிவிட்டதாகவும், சிவன் சக்தியை எரித்துவிட்டதாகவும் பல சைவசாக்த புராணக் கதைகள் கூறுகின்றன. இது சிவனுக்கோ சக்திக்கோ பெருமையாகாது. இக்கதைகளை ஒப்புக்கொண்டால் சிவனும் சக்தியும் ப்ராக்ருதமான ஜீவர்களே என்பதே உறுதிப்படும். அப்படியிருக்க சிவனையும், சக்தியையும் பரம்பொருள் என்று கூறிக்கொண்டு வெட்கமில்லாமல் இப்படிப் படத்தையும் பத்திரிகைகளில் வெளியிடுவது மிகவும் அருவருக்கத் தக்கது. பாரதந்த்ர்யத்தின் எல்லையிலே நிற்கும் லக்ஷ்மீ தேவியின் பெருமையையே இவை நிலைநாட்டுகின்றன. ஸுதர்சனர் சதகம் 4-35ல் இதுபற்றி மற்றும் பல விளக்கங்கள் உள்ளன.

R. ராஜகோபாலாச்சாரி, காரைக்கால். (6 to 8 கேள்விகள்)

***6. நம் ஸம்ப்ரதாயத்தில் "இராமாநுச நூற்றந்தாதி" பெற்றுள்ள இடத்தை "ஆழ்வார் அந்தாதி" எனப்படும் "ஸ்ரீசடகோபர் அந்தாதி' ஏன் பெறவில்லை என்பதை விளக்கியருளவேணும்.***

ஒரு நூலுக்கு வக்த்ரு வைலக்ஷண்யம், விஷய வைலக்ஷண்யம், ப்ரபந்த வைலக்ஷண்யம் என்னும் மூன்றும் வேண்டுமென்று பூர்வாசார்யர்கள் அறுதியிட்டனர். சடகோபரந்தாதிக்கு ப்ரபந்த வைலக்ஷண்யமும், விஷய வைலக்ஷண்யமும் இருந்த போதிலும் வக்த்ரு வைலக்ஷண்யம் இல்லாமையாலே அதைப் பூர்வாசார்யர்கள் ஏற்கவில்லை. கூரத்தாழ்வான் சிஷ்யரான திருவரங்கத்தமுதனார் ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் மிக்கு, எம்பெருமானாரிடம் பரமபக்தியுடையவராய் இராமாநுச நூற்றந்தாதியை அருளிச்செய்தார். கம்பன் தலைசிறந்த மகா கவியாயினும் ராஜஸபைகளிலே அரசர்களைப் பாடும் கவியாகவே வாழ்ந்து வந்தான். அதனாலேயே அவன் இயற்றிய கம்பராமாயணத்தையும் சடகோபரந்தாதியையும், வால்மீகி ராமாயணத்தையும் இராமாநுசநூற்றந்தாதியையும்போல் பூர்வாசார்யர்கள் மதிக்கவில்லை.

***7. "ராஸக்ரீடை"யையும் "பதினாறுமாயிரவர் தேவிமார்" என்பதையும் தற்கால இளைஞர்கள் ஏற்றுக்கொள்ளும்படி (Convince ஆகும்படி) எப்படி விளக்க வேண்டும்?***

கண்ணன் குரவைக் கூத்தாடினான், பதினாறுமாயிரவர் தேவிமாரை மணம்புரிந்தான் என்று கூறும் ப்ரமாணங்கள் அவனைப் பரமாத்மா என்றும் கூறுகின்றன. ஜீவர்களை உய்விக்க அவதரித்தவன் என்றும் கூறுகின்றன. சிவன் முதலானவர்களுக்குப்போல் பெண்களோடு உடலுறவு ஏற்பட்டு வீர்யம் விழுந்ததாக எந்த ப்ரமாணமும் கூறுவதில்லை. ஆகையால் குரவைக் கூத்திலும் ஆயிரக்கணக்கான தேவியரை மணந்ததன்மூலமும் பரமாத்மாவான கண்ணன் ஜீவாத்மாக்களிடம் தனக்குள்ள பேரன்பைக் காட்டுகிறான் என்றே தெளிவாக விளங்குகிறது. உலகத்திலுள்ள எல்லா ஜீவர்களுமே பரமாத்மாவுக்குப் பத்னீ ஸ்தானத்தில் இருப்பவர்கள் என்றும் ப்ரமாணங்கள் பேசுகின்றன.

*8. *வேறொருவனோடு போரிட்டுக்கொண்டிருந்த வாலியைப் பெருமாள் மறைந்து நின்று கொன்றதில் உள்ள தாத்பர்யத்தையும், தர்ம ஸூக்ஷ்மங்களையும் மந்தமதிகளும் உணரும்படி விளக்கியருளவேணும்.*

வாலி தன் வாதங்களில் தன்னைப் பகுத்தறிவற்ற விலங்காகவும் வைத்துப் பேசுகிறான். பகுத்தறிவுள்ளவன்போலேயும் பேசுகிறான். இராமன் இரண்டு நிலையிலும் வாலியை வைத்து பதில் கூறியிருக்கிறான். (1) வாலியை விலங்காகக்கொண்டால், விலங்குகளை மறைந்து நின்றும், ஒன்றோடொன்று போரிட்டுக்கொண்டிருக்கும்போதும் கொல்லுவது அதர்மமல்ல. (2) வாலியைப் பகுத்தறிவுள்ளவன் என்று கொண்டால் — பகுத்தறிவுள்ளவன்—காலில் விழுந்த தம்பியை ஓடவோட விரட்டிவிட்டு, அவன் மனைவியைக் கைக்கொண்டது பெரிய குற்றம். அரசனான பரதனுக்குப் பிரதிநிதியான ராமன் இக்குற்றத்துக்கு தண்டனை வழங்கியதில் தவறில்லை. மேலும், ராமனுக்குத் துணைபுரிவதாக ஒப்புக்கொண்டு வானரமாகப் பிறந்த வாலி இராவணனோடு நட்புப் பூண்டது நம்பிக்கை த்ரோஹமாகும். இதற்காகவும் ராமன் வாலிக்கு தண்டனை வழங்கினான். மேலும், நேரே நின்று போர்புரிபவர்களின் பலத்தில் பாதி தன்னை அடைந்துவிடவேண்டும் என்று வாலி வரம்பெற்றிருந்தான்.

* இதுபற்றி "M. நந்தகோபால், சென்னை-38" அவர்களால் கேட்கப்பட்டுள்ளது.

தேவபக்ஷபாதியான ராமன் தெய்வம் கொடுத்த அந்த வரத்தைப் பொய்யாக்கலாகாது என்னும் கருத்தாலும் வாலியை மறைந்துநின்று கொன்ருன்.

S. கோவிந்தராஜன், சென்னை-94.

*9. "ஞானபூமி" மே' 82 இதழில் "பாவம் எது? புண்ணியம் எது?" என்னும் தலைப்பில் புண்யபாபங்களைப் பற்றி "ஹரிதாஸ் சுவாமிகள்" என்பவருடைய கட்டுரையில், அவரது குருநாதரான ஞானனந்த சுவாமிகளின் விளக்கத்தில், "'எல்லாம் அவன் செயல்' என்று நம்பி ஒருவன் கொலை, கற்பழிப்பு முதலியவற்றைச் செய்தால் அது பாவமல்ல" என்றும், "இது நாம் செய்யும் தவறு என்று எண்ணி உணர்ந்து அது நம்மை உறுத்துமாஞல், அப்போது அதுவே பாவம் ஆகி விடுகிறது" என்றும் புண்யபாப விளக்கம் உள்ளது. இது சரியா?*

இது அடியோடு தவறு. இதை உண்மையாகக் கொண்டால் கொலை, கற்பழிப்பு முதலானவற்றைச் செய்யும் அனைவருமே "எல்லாம் அவன் செயல்" என்று கூறித் தப்பித்துக் கொள்ளப்பார்ப்பார்கள். உண்மையில் "எல்லாம் அவன் செயல்" என்று ஒருவன் நம்பிஞல், அவன் அப்பரமாத்மாவின் ஆணையான வேத சாஸ்திரங்களுக்கு முரணுகக் கொலை முதலானவற்றைச் செய்யவேமாட்டான். செய்தாஞகில், பரமாத்மாவிடமே அவனுக்கு நம்பிக்கை இல்லை எனத் தேறுமாகையால், "எல்லாம் அவன் செயல்" என்னும் நம்பிக்கையும் அவனுக்கு இல்லை என்றே ஏற்படும். "கொலை செய்பவனும், கொலை செய்யப்படுபவனும், கற்பழிப்பவனும், கற்பழிக்கப் படுபவளும் ஒரே பரம்பொருளே" என்னும் கருத்திலேயே 'எல்லாம் அவன்செயல்' என்று கூறப்படுகிறது எனில்: 'பரம் பொருள் கொலை, கற்பழிப்பு முதலான செயல்களைச் செய்யுமா? செய்யுமாகில், அவற்றைச் செய்யலாகாது என்று சாஸ்திரங்களில் விதித்தது பொருளற்றதாகிவிடுமே' என்னும் கேள்விகள் எழவே செய்யும். இதற்கு அத்வைதிகள் பதில் கூற இயலாது. மேலும், "எல்லாம் அவன் செயல்" என்று கூறுகிறவர்கள், அனைத்தையும் செய்யும் பரமாத்மாவைத் தங்களைக் காட்டிலும் வேறுபட்ட தலைவனுகக்கொண்டே

அப்படிக் கூறுகிருர்கள். "அவன்" என்னும் பதமே தன்னைக் காட்டிலும் கடவுள் வேறுபட்டவன் எனக் காட்டுகிறது. 'அப்படியாளுல், கொலை, கற்பழிப்பு முதலானவைகளையும் அவன் தூண்டிவிட்டுச் செய்யும் செயலாகையால், நமக்குப் பாவம் ஏது?" என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதில் ப்ரஹ்மஸூத்ரத்தில் "பராயத்தாதிகரணம்" [ 2-3-6 ] என்னும் அதிகரணத்தில் கூறப்பட்டுள்ளது. "ஜீவன் செய்யும் செயல்களெல்லாம் பரம்பொருளுக்கு அதீனமானதாலும், புண்யபாபகர்மங்களைச் செய்யும்போது முதல் முயற்சியில் பரமன் ஜீவனுக்கு ஓர் ஸ்வாதந்த்ர்யத்தையும் அளித்திருக்கிருன். ஆகையால் ஜீவன் சாஸ்திரங்களை ஒட்டிச் செய்யும் புண்யகர்மங்களுக்குப் பலஞகப் பரமன் இன்பத்தை அளிப்பதும், சாஸ்திரங்களுக்கு முரணுகச் செய்யும் கொலை முதலிய பாபச்செயல்களுக்குப் பலஞக, நரகாநுபவம் முதலான துன்பத்தை அளிப்பதும் பொருந்துகிறது" என்பது இந்த பதிலின் ஸாரம். இந்த வேதாந்த சாஸ்திர ஞானமில்லாதவர்கள் "ஞானனந்த சுவாமிகள்" என்று பெயர்வைத்துக் கொள்வதால் மாத்திரம் ஞானிகளாகிவிடமாட்டார்கள். அத்தகையவர்களுடைய விபரீத விளக்கங்களையே கொண்ட பத்திரிகையும் 'ஞானபூமி' ஆகமுடியாது.

M. நந்தகோபால், சென்னை-38. (10 to 13 கேள்விகள்)

*10. சில இந்துக்கள் அல்லாத மதத்தினர் — விஷ்ணுவின் அவதாரங்கள் யாவும் யாராவது ஒருவனை அழிக்கத்தான் உண்டானவை என்று பழிக்கின்றனரே அவர்கள் வாயை எந்தக் காரணங்கள் சொல்லி அடக்குவது?*

கண்ணன் தான் அவதாரமெடுப்பது — 1. நல்லோர்களைக் காப்பது, 2. தீயவர்களை அழிப்பது. 3. அறத்தை நிலைநிறுத்துவது எனும் மூன்று வகையான நற்செயல்களுக்காக எனத் தெளிவாகக் கூறியிருக்கிருன். அதன்படி ராமனுகவும், கிருஷ்ணனுகவும், நரசிங்கனுகவும் மற்றும் பலராகவும் அவதரித்த போது அவன் குஹன், அனுமன், சுக்ரீவன், விபீஷணன், அக்ரூரன், மாலாகாரர், கோபியர், ப்ரஹ்லாதன், கஜேந்திரன், துருவன் முதலான பல்லாயிரக்கணக்கான நல்லோர்களை ரக்ஷித்திருக்கிருன். தாய் தந்தையர் சொற்கேட்டல், ஶரணுகத ரக்ஷ

ணம், கீ₃தோபதே₃ஶம் முதலான பல செயல்களைச் செய்து அறங்களை நிலைநிறுத்தியிருக்கிறான். இதை அறிந்தும் மதவெறியர்கள் மதமாற்றம் செய்வதற்காகப் பிதற்றுவதைப் பொருட்படுத்தாமலிருப்பதே நல்லது.

*11. ஒரு வைஷ்ணவன் இல்வாழ்க்கையை அனுபவித்த பிறகுதான் ஸன்யாஸம் வாங்கவேண்டுமா? இல்வாழ்க்கையில் ஈடுபடாமல் ஸன்யாஸம் வாங்கினால் அது பாபம் ஆகுமா?*

இல்வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளாமல் ப்₃ரஹ்மசர்ய ஆஶ்ரமத்திலிருந்தே ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொள்ளலாம். ஸமீபகாலத்தில் அப்படி ஏற்றுக்கொண்டு உலகம் நிறைந்த புகழாளராய் வாழ்ந்தார் அயோத்யாராமாநுஜஜீயர் ஸ்வாமி. இப்போது சின்ன ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமியும் அப்படி ஏற்றுக்கொண்டு அருங்காரியங்களை ஸாதித்துவருகிறார்.

*12. பேரின்ப நிலை என்பது எவ்வாறு இருக்கும்?*

இவ்வுலகில் அநுப₄விக்கப் பெறும் இன்பங்களில் நாம் பெறும் ஆனந்தம் அற்பமானது; நிலைநில்லாதது; துன்பம் கலந்தது. பேரின்பம் இவ்வின்பங்களைக் காட்டிலும் பலகோடி நூறாயிரம் மடங்கு பெரியது; நிலையாயிருப்பது; துன்பம் சிறிதும் கலக்காதது என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

*13. நரகத்தில் அவரவர் செய்த பாபங்களுக்கு ஏற்ப யமன் தண்டிப்பது ஆன்மாவையா? அல்லது உடலையா? உடல் என்றால் அது பூமியில் எரிக்கப்பட்டோ புதைக்கப்பட்டோ அழிகின்றது. ஆன்மா என்றால் (கீதையின்படி) அதை எரிக்கவோ, வெட்டவோ, காற்றால் உலர்த்தவோ முடியாது. நரகில் உள்ளபடி தண்டனைகளை (நெருப்பினால் "பாபம் செய்தவனை" எரிப்பது போன்றவை) கொடுக்கமுடியாது. இல்லையெனில் மீண்டும் நரகில் உடல் கொடுக்கப்படுகின்றதா?*

சரீரத்தின்மூலமே ஆத்மாவுக்கு த₃ண்ட₃னை அளிக்கமுடியும். இவ்வுலகில் ஸ்தூல உடல் எரிந்த பின்பும் ஜீவன் ஸூக்ஷ்ம ஶரீரத்தோடு (புண்ணியம் மிகுந்திருந்தால்) ஸ்வர்க்கத்திற்கோ (பாபம் மிகுந்திருந்தால்) நரகத்திற்கோ போகிறான். ஸ்வர்க்கத்தில் தேவஶரீரம் எடுத்து ஸுகத்தை அநுபவிக்கிறான். நரகத்தில் அவனுக்கு யாதநா சரீரத்தை அளித்து தண்டனைகளை அநுப₄விக்கச் செய்கிறான் யமன் — என்று சாஸ்திரங்கள் பேசுகின்றன.

K. நாராயணன், திருச்சி-17.

*14. 13-6-82 திருச்சி தினமலரில் வாரியாரின் ராமாயண உபந்யாஸம் பற்றிய செய்தியில் "விச்வாமித்ரர் கந்த புராணம் எல்லாம் சொன்னார். கந்தனுக்குமேலே ஒரு சிறந்த தெய்வமில்லை என்றெல்லாம் சொன்னார்." என்று வாரியார் திருச்சியில் உரையாற்றியதாக அச்சிடப்பட்டுள்ளது; இப்படி ராமாயணத்தில் உள்ளதா?*

எந்த ராமாயணத்திலும் இப்படியில்லை. வால்மீகி ராமாயணத்தில் கந்தனின் உத்பத்தி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதில் சிவனும் பார்வதியும் புணர்ந்ததனால் விழுந்த வீர்யம் பலவிடங்களில் ஸஞ்சரித்து அறுமுகனாக உருவெடுத்தது என்று வர்ணிக்கப்படுகிறது. இதிலிருந்தே கந்தன் ப்ராக்ருதமான பிறப்பை உடையவன் என்று தெளிவாக விளங்குகிறது. இப்படியிருக்கும்போது கந்தனுக்குமேலே ஒரு சிறந்த தெய்வமில்லை என்று விச்வாமித்ரர் கூறியதாக வாரியார் கூறுவது அவருக்குக் கைவந்த கலையான ப்ரஹ்மாண்டப் புளுகுகளில் ஒன்றாகும். "எந்தப் புளுகும் கந்தபுராணத்தில்" என்று புகழ்பெற்ற கந்தபுராணத்தில் உள்ள ஆயிரக்கணக்கான பொய்க் கதைகளில் ஒன்றுமே ராமாயணத்தில் காணப்படவில்லை. (சங்க இலக்கியங்களில் முருகனைப்பற்றிய பாடல்களிலும் காணப்படவில்லை) இப்படியிருக்க, "விச்வாமித்ரர் கந்தபுராணமெல்லாம் சொன்னார்" என்று வாரியார் கூறுவது பொய்ப்பிரசாரத்தில் வாரியார் கந்தபுராணத்தையும் வென்று விட்டாரென்றே காட்டுகிறது.

விஷ்ணுகுப்தன், துறையூர்.

*15. 3—6—1982 குமுதம் இதழில் 81ம் பக்கத்தில் கா. சே. மணவாளன் எழுதிய புத்தகத்தை விமர்சிக்கையில், "அகங்காரமுள்ள வைணவர்களுக்கு ஆய்ச்சியர் மேல்" என்னும் தலைப்பில்.*

"திருவரங்கத்தில் பெருமாள் திருவோலக்கத்தில் வீற்றிருந்த சமயம். ஒரு பக்கம் வைஷ்ணவர்களும் மற்றொரு பக்கம் ஆய்ச்சியர்களும் நின்றனர். வங்கிப்புரத்து நம்பி வந்தார். வைஷ்ணவர்கள் பக்கம்

ஸ—2

நிற்காது ஆய்ச்சியர் பக்கம் நின்றார். காரணம் கேட்டார் முதலியாண்டான். 'அகங்கார மமகாரங்கள் உள்ள வைஷ்ணவர் பக்கம் இறையருள் வெள்ளம் ஏறாது. தாழ்ச்சி உடையவர்களாயும் தாழ்மை தோன்றப் பேசும் ஆய்ச்சியர்பால் மடை திறந்தாற் போல் பாயும். அதுபற்றியே அவர்கள்பால் நிற்கிறேன்,' என்றார் நம்பி."

***என்று வெளியாகியிருக்கும் விஷயம் உண்மைதானா? அல்லவெனில் விடாமல் வைணவ த்வேஷ ப்ரசாரம் செய்யும் குமுதத்தின்மேல் என்ன நடவடிக்கை எடுப்பது?***

இது 9—2—8 ஈட்டின் ஐதிஹ்யத்தில் வெளிவந்துள்ள விஷயம். இதை வைஷ்ணவர்களுக்குத் தாழ்வையும் (வைஷ்ணவர்களல்லாத) ஆய்ச்சியர்க்குச் சிறப்பையும் வெளியிடும் ஸம்பவமாகக் குமுதம் திரித்து எழுதியிருப்பது வழக்கமான வைஷ்ணவ த்வேஷத்தினால் ஏற்பட்டது. இந்நிகழ்ச்சியில் எடுக்கப்பட்ட ஆய்ச்சியரும் பரம வைஷ்ணவர்களே. ஒருபுறம் வைஷ்ணவவித்வான்கள் நின்றிருந்தனர். மற்றொருபுறம் ஒன்றும் படிக்காதபோதிலும் எம்பெருமானிடம் பொங்கும் பரிவையுடைய வைணவ ஆய்ச்சியர் நின்றிருந்தனர். வைணவ வித்வான்கள் வடமொழித் துதிநூல்களைச் சொல்லி எம்பெருமானை வழிபட்டனர். வைணவ ஆய்ச்சிகள் உள்ளமுருகி எளிய இனிய தமிழிலே "நூறாண்டுவாழ்வீர்; நல்ல அணிகளைப் பூண்பீர்; பாலும் பழமும் உண்பீர்" என்று வாழ்த்தினர். இவ்விரு வழிபாடுகளில் ஆய்ச்சியர்களுடைய வழிபாட்டிலேயே பொங்கும் பரிவு மிகுந்திருப்பதால் எம்பெருமானுடைய கருணைவெள்ளம் அவர்கள் பக்கலிலேயே மிகுதியாகப் பாயும் என்னும் திருவுள்ளத்தாலே வங்கிப்புரத்து நம்பி அவர்கள் இருந்த பக்கத்திலேயே நின்றார் என்பதே உண்மை. இந்த அழகான ஐதிஹ்யத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், குமுதம் 'வைணவர்கள் அனைவரும் அஹங்காரம் உள்ளவர்கள்' என்று பொருள்படத் தலைப்புக் கொடுத்திருப்பது மிகவும் அருவருக்கத்தக்கது 'படித்தவர்களின் அன்பைக் காட்டிலும் பாமரர்களின் பொங்கும் பரிவே மேலானது' என்பதே இதற்குப் பொருத்தமான தலைப்பாகும். இத்தகைய வைணவ த்வேஷ ப்ரசாரத்தைச் செய்வதையே போது போக்காகவும், பிழைக்கும் வழியாகவும் கொண்டிருக்கும் பத்திரிகை

களின் மேல் சட்டரீதியான எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது. இப்பத்திரிகைகளை வாங்கிப் படிக்காமலிருப்பதே வைஷ்ணவர்கள் எடுக்கக்கூடிய ஒரே நடவடிக்கையாகும். இப்பத்திரிகைகளைப் படிக்கும் நேரத்தில் எத்தனையோ நல்ல காரியங்களில் ஈடுபடலாமாகையாலே அவர்களுக்கு இது பெரும் பயனையும் விளைக்கும்.

K. A. தேவராஜன் B.Sc. A. C. A., சென்னை-1.

*16. மாயவரம் தருமபுரம் ஆதீனத்தின் மாதாந்திர பத்திரிகையான "ஞானசம்பந்தம்" சித்திரை இதழில் மேற்படி ஆதீனம் இலங்கையில் நடைபெற்ற உலக இந்து மகாநாட்டுக்கு அனுப்பிய சிறப்புக் கட்டுரை பிரசுரிக்கப்பட்டுள்ளது. அதில் பக்கம் 115-118ல் பின்வருமாறு ஆதீனம் கூறியுள்ளார்:—*

*"இந்து சமயம் சைவ சமயமேயாகும். சிவ நெறி வேத காலத்துக்கு முற்பட்டது. இதற்குச் சான்று சிந்து சமவெளி ப்ரதேசத்தில் சிவ லிங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்ட ஒன்றே போதுமானது. மிகப் பிற்காலத்தில் வைணவம் சைவ சமயத்திலிருந்து பிரிந்தது. அப்படிப் பிரித்தவர் இராமானுசர். இராமானுசர் வைணவத்தை சிவ நெறிக்குச் சமமாக ஆக்க முற்பட்டார். சிவமாகிய பரம்பொருளுக்கு இணையாக திருமாலை இராமானுசர் கற்பித்தார். திராவிடர்கள் வேதகாலத்துக்கு முற்பட்ட பழங்குடியினர். இவர்கள் சிவநெறியையே பின்பற்றினர். பிற்காலத்தில் திராவிடர்களும், இந்தியாவுக்கு வந்து சேர்ந்த ஆரியர்களும் ஒன்று சேர்ந்து தற்போதுள்ள இந்து சமயத்தை உருவாக்கினர்" என்பது ஆதீனத்தின் கூற்று. மனம்போன போக்கில் எழுதிய இக்கட்டுரையை ஸுதர்சனர் பதிலில் ஆராய்ந்து மாயவரம் தருமபுரம் ஆதீனத்தின் மயர்வை அறுக்க வேண்டுகிறேன்.*

தமிழ்நாட்டில் இரண்டாயிரம் வருஷத்துக்கு முற்பட்ட சங்ககாலத்திலேயே சிவனைப் பரம்பொருளாகக் கூறும் சைவமும், சக்தியைப் பரம்பொருளாகக் கூறும் சாக்தமும், முருகனைப் பரம்பொருளாகக் கூறும் கௌமாரமும், திருமாலைத் தவிர வேறெந்தத் தெய்வத்தைப் பரம்பொருளாகக் கூறும் எந்த மதமும் இருந்ததில்லை என்பதையும், திருமாலைப் பரம்

பொருளாகக் கூறும் வைணவ மதம் ஒன்றேயிருந்தது என்பதையும் அசைக்க முடியாதபடி நிலைநாட்டி 'சங்ககாலத் தமிழர் சமயம்'' எனும் நூலை ஆங்கில மொழிபெயர்ப்புடன் அச்சிட்டு, உலகத் தமிழ் மாநாட்டிலும் ஸுதர்சனம், கீதாசார்யன் பத்திரிகைகள் மூலமும் தமிழ் நாடெங்கும் பல்லாயிரக்கணக்கான பிரதிகள் வழங்கப்பட்டிருக்கின்றன. குறிப்பாகத் தமிழ்நாட்டிலுள்ள தமிழறிவுள்ள எல்லாப் பிரமுகர்களுக்கும், எல்லா சைவப்புலவர்களுக்கும், சைவ ஆதீனங்களுக்கும் இதன் பிரதி அனுப்பப்பட்டுள்ளது. இயன்றால் இதற்கு எவரும் பதில் கூறலாம் என்று அந்த நூலிலேயே அச்சிடப்பட்டுள்ளது. இதைத் தருமபுரம் ஆதீனத்துக்கும் அனுப்பியிருக்கிறோம். மற்ற அனைவரையும்போலே இதற்கு எந்த பதிலையும் கூறாது வாய்மூடி மௌனியாயிருக்குமிவர் மனம் போனபடி மேலேகண்ட கட்டுரையில் சில வரிகளை எழுதி, பாமர மக்களை ஏமாற்றியிருக்கிறார். சிந்து சமவெளி ப்ரதேசத்தில் சிவலிங்கம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதிலிருந்து சைவ சமயம் அந்தக்காலத்தில் இருந்தது என்று எப்படித் தேறும்? நம் நாட்டில் எத்தனையோ தெய்வ வழிபாடுகள் அநாதிகாலமாக இருந்து வருகின்றன. அவ்வழிபாடுகளில் சிவலிங்க வழிபாடும் ஒன்று. சங்ககாலத்திலே சிவன், முருகன், இந்திரன், வருணன் முதலான தெய்வங்களின் வழிபாடுகள் இருந்ததைக் காண்கிறோம். ஆனால் அந்த தெய்வங்கள் எதையுமே பரம்பொருளாகக் கூறாமல், திருமால் ஒருவனையே பரம்பொருளாகச் சங்ககாலச் சான்றோர்கள் முழங்கினர். வெறும் வழிபாடு மதமாகாது. சிந்து சமவெளி முதலானவற்றிலும் உலகத்தில் மற்ற பல இடங்களிலும் பல விஷ்ணு சின்னங்களும் கிடைத்திருப்பதாக ஆராய்ச்சியாளர் கூறுகிறார்கள். இவற்றை மாத்திரம் கொண்டு வைணவமதம் இருந்தது என்று தேறாது. ஸ்ருஷ்டி காலத்திலிருந்து இருந்த வேதங்களைக்கொண்டும், ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக்கொண்டும் தான் எது உண்மையான வைதிகமதம் என்று நிர்ணயிக்க முடியும். ''விஷ்ணு சித்தவிஜயம்'' என்னும் நமது நூலில் ஆயிரம் பக்கங்களில் வேதவாக்யங்களைக் காட்டியும், மற்றுமோர் ஆயிரம் பக்கங்களில் ஸ்ம்ருதி வாக்யங்களைக் காட்டியும் வைணவமதமே உண்மையான வைதிகமதம் என்று நிலைநாட்டியுள்ளோம்.

மேலும் பல்லாயிரம் பக்கங்களில் இதிஹாஸபுராணங்களைக் கொண்டு இதை நிலைநிறுத்தப்போகிறோம். ச்ருதி, ஸ்ம்ருதி முதலானவையெல்லாம் ஸம்ஸ்க்ருதத்தில் இருப்பதால் தருமபுர ஆதீனம் போன்றவர்களுக்குப் புரியாது. தமிழில் உள்ள சங்க இலக்கியங்களைப் பார்த்தால் "திருமாலே வேதங்களில் முழங்கப்பட்டுள்ள முழுமுதல்வன்; சிவன் முதலான எல்லா தேவர்களும் அவனால் படைத்தளித்து அழிக்கப்படுபவர்களே" என்பதே சங்ககாலத்தில் வழங்கிய உண்மையான வைதிக மதக்கொள்கை என்று இவரும் புரிந்து கொள்ளலாம். இராமானுசருக்கு மிக முற்பட்ட ஆழ்வார்களும், சங்ககாலச் சான்றோர்களும், வால்மீகி வியாஸர் முதலான நூற்றுக்கணக்கான ரிஷிகளும் வைஷ்ணவமே உண்மையான வைதிகமதமென்று நிலைநாட்டியிருக்கும்போது, சிறிதும் கூசாமல் "சிவநெறி வேதகாலத்துக்கும் முற்பட்டது; ஸ்ரீராமானுசர் சைவத்திலிருந்து வைஷ்ணவத்தைப் பிரித்தார்" என்று ஆதீனம் பொய்யுரைப்பதைச் சிறுவர்களும் ஏற்கமாட்டார்கள். 'ஸ்ருஷ்டி காலத்தில் முதலில் ஏற்பட்டது வேதம்' என்று சைவ சித்தாந்தமே கூறும்போது, அந்த சித்தாந்தத்தின் மடாதிபதியான இவர் "சிவநெறி வேதகாலத்துக்கும் முற்பட்டது" என்று எழுதுவதன் மூலமும், மேல்நாட்டு அறிவிலிகள் சிலர் நம்மைப் பிரித்தாள்வதற்காகக் கற்பித்த ஆரியதிராவிடக் கற்பனையை ஏற்றுக்கொள்வதன்மூலமும் தம்மை அவைதிகர் என்றும், சைவசித்தாந்த த்ரோகி என்றும் காட்டிக்கொண்டவராகிறார். இயலுமானால், நமது சங்காலத்தமிழர் சமயத்துக்கும் இங்கு நாம் எழுதியிருப்பதற்கும் ஆதீனம் தாமேயோ, தம்மிடமுள்ள வித்வான்களைக்கொண்டோ பதில் உரைக்கட்டும். அந்த பதிலை நாம் ஸுதர்சனத்திலேயே ஆராய்ந்து நடுநிலையாளர்களின் தீர்ப்புக்கு விடுவோம்.

வித்வான் M. ராதாகிருஷ்ணன், பாண்டிச்சேரி.

***17. ஸுதர்சனர் பதில் ஏழாவது சதகம் ஆறாவது கேள்வியின் பதிலில் "கம்பனின் நூற்களுக்கு வக்த்ருவைலக்ஷண்யம் இல்லை" என்று தாங்கள் எழுதியிருப்பது பெரும் பரபரப்பை ஊட்டி அடியார்களின் மனத்தில் வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. கம்பன் சடகோபரந்தாதியில் ஆழ்வார் தன்னைப்***

*பரமவைணவனாகத் திருத்திவிட்டதாகக் குறிப்பிட்டிருக்கிறான். பூர்வாசார்யர்கள் கம்பராமாயணத்தைச் சில இடங்களில் மேற்கோளாகக் காட்டியுள்ளனர். ஆகையால் தாங்கள் எழுதியதை மறுபடியும் பரிசீலிக்கவேண்டுகிறேன்.*

கம்பன் பரம வைணவன் என்பதில் நமக்குச் சிறிதும் கருத்து வேறுபாடு இல்லை. டி. கே. சி. முதலான பல புலவர்களும், அண்ணாமலைப் பல்கலைக்கழகமும், முன்னாள் நீதிபதி இஸ்மாயிலும் இதை மாறுபடுத்த முற்பட்டபோது, நாமே "கம்பன் பரம வைணவன்" என்று நிலைநாட்டினோம் என்பதை எவரும் மறுக்க இயலாது. "இராமாநுச நூற்றந்தாதியைப் போல் சடகோபரந்தாதியை ஏன் பூர்வாசார்யர்கள் சிறந்த இடத்தில் வைக்கவில்லை" என்பது ஆறுவது கேள்வி. இதற்குப் பதில்கூறவேண்டிய பொறுப்பு அனைவருக்கும் உண்டு. காளிதாஸன் முதலான கவிகளின் நூல்களிலிருந்தும் பூர்வாசார்யர்கள் மேற்கோள் காட்டியிருப்பதுபோல், கம்பராமாயணத்திலிருந்தும் மேற்கோள் காட்டியிருப்பதைக்கொண்டு பூர்வாசார்யர்கள் கம்பனை மதுரகவியாழ்வாரைப்போலவோ, அமுதனாரைப்போலவோ மதித்தனர் என்று தேறிவிடாது. "கம்பன் பரம வைணவனாயிருந்தபோதிலும், கம்பராமாயணமும் சடகோபரந்தாதியும் மிகச் சிறந்த நூல்களாயிருந்தபோதிலும், கம்பன் அமுதனாரைப்போலே ஆசார்யஸம்ப₃ந்த₄முடையவனாகவும், ஜ்ஞானப₄க்தி வைராக்₃யமுடையவனாகவும் வாழ்ந்தான் என்பதற்கு வரலாற்றில் எந்த ஆதா₄ரமும் இல்லையாகையால், இராமாநுசநூற்றந்தாதிக்குக் கொடுத்த மதிப்பைப் பூர்வாசார்யர்கள் சடகோபரந்தாதிக்குக் கொடுக்கவில்லை" என்பது நமது பதிலின் ஸாரம். இதைக்கண்டு பரபரப்படைவதற்கோ வருத்தப்படுவதற்கோ எதுவுமில்லை. மகாகவிகளுக்கும் மாஜ்ஞானிகளுக்கும் உள்ள வேறுபாட்டை அறிபவர்கள் இதில் சிறிதும் வருத்தமடையமாட்டார்கள்.

T. R. மாதவன், வைத்தியர், திருக்காட்டுப்பள்ளி.

*18. ஸுதர்சனர் பதில் ஏழாவது சதகம் எட்டாவது கேள்வியின் பதிலில் "வாலியோடு போர்புரிகிறவர்களுக்கு எதிரியின் பலத்தில் பாதி வாலியை அடைந்துவிடும் என்று வாலி*

*தெய்வத்திடம் வரம் பெற்றிருந்தான்'' என்று எழுதப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரமென்ன ?*

துந்துபியோடு போர் புரியுமிடத்தில் "*தமேவமுக்த்வா ஸங்க்ருத்₃தே₄ா மாலாமுத்க்ஷிப்ய காஞ்சநீம் । பித்ரா த₃த்தாம் மஹேந்த்₃ரேண யுத்₃தா₄ய வ்யவதிஷ்ட₂த ॥*" [ரா-கி 11-41] [கோபம் கொண்ட வாலி துந்துபியிடம் இப்படிக் கூறி, தன் தகப்பனை மஹேந்திரனால் கொடுக்கப்பட்ட பொன்மாலையை அணிந்துகொண்டு யுத்தம் பண்ணத் தொடங்கினான்] என்னும் ச்லோகத்தில் கோவிந்தராஜ வ்யாக்யானத்தில் "இந்த மாலையை அணிந்துகொண்டிருக்கும்போது வாலியோடு போர்புரிபவர்களுடைய பலம் வாலியைச் சேரும்" என்று இந்திரன் வரம் கொடுத்திருப்பதாக எழுதப்பட்டுள்ளது. சுக்ரீவனோடு போர் புரியும்போதும் "*ஸுக்₃ரீவோऽபி தமுத்₃தி₃ஶ்ய வாலிநம் ஹேமமாலிநம்*" [ரா-கி 16-18] என்று வாலி இம்மாலையையணிந்திருந்ததாகவே வால்மீகி குறித்திருக்கிறார். இதுவே இவ்விஷயத்தில் ஆதாரம்.

த. கு. கோவிந்தசாமி, கும்பகோணம். (19, 20 கேள்விகள்)

*19. 4—5—82 அன்று திருக்குடந்தை கோபால் நூலகத்தில் நடந்த ஹரிதாஸ் என்பவரின் உபந்யாஸத்தில் "ஸீதை ராவணனுடைய பெண்" என்று வால்மீகி ராமாயணத்தில் உள்ளது என்று உபந்யாஸகர் கூறினர். இது உண்மையா ?*

இது முழுப் பொய், 'ஆநந்த ராமாயணம், அற்புத ராமாயணம்' என்னும் பெயரில் பொய் ராமாயணங்கள் பல பிற்காலத்தில் கற்பிக்கப்பட்டன. அவற்றில் இத்தகைய பொய்க் கதைகள் உள்ளன. அவை நம்பத் தக்கவையல்ல.

*20 ஸ்ரீராமநவமியைச் சிலர் பங்குனி மாத சுக்லபக்ஷ நவமியிலும், சிலர் சித்திரை மாத சுக்லபக்ஷ நவமியிலும் கொண்டாடுகிறார்கள். இதற்குக் காரணமென்ன ?*

வருஷங்கள் இரண்டுவகையாகக் கணக்கிடப்படுகின்றன. ஒவ்வொரு மாதத்திலும் அமாவாஸ்யைக்கு மறுதினம் மாதம் பிறந்து அடுத்த அமாவாஸ்யையோடு முடிவடைவதாக ஒரு கணக்கு சந்திரனுடைய ஸஞ்சாரத்தைக்கொண்டு கணக்

கிடப் படுவதால், இது 'சாந்த்ரமானம்' எனப்படும் இதன்படி பங்குனி மாத அமாவாஸ்யைக்கு மறுநாள் வருஷப் பிறப்பு; சித்திரை மாதம் பிறந்துவிடுகிறது. இதைத் தெலுங்கு தேசத்தவர்கள் பின்பற்றுவதால் தெலுங்கு வருஷப்பிறப்பு (ஸம்வத்ஸராதி) என்றும் சொல்லுவார்கள். ஸூர்யன் ஒவ்வொரு ராசியில் ஸஞ்சரிக்கத் தொடங்கும்போது மாதம் பிறப்பதாகக் கொள்வது மற்றொரு கணக்கு. ஸூர்யனின் ஸஞ்சாரத்தைக் கொண்டு கணக்கிடப்படுவதால் இது 'ஸௌரமானம்' எனப்படும். இதன்படி ஸூர்யன் மேஷராசியில் ஸஞ்சரிக்கத் தொடங்கும் நாள் சித்திரை மாதமும், புதுவருஷமும் பிறக்கிறது. இதைத் தமிழ்நாட்டவர்கள் பின்பற்றுவதால் தமிழ் வருஷப்பிறப்பு என்று சொல்லுகிறோம். ஸ்ரீராமநவமியையும் சாந்த்ரமான ரீதியில் கொண்டு சிலரும், ஸௌரமான ரீதியில் கொண்டு சிலரும் கொண்டாடுவதால் இவ்வேறுபாடு ஏற்படுகிறது.

கே. எஸ். ஸ்ரீநிவாஸ ஐயர், ஸ்ரீரங்கம்.

*21. துர்க்கை என்ற தெய்வம் சிவபெருமானைச் சேர்ந்ததா? விஷ்ணுவைச் சேர்ந்ததா? துர்க்கையிலும் 'விஷ்ணு துர்க்கை' என்று ஒன்று உண்டு என்று கூறுகிறார்களே; அது எப்படி?*

துர்க்கை சிவனுடைய பத்னி என்று புராணங்கள் கூறுகின்றன. ஆயினும் அவள் மற்ற தெய்வங்களைப்போல் விஷ்ணுவுக்கு வசப்பட்டவள். கிருஷ்ணாவதாரம் எடுப்பதற்கு முன்பு நாராயணன் துர்க்கையை அழைத்து அவளை யசோதைக்குப் பெண்ணாகப் பிறக்கும்படி கட்டளை இட்டதாகவும், அதற்கு அவள் கீழ்ப்படிந்து யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்ததாகவும் பாகவதம் கூறுகிறது. திருக்கோவலூரில் இவள் காவல்தெய்வமாக இருப்பதை "கற்புடைய மடக்கன்னி காவல்பூண்ட பூங்கோவலூர்" [திருநெடு-7] என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தார். துர்க்கை ஒருத்தியே சிவனுக்குப் பத்தினியாகையால் சிவதுர்க்கையாகவும், விஷ்ணுவின் ஆணைப்படி யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்து, கண்ணனுக்குத் தங்கையாக ஆனதால் விஷ்ணுதுர்க்கையாகவும் ஆகிறாள்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம். (22, 23 கேள்விகள்)

*22. "இந்துமதம்" "ஹிந்துமதம்" என்று இன்று வழங்கப் படும் மதத்தின் ஆதிகாலநிலையையும் பரிணாம வளர்ச்சிகளையும் விளக்கவேண்டுகிறேன்.*

ஆதிகாலத்தில் வேத₃ங்களை மூலப்ரமாணமாகக்கொண்ட தாகையாலே 'வைதி₃கமதம்' என்று இது பெயர் பெற்றிருந்தது. இதிஹாஸ புராணங்களில் ரிஷிகள் இதை விளக்கினார்கள். நெடுங்காலமாக வைதி₃கர் அனைவராலும் கையாளப் பட்டுவரும் உபநிஷத்துக்கள், மனு முதலான ஸ்ம்ருதிகள், ஸ்ரீராமாயணம், மஹாபா₄ரதம் என்னும் இரு இதிஹாஸங்கள், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலான ஸாத்விகபுராணங்கள் ஆகியவற்றை ஆராயும்போது, இந்த மதத்தில் திருமால் ஒருவனை பரம்பொருளாகக் கொள்ளப்பட்டான் என்றும், மற்ற தெய்வங்கள் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்களாய், அவனது ஏவலைச் செய்பவர்களாக அனைவராலும் இசையப்பட்டார்கள் என்றும் விளங்குகிறது. சங்ககாலத் தமிழ்நூல்களை ஆராய்ந்தாலும் இந்நிலை மிகத் தெளிவாகத் தெரிகிறது. இதை நிலை நாட்டியிருக்கும் நமது 'சங்ககாலத் தமிழர்சமயம்' எனும் நூலை எவராலும் மறுக்கமுடியாமலிருப்பதிலிருந்தே இவ்வுண்மையை உணரலாம். ஆதி₃காலத்தில் பௌ₃த்₃த₄ம், ஜைனம், நையாயிகம், வைஶேஷிகம், ஸாங்க்₂யம், யோக₃ம் முதலான பா₃ஹ்ய (வேத₃த்துக்குப் புறம்பான) மதங்கள் இந்த வைதி₃கமதத்தின்மேல் பலவகையான ஆக்ஷேபங்களை எழுப்பின. பா₃த₃ராயணர் (வேத₃வ்பாஸர்) தமது ப்₃ரஹ்ம ஸூத்ரத்தில் அவற்றுக்கெல்லாம் தினவடங்க பதிலுரைத்து, இந்த வைதி₃கமதத்தை நிலைநாட்டினார். வேத₃வ்யாஸருடைய ஶிஷ்யரென்று புகழ்பெற்ற போ₃த₄யனர் ப்₃ரஹ்மஸூத்ரத்துக்கு வ்யாக்₂யானமாக வ்ருத்தி க்₃ரந்த₂மெழுதி இந்த வைதி₃க மதத்தைப் பரப்பினார். அவருக்குப்பின் டங்கர், த்₃ரமிட₃ர் முதலான பலர் நூல்களை எழுதி இதைப் பிரசாரம் செய்தார்கள். த்₃ரமிட₃ர் என்பவர் தமிழ்நாட்டில் வாழ்ந்தவர். இவர் ப்₃ரஹ்மஸூத்ரத்துக்கு பா₄ஷ்யமெழுதி இம்மதத்தைப் பரப்பினார். இவர் வாழ்ந்த காலம் சங்ககாலமாகவே இருக்க

வேண்டும். சங்க நூல்களில் முக்கோற்பகவர்களைப் பற்றிப் பேசப்பட்டிருப்பதும், விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதமே அனைவராலும் ஏற்கப்பட்டிருப்பதும் இதற்குச் சான்று. சங்ககாலத்துக்குப் பிறகு பா₄ரததே₃ஶம் முழுவதும், பௌ₃ளத்₃த₄மும் ஜைனமும் மறுபடி தலையெடுக்கத் தொடங்கின. ஆழ்வார்கள் தமது தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் அவற்றைக் கண்டித்திருப்பதிலிருந்தும், பின்பு தோன்றிய ஆதி₃ஶங்கரர் முதலான மதாசார்யர்களும், சைவ நாயன்மார்களும் அவற்றை மறுத்திருப்பதிலிருந்தும் இதை உணரலாம். ஆழ்வார்களுக்குப் பின்பு ஆதிசங்கரர் தோன்றி, உபநிஷத்து முதலான ப்ரமாணங்களுக்கு வேறு பொருள் கூறி, ''கு₃ணம் முதலான எதுவுமற்ற அறிவுமாத்ரமான ப்₃ரஹ்மம் ஒன்றே மெய், மற்ற உலகனைத்தும் பொய்த்தோற்றம்'' என்னும் அத்₃வைத மதத்தைப் பரப்பினர். இது பா₄ரததே₃ஶமெங்கும் காடாக வளர்ந்து வைதி₃கமதப் பயிருக்குக் களையாய் நின்றது. வைதி₃கப் போர்வையிலே இந்த மதப் பிரசாரம் செய்யப்பட்டதனால் ஏராளமானவர்கள் இதில் மயங்கினார்கள். தமிழ்நாடு முதலான சில பகுதிகளில் நாயன்மார்கள் போன்ற ஶிவ ப₄க்தர்கள் 'ஶிவனே பரம்பொருள்' என்னும் ஶைவமதத்தை உருவாக்கிப் பரப்பினார்கள். உபநிஷத்துக்களிலும், இதிஹாஸங்களிலும், ஸாத்விக புராணங்களிலும், சங்ககாலச் சான்றோர்கள், காளிதாஸன் முதலான தென்மொழி வடமொழிக் கவிஞர்களின் நூல்களிலும் காணப்படாத 'அடிமுடி தேடிய கதை' முதலான பற்பல பொய்க்கதைகளைக்கொண்டு இவர்கள் ஶிவ பரத்வம் ஸாதிக்க முற்பட்டனர். ஆழ்வார்கள் காலத்திலேயே பௌ₃ளத்₃த₄, ஜைன சமயங்களைப்போலே, சைவ மதமும் வைதி₃க மதப்பயிருக்குக் களையாக முளைத்துவிட்டது என்பது தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களிலிருந்து விளங்குகிறது. 'இப்படி வைதி₃க மதத்தைச் சீர்குலைத்து வருகிறார்களே!' என்று மனம் நொந்து போன நாத₃முனிகள் நம்மாழ்வாரிடமிருந்து யோகத₃ஶையில் தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும், வைதி₃கத₃ர்ஶன ரஹஸ்யார்த்த₂ங்களையும் பெற்று, உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆளவந்தார், அவரது ஶிஷ்யர்கள் மூலமாக ஸ்ரீராமாநுஜராகிற எம்பெருமானாரிடம் இந்த அர்த்த₂ங்களைச் சேர்த்த பின்பே அநாதி₃வைதி₃க

மதத்திற்கு நல்லகாலம் பிறந்தது. ஸ்ரீபா4ஷ்யாதி3 க்3ரந்த2ங்கள் மூலமும், பா4ரததே3ஶமெங்கும் பலகால் ஸஞ்சாரம் செய்து, ப்3ராஹ்மகுத்3ருஷ்டி வித்3வான்களை வெற்றி கொண்டதின் மூலமும் யதிராஜர் வைதி3கமதத்தை அசைக்கமுடியாதபடி நிலைநாட்டினார். அவர் காலத்தில் பெரிய அத்3வைத வித்3வானாயிருந்த யஜ்ஞமூர்த்தியும், அவருக்குப்பின் அத்3வைதிகளின் தலைவராயிருந்த மேல்நாட்டு வேதா3ந்தியும் முறையே யதிராஜராலும், ப4ட்டராலும் வெற்றி கொள்ளப்பட்டு, வைதி3க த3ர்ஶனத்தைத் தழுவினர். ப4ட்டர் காலத்தையொட்டிப் பிறந்த மத்4வாசார்யரும் விஶிஷ்டாத்3வைத மதத்திலிருந்து சிறிதுவேறுபட்ட த்3வைத மதத்தை ஸ்தா2பித்தபோதிலும், "நாரணனே பரம்பொருள், மற்ற தெய்வங்கள் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள், உலகனைத்தும் உண்மை" என்னும் கொள்கைகளை நிலைநாட்டி அத்3வைத மதத்தையும், ஶைவ மதத்தையும் தலையெடுக்கமுடியாதபடி க2ண்டி3த்தார். விஶிஷ்டாத்3வைதத்தையும், த்3வைதத்தையும் சேர்ந்த பின்வந்த ஆசார்யர்களும் இப்பணியைத் தொடர்ந்து தீவிரமாக நடத்தினார்கள். ஶைவர்கள் க்ருமிகண்ட2னைக்கொண்டு விஷ்ணுகோயில்களையும் மதிள்களையும் இடித்தும், கட்டாயக் கையெழுத்து வாங்கியும் வைஷ்ணவத்தை அழிக்கமுற்பட்டது பயனற்றுப்போயிற்று. ஶைவர்கள் தங்களுடைய ஸித்3தா4ந்தமே நன்கு உருப்பெறுமலிருப்பதைப் பார்த்து 'சிவஞானபோதம், சிவஞானசித்தியார்' முதலான தமிழ்நூல்களை எழுதி, ஶைவஸித்3தா4ந்தத்தை உருவாக்கினர். "நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்று தலைசிறந்த இலக்கணநூலைச் சங்ககாலத்தில் எழுதிய தொல்காப்பியர் வகுத்த ஸந்யாஸிலக்ஷணத்துக்கு முரண்பட்ட பண்டார சன்னிதிகளைத் தலைவர்களாகக்கொண்ட சைவாதீனங்களும் அரசாங்க பலத்துடன் தோன்றின. ஆதிஶங்கரர் காலத்திலிருந்து வ்யாவஹாரிக நிலையில் நாராயணனையே ஸகு3ண ப்3ரஹ்மமாகக் ஏற்றுக்கொண்டிருந்த அத்3வைதிகளும் — விஶிஷ்டாத்3வைதிகளும், த்3வைதிகளும் அத்3வைதமதத்தைக் கடுமையாகச் சிதைத்துவிட்டதைக் கண்டு கடுங்கோபமுற்று, விஶிஷ்டாத்3வைதி த்3வைதிகளுக்கு உயிர்நாடியான விஷ்ணுபரத்வத்தை மறுக்க

முற்பட்டு, நீறுபூசிய சைவர்களாக மாறத் தொடங்கினர். ஆதிசங்கரரின் பெயரில் பல மடங்களை ஸ்தாபித்து, பல தெய்வங்களைப் பற்றிய பல துதிநூல்களை அவர் பெயரில் எழுதிவைத்து, அத்வைத மதஸ்தாபகரான அவரை அவர் கனவிலும் கருதாத சைவம், சாக்தம் முதலான மதங்களை உள்ளடக்கிய ஷண்மதஸ்தாபகராக ஆக்கிவிட்டனர். கால க்ரமத்தில் அத்வைதிகளும், சைவர்களும் ஒன்று சேர்ந்து ஷண்மத தெய்வங்களாகிற ஆறு தெய்வங்களுக்கு மாத்திரமல்லாமல் எல்லா தெய்வங்களுக்கும் பரத்வம் சொல்லத் தலைப் பட்டனர். இந்த இருபதாம் நூற்றுண்டில் அரசியல்வாதிகள் 'சாதிமதங்கள் எல்லாவற்றையும் ஒழிக்கவேண்டும்' என்று கூக்குரலிடத் தொடங்கினர். இதைத் தங்களுக்கு ஸாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு, ஆதிசங்கரரின் அத்வைதத்தை விட்டு வெகுதூரம் விலகி, "எல்லா தெய்வங்களும் பரம் பொருளின் உருவங்களே, எதைவேண்டுமானுலும் கும்பிடலாம்" என்ற ஒரே கொள்கையைப் பற்றி நிற்கின்றனர் இக்கால அத்வைதிகள். வயிற்றுப் பிழைப்பையே முக்யமாகக் கொண்ட பாமரமக்களுக்கு இக்கொள்கை மிகவும் உகந்ததாயிருக்கிறது. சைவத்தையும், வைணவத்தையும் அழிப்பதற்காக—சைவம், வைணவம் என அழைக்கப்பட்டுவந்த நமது இரு பெரியமதங்களுக்கு, (வெளிநாட்டானிட்ட) 'இந்துமதம்' என்னும் பொதுப்பெயர் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டுவிட்டது. "எம்மதமும் சம்மதம்; எல்லா தெய்வமும் ஒன்றே என்பதே இந்துமதம்" என்று வயிற்றுப் பிழைப் பையே முக்கியமாகக்கொண்ட அரசியல்வாதிகளும், பொது ஜனப் பத்திரிகைகளும், அத்வைதிகளும், அத்வைத சைவ உபந்யாஸகர்கள் பலரும், அத்வைதிகளால் விலைக்கு வாங்கப் பட்ட சில வைஷ்ணவ வித்வான்களும் பரப்பத் தொடங்கி விட்டனர். இதனுல் ஆதிகாலத்தில் ஒன்றுயிருந்த நம் வைதிக மதம் விரும்பத் தகாத பல பரிணும வளர்ச்சிகளைப் பெற்று, ஊதுகாமாலை வியாதியால் உப்பிக்கிடக்கும் மனிதனைப்போலே வெளித்தோற்றத்துக்கு ஒரு பெரியமதமாகக் காட்சியளித்துக் கொண்டு, உள்ளே வலிமையற்றதாய் விளங்குகிறது. பாலுணர்வை வளர்க்கும் 'ரஜனீஷின் கொள்கையும், பலவகை

லோகாயதவாதங்களும் 'இந்துமதம்' எனும் பெயரில் பிரசாரம் செய்யப்படுகின்றன. அதனால் நாஸ்திகர்களுக்கும், கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர் முதலான புறமதத்தவர்களுக்கும் இந்துக்களை மதம்மாற்றுவது மிக எளிதாகிவிட்டது. இதுவே ஆதிகாலத்தில் ஒன்றாயிருந்த வைதிகமதம் பல பரிணாம வளர்ச்சிகளைப் பெற்று இன்று 'இந்துமதம்' என்று அழைக்கப்படும் சோகக் கதையாகும்.

*23. 'இந்து மதத்துக்குப் பொதுவான மூலநூல் அல்லது நூல்களை உருவாக்கவேண்டும்' என்றும், 'பொதுவான மந்திரம் ஒன்றை Codify செய்யவேண்டும்' என்றும் காமகோடி பீடாதிபதி 'ஞானபூமி'யில் மணியனுக்குக் கட்டளையிட்டிருப்பது பற்றித் தங்கள் கருத்தைத் தெரிவிக்கவேண்டுகிறேன்.*

இக்கருத்து சமீபத்தில் இலங்கையில் நடந்த அகில உலக இந்து மாநாட்டில் மதுரை காமராஜர் பல்கலைக் கழக (முன்னாள்) துணைவேந்தர் வ. சுப. மாணிக்கனார் தெரிவித்ததேயாகும். அவர் தெரிவித்த கருத்தில் 'எல்லா தெய்வங்களின் உறுப்புக்களும் அடங்கிய ஒரு பொதுவான கடவுள் பொம்மையை உருவாக்கவேண்டும்' என்னும் அற்புதமான (!) ஆலோசனையை என்ன காரணத்தினாலோ கைவிட்டுவிட்டு, மற்ற ஆலோசனைகளைக் கைக்கொண்டு காமகோடி பீடாதிபதி மணியனுக்கு ஆணையும் பிறப்பித்துவிட்டார். வேதவ்யாஸர் அரும்பாடு பட்டுப் பலவகையாகப் பிரித்துப் பிரசாரம்செய்த வேதங்களும், மஹாபாரதம் முதலான நூல்களும் நம்நாட்டின் தௌர்பாக்யத்தாலே 'நடமாடும் தெய்வ'மான காமகோடி பீடாதிபதியின் கண்ணில் படவில்லை. அதனால் பாலுணர்வுப் பத்திரிகை நடத்தும் மணியனைக் கலிகால வேதவ்யாஸராக்கி, இந்துமதத்துக்கு மூலநூல்களையும் மந்திரத்தையும் உருவாக்கக் கட்டளையிட்டுவிட்டார்! மணியன் 'ஞானபூமி'யின்மூலம் தனக்குப் பாமர ஆஸ்திகமக்களிடையே இருக்கும் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு சின்மயாநந்தர், வாரியார் போன்ற கலிகால மதத்தலைவர்களைக்கொண்டு, சில மத நூல்களையும், மந்திரத்தையும் உருவாக்கினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் இத்தகைய முயற்சிகளால் இந்து மதத்தை ஒன்றாக்க முடி

யாது; இவர்கள் உருவாக்கும் மதநூல்களையும் மந்திரத்தை யும் அனைவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்; இந்துமதம் என்னும் பெயரில் இன்று உலவிவரும் பலமதங்களோடு இது வும் ஒரு புதுமதமாக நிற்கும். 'இந்து மதத்தை ஒன்றுக்க முடியுமா' என்னும் தலையங்கத்தில் இதுபற்றி மேலும் பல விளக்கங்களும் நம்மால் அளிக்கப்பெற்றிருக்கின்றன. இந்துக்கள் அனைவரும் ஒற்றுமையாயிருப்பதற்கு உண்மையான வழியும் காட்டப்பட்டுள்ளது. வைதிக மதத்தையே அடியோடு உருக்குலைக்கக்கூடிய இந்த ஆலோசனையை வெளியிட்டி ருக்கும் "ஞானபூமி"யில் ஏராளமான பொருட்பிழைகள் மலிந்திருக்கின்றன என்பதை "ஞானபூமியைக் குறித்துச் சில கேள்விகள்' என்னும் தலையங்கத்தில் சுட்டிக்காட்டியுள்ளோம். துந்துபி ஆடி (416) இதழில் வெளிவந்துள்ள இத்தலையங் கங்கள் ஸுதர்சனர் பதில் ஏழாவது பாகத்தின் அனுபந்த மாக இணைக்கப்படும்.

R. மணவாளன், திண்டிவனம்.

*24. 'ஸ்ரீமஹாபாரதத்தை வியாஸர் சொல்லக்கேட்டுத் தன் கொம்பில் ஒன்றை ஒடித்து மேருமலையில் கணபதி எழுதினார்' என்றும், 'ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸ்ரீரங்கவிமானத்தை எடுத்துச் செல்லும்போது, மலஜலம் கழிப்பதற்காக கணபதியின் கையில் கொடுத்துச் செல்ல, அவர் ரங்கவிமானத்தைக் கீழே வைத்துவிட்டு, ஓடிச்சென்று திருச்சி மலைக்கோட்டையின்மேல் உச்சிப்பிள்ளையாராக அமர்ந்துவிட்டார்' என்றும் சிலர் கதை சொல்லுகிறார்கள். ஆதாரம் கேட்டால் மழுப்புகிறார்கள். இக் கதைகளுக்கு ஆதாரம் உண்டா?*

மஹாபாரதம் ஆதிபர்வத்தில் பாரதம் தொடங்கும்போது பிள்ளையாரைப் பற்றிய பேச்சே இல்லை. ஆகையால் இதற்காக ஒரு புராணத்தைக் காட்டினாலும், அது பிற்காலக் கற்பனை யாகவே இருக்கும். ஸ்ரீரங்கவிமானத்தையும் பிள்ளையாரை யும் ஸம்பந்தப்படுத்திப் பாமரஜனங்கள் வழங்கும் கதையும் ஸ்ரீரங்கமாஹாத்ம்யம் முதலான எந்த நூலிலும் காணப்பட வில்லை. பிள்ளையாரைப் பற்றிய பிரஸ்தாவமே சங்கநூல்கள், மற்ற பழைய காவியங்கள் முதலிய எதிலும் இல்லை என்றும்,

ஏழாவது நூற்றுண்டுக்குப் பிற்பட்ட நூல்களிலேயே பிள்ளையார் காணப்படுகிறார் என்றும் பல ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இதுபற்றி நாம் ஏற்கனவே ஸுதர்சனர் பதிலில் (5-வது சதகம் 89) எழுதியிருக்கிறோம்.

ப. ல. பட்டர் ராமாநுஜம், சேலம் 3.

***25.*** ***மதுரகவியாழ்வாரையும் ஆண்டாளையும் தவிர மற்ற ஆழ்வார்கள் தங்களுக்கு முந்திய ஆழ்வார்களைத் தமது தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களில் ஏன் திருநாமத்தைக் குறித்துப் பாடவில்லை?***

'கு₃ரும் ப்ரகாஶயேத்₃தீ₄மாந்'' [ஆசார்யனை அறிவாளியா யிருப்பவன் வெளிப்படுத்த வேண்டும்] என்று ஶாஸ்த்ரவிதி₄ இருப்பதால் மதுரகவியாழ்வாரும் ஆண்டாளும் தங்கள் தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் நம்மாழ்வாரையும், பெரியாழ்வாரையும் பேரிட்டுக் குறித்தார்கள். தமக்கு முந்திய ஆழ்வார்களைத் தம் ஸ்வாமிகளாக நினைத்தமையாலே 'ஸ்வாமியின் பெயரை தா₃ஸபூ₄தன் சொல்லுவதில்லை' என்னும் வழக்கையொட்டி, திருநாமத்தையிட்டுக் குறிக்காமல் ''செந்தமிழ் பாடுவார்' [பெரியதிரு 2-8-2] ''பாலேய் தமிழர்'' [திருவாய் 1-5-11] ''செஞ்சொற்கவிகாள்'' [திருவாய் 10-7-1] ''ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூரும் அடியவர்'' [பெரியதிரு 2-10-4] ''அடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும் தொண்டர்'' [பெரு-திரு 2-2] என்று பல விடங்களில் முந்திய ஆழ்வார்களை மிகுந்த மதிப்புடன், பிந்திய ஆழ்வார்கள் குறித்திருக்கிறார்கள். ஆகையாலே குறையில்லை. கணவன் பெயரை மனைவி சொல்லுவதில்லை என்னும் வழக்கைப் போன்றது இது என்று கொள்வது.

ஸ்ரீராமாநுஜன், கரூர். (26 — 29 கேள்விகள்)

***26.*** ***தென்கலைத் திருமண்காப்பு வேதத்தில் எங்கு சொல்லப்பட்டிருக்கிறது?***

நம்முடைய 'விஷ்ணுசித்தவிஜயம்' முதல் அத்தியாயம் இரண்டாம்பாகம் 1103-ம் பக்கம் முதல் 1112-ம் பக்கம் முடிய, பல உபநிஷத்துக்களிலிருந்து ஊர்த்₄வபுண்ட்₃ர ப்ரமாணங்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

*27. பிராட்டியிடம் காகாசுரன் செய்த பாகவதாபசாரம் எம்பெருமானைச் சரணமடைந்ததால் எப்படி நீங்கிற்று ?*

காகாஸுரன் ராமபிரான் முன்பு தலைதடுமாறி விழுந்த போது, ஸீதாப்பிராட்டியே அவனைத் தானும் மன்னித்து, எம்பெருமானும் மன்னிக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே அவனுடைய தலையை ஸ்ரீராமபிரானுடைய திருவடியிலே இட்டாள். (இவ்விஷயம் பாத்₃மபுராணத்தில் உள்ளது.) இதனாலே அவனுடைய பா₄க₃வதாபசாரம் நீங்கிற்று.

*28. "இவ்வுலகில் பிறந்த அனைவரும் ஒரு காலத்தில் மோக்ஷம் அடைவது உறுதி" என்று வேத₃ம் கூறும்போது கைவல்யநிஷ்டனுக்குக் கைவல்யத்திலிருந்து மீள வழி இல்லை என்பது எப்படிப் பொருந்தும் ?*

"இவ்வுலகில் பிறந்த அனைவரும் ஒரு காலத்தில் மோக்ஷமடைவது உறுதி" என்று எந்த வேத₃மும் கூறவில்லை. கைவல்யமும் விரஜைக்கு அப்பால் சென்று ஸூக்ஷ்மசரீரம் கழியப்பெற்று, தன் ஆத்மாவைத் தானே அநுப₄விக்கும் தாழ்ந்த மோக்ஷமேயாகும். அந்திமஸ்ம்ருதிபர்யந்தம் ப₄க₃வதநுப₄வத்தை விரும்பாமல் ஆத்மாநுப₄வத்தையே விரும்புகையால், இவனுக்கு எப்போதும் ப₄க₃வத₃நுப₄வம் கிட்டுவதில்லை. இவ்விஷயம் நமது 'கைவல்யநிர்த₃லநம்' எனும் நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

*29. வடமொழி அறிவு மக்களிடையே குறைந்துவரக்கண்ட ஆழ்வார்கள் வேதஸாரத்தைத் தமிழில் அருளிச்செய்திருக்க, வ்யாக்யானங்கள் மணிப்ரவாள நடையில் அமையக் காரணம் என்ன?*

ஆழ்வார்களுடைய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் ஶ்ருதி ஸ்ம்ருதிகளின் ஸாரம் என்பதை நிலைநாட்டுவதற்கு, ஆசார்யர்கள் ஏராளமான ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களையும் மற்ற வடமொழி நூல்களையும் மேற்கோளாகக்காட்டி, மற்றும் பல ஶாஸ்த்ரவிஷயங்களையும் எடுத்துக்காட்டி விரிவுரை எழுதவேண்டியிருந்தபடியால், அக்காலத்தில் கற்றவர்களிடையே ப்ரப₃லமாயிருந்த மணிப்ரவாளநடையில் வ்யாக்₂யானங்கள் அமைந்தன. தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களை வடமொழி அறிவு இல்லாதவர்களும் பாராயணம் செய்யலாம். அவற்றின் பொருளை—கசடறக்கற்றவர்களிடமிருந்து வ்யாக்₂யானங்களைக் கேட்டே அறியவேண்டும்.

L. ஸ்ரீநிவாஸன், புதுடில்லி-5.

*30. 24-வது கேள்வியின் பதிலில் "மஹாபாரதம் தொடங்கும்போது பிள்ளையாரைப் பற்றிய பேச்சே இல்லை" என்று எழுதியிருக்கிறீர்கள். கோரக்பூரில் வெளியிட்ட மஹாபாரதத்தில் முதல் அத்தியாயத்தில் 74 முதல் 80ம் சுலோகம் வரை பிள்ளையார் பாரதம் எழுதிய செய்தி உள்ளது. தங்கள் பதில் எதை ஆதாரமாகக் கொண்டது என்று விளக்க வேண்டுகிறேன்.*

மஹாபா₃ரதம் நம்நாட்டில் நெடுங்காலமாக ஆயிரக்கணக்கான பண்டிதர்களால் கையாளப்பட்டு வந்ததாகையாலே, ஏராளமான ப்ரக்ஷேப உத்க்ஷேபங்கள் (இடைச்செருகல் எறிதல்கள்) அதில் ஏற்பட்டு விட்டன. அதனால் பதிப்புக்குப் பதிப்பு ஏராளமான வேறுபாடுகள். திருக்குடந்தையில் வெளியிடப்பெற்ற க்ரந்த லிபிப் பதிப்பின் வ்யாக்யானத்தில் பிள்ளையாரைப் பற்றிய இந்த ஶ்லோகங்கள் ப்ரக்ஷிப்தம் (இடைச்செருகல்) என்று குறிக்கப்பெற்றுள்ளது. நூற்றுக்கணக்கான சுவடிகளை ஆராய்ந்து இவ்விடைச்செருகல் எறிதல்களையெல்லாம் களைந்து, மஹாபாரதத்துக்கு ஒரு சுத்தமான பதிப்பை வெளியிடும் முயற்சி 1933ம் வருஷத்தில் "பூனா பண்டார்கார் ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்" என்னும் ஸ்தாபனத்தால் தொடங்கப்பெற்றது. அருமையான அப்பதிப்பில் ஆதிபர்வத்தின் முதல் அத்தியாயத்தில் பிள்ளையாரைப்பற்றிய பேச்சே இல்லை. அநுக்ரமணியை (அட்டவணையை)ச் சொல்ல வந்த அத்தியாயத்தின் நடுவில் இந்தப் பிள்ளையார் கதையைச் சிலர் நுழைத்து விட்டார்கள் என்பது முன்பின் சுலோகங்களைப் பார்த்தாலே விளங்குகிறது.

R. பார்த்தசாரதி, சென்னை-80.

*31. ஆழ்வார்கள், நாயன்மார்களுக்கு வைஷ்ணவ சைவ ஆலயங்களில் இடம் இருப்பதுபோலே ஆதிசங்கரருக்கு ஏதாவது ஆலயத்தில் இடமுண்டா?*

"உலகம் பொய்; ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது" என்னும் கொள்கையைப் பரப்பிய ஆதிசங்கரர் ஆலயங்களோடு எந்தத் தொடர்பும் கொண்டிருக்க நியாயமில்லை. அவர் தமது பா₄ஷ்யங்களில் பல இடங்களில் "ஸாலக்₃ராமசிலையில் 'விஷ்ணு'

என்னும் பு₃த்₃தி₄ ஏற்படப்படுகிறது'' என்று எழுதியிருக்கிருர். ஆகையால், ஆலயங்களில் விக்₃ரஹாராத₄னையை அவர் ஆதரிக்க வில்லை என்று எளிதில் உணரலாம். ப்₃ரஹ்மஸூத்ரபா₄ஷ்யத்தில் ஆலய வழிபாட்டுக்குரிய சைவ வைஷ்ணவ ஆகமங்கள் இரண்டையுமே வேத₃விருத்₃த₄ம் என்று ஆதிசங்கரர் கண்டித்திருப்பது ஆலயவழிபாட்டோடு அவர்க்குத் தொடர்பில்லை என்பதை வலியுறுத்துகிறது. இக்காரணத்தாலேயே சைவ வைஷ்ணவ ஆலயங்கள் எதிலுமே ஆதிசங்கரர் சிலை காணப் படவில்லை. சில நூற்றுண்டுகளுக்குள் அத்வைதிகளிற் பெரும்பாலானவர்கள் சைவர்களாக மாறியபின் அரசாங்க பூலத்தாலே சில சிவன்கோவில்களில் சாங்கரபீடாதிபதிகள் சில உரிமைகளைப் பெற்றனர். அப்படியும் ஆதிசங்கரரின் சிலையை வைப்பதற்கு சைவர்கள் இடம்கொடுக்கவில்லை. 14—7—82 தினமலரில் 3-ம் பக்கத்தில் "திருவானைக்கோவிலில் ஆதிசங்கரர் சிலைவைக்க சைவர்குழு கடும் எதிர்ப்பு'' என்னும் தலைப்பிலுள்ள செய்தி இதை வலியுறுத்துகிறது. காமகோடி சிறிய பீடாதிபதி திருவானைக்கோவில் சிவாலயத்தில் அம்மன் க₃ர்ப்ப₄கிருஹத்தில் ஆதிசங்கரர் சிலையைப் பிரதிஷ்டைசெய்ய ஆலோசனை சொன்னதாகவும், அவ்வண்ணமே சிலையும் கோவிலுக்குள் கொண்டுவரப்பட்டுவிட்டது என்றும், பல சைவ சித்தாந்த சங்கங்களும் சைவ மதத்தலைவர்களும் கூட்டம்கூடி "திருவானைக்காவல் திருக்கோவிலில் சிவாகமத்துக்குப் புறம்பாக, புறச்சமயத்தின் ஆசாரியரான ஆதிசங்கரரின் உருவச்சிலையை வைப்பது பொருந்தாததாகும். முறையான சைவநெறியில்நிற்கும் பக்தர்களின் மனத்தைப் புண்படுத்துவதுமாகும்'' என்று தீர்மானம் நிறைவேற்றியதாகவும் இச்செய்தி கூறுகிறது. இதிலிருந்து ஆதிசங்கரருக்கு எந்தக் கோவிலிலும் இடம் இல்லை என்று விளங்குகிறது. இந்தக் குறைதீர காமகோடி பெரியபீடாதிபதி தம் சிஷ்யரான மு. ஸ்ரீ. வரதரைக்கொண்டு கட்டிய அஷ்டலக்ஷ்மிகோவிலின் விமானத்தில் ஆதிசங்கரருக்குச் சிலைவைத்து விட்டார் ஆனாலும் பழமையான ஆலயங்கள் எதிலும் ஆதிசங்கரர் புகவில்லை. சைவ வைஷ்ணவர்கள் புகவிடவும் மாட்டார்கள் என்பது தெளிவு.

S. R. பாலசுந்தரம், கோவை-20.

*32. '82 ஆகஸ்ட் ஸப்தகிரி இதழில் 'நஜன்' என்பவர் "விநாயகரது திரு உருவ விளக்கம்'' என்ற தலைப்பில்*

*'பிள்ளையார் உருவம் கட்டைவிரல் அளவு உள்ளவராகவே இருக்கிறார். மனிதர்களின் ஹிருதயம் அவரவர்களின் கட்டை விரல் அளவுள்ளதாகும். அந்த அளவை அதனில் இருக்கும் ஆத்ம ஸ்வரூபத்தில் உள்ளதாக கடோபநிஷத் 'அங்குஷ்ட மாத்ர: பிருஷ:' என்று கூறியிருக்கிறது. என்று எழுதியிருக்கிறார். இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

''*அங்கு₃ஷ்ட₂மாத்ர: புருஷ:*'' [கட₂ 2-4-12] என்னும் உபநிஷத்₃ வாக்யத்தில் புருஷ: என்று சொல்லப்பட்டவன் புருஷ ஸூக்தத்தில் லக்ஷ்மீநாத₂னாக முழங்கப்பட்ட நாராயணனே யாவான். கட்டைவிரல் அளவுள்ளது அவன் திருமேனி. இதுவே அந்தர்யாமிரூபம் எனப்படும். இதுபற்றி ப்₃ரஹ்ம ஸூத்ரத்தில் விசாரித்து, இவன் பரமபுருஷனே என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இது எதையும் கற்காத 'நஜன்' போன்றவர்கள் மனம்போனபடி எழுதும் ஸப்தகிரிக் கட்டுரைகளை நாம் பொருட்படுத்தாமலிருப்பதே நல்லது. வேதாந்தங்களில் ஆத்மாவை அணுஸ்வரூபம் என்று பல இடங்களில் கூறியிருக்கும்போது, ஆத்மஸ்வரூபம் கட்டைவிரல் அளவுள்ளது என்று 'நஜன்' எழுதுவதிலிருந்து அவர் வேதாந்தஜ்ஞானமில்லாதவரெனத் தெரிகிறது. யானைமுகத்தையும், யானை போல் பெரியஉருவத்தையும் உடைய பிள்ளையாரை ஓராதாரமுமில்லாமல், 'கட்டைவிரலளவே இருக்கிறார்' என்று எழுதுவது சிரிக்கத்தக்கதாயிருக்கிறது.

V. ஶ்ரீநிவாஸன், ஶ்ரீரங்கம்.

*33 ஆகஸ்ட் '82 கலைமகளில் ''கோவில்கள் மணக்கின்றன'' என்னும் தலைப்பில் ''கோவி. மணிசேகரன்'' எழுதியுள்ள சரித்திரச் சிறுகதையில் வைஷ்ணவ த்₃வேஷ ப்ரசாரமும், தமிழ் வடமொழி நிந்தனையும் செய்யப்பட்டிருப்பதை ஸுத₃ர்சனர் பதில் மூலம் உலகுக்கு எடுத்துக்காட்ட வேண்டுகிறேன்.*

இக்கதையில் இக்கால அரசு தமிழ் அர்ச்சனையைப் புகுத்துவதைக் கண்டிப்பதற்காக, அக்காலத்தில் இதேபோல் ஒரு முயற்சி செய்யப்பட்டதாக வரலாற்றுக்கு முரணாக ஒரு கற்பனை கையாளப்பட்டிருக்கிறது. 'வைஷ்ணவ த்₃வேஷக் கதைகள் அடிக்கடி வரவேண்டும்' என்பது கலைமகளின் கொள்கையாகையாலே, இக்கதையில் அரசனுக்கு குருதேவராக வாசுதேவ நாராயண பிரமராயர் என்று ஓர் வைஷ்ணவரைக் கற்பித்து,

அவர் சிவன் கோவில்களில் தமிழ் அர்ச்சனையைக் கட்டாய மாகப் புகுத்த உத்தரவிட்டார் என்று இக்கற்பனைக்கதை கூறுகின்றது. அக்காலத்தில் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது என்பதற்குச் சரித்திரத்தில் எந்தச் சான்றும் கிடையாது. தமிழில் அர்ச்சனை செய்யவேண்டும் என்று அக் காலத்தில் எவரும் நினைத்ததுகூடக் கிடையாது இக்காலச் சூழ்நிலையை நெஞ்சிற்கொண்டு. அக்காலத்திலும் 'தமிழில் மந்திரம் ஓதப்படவேண்டும்' என்றும், 'அந்தணரல்லாதார் குருக்களாக இருக்கும் தகுதிகளைப் பெறவேண்டும்' என்றும் கிளர்ச்சி நடந்ததாகவும், அதை ஒரு வைஷ்ணவத் தலைவர் ஆதரித்ததாகவும் எழுதுவது—நடுநிலைநின்று சரித்திரச் சான்று களுக்கு முரணில்லாமல் சரித்திரக்கதை எழுதவேண்டிய ஓர் பிரபல சரித்திர நாவலாசிரியருக்கு அழகன்று. ஆதிசங்கருக்கும் கோவில்களுக்கும் தொடர்பிருந்ததாக வரலாற்றில் எந்தச் சான்றும் இல்லாமல் இருக்க ''ஆதிசங்கரர் வகுத்த அத்வைதம் பல ரகசியங்களை உள்ளடக்கியது'' என்று சம்பந்தமில்லாமல் ஆதிசங்கரரைப் புகுத்தியிருப்பதும் இக்கால அத்வைதிகளைத் திருப்திசெய்வதற்காகவே என்று விளங்குகிறது. ''ஸம்ஸ்கிருதம் எப்போதும் எந்தக் காலத்திலும் வழக்கில் இல்லாமல் செய்து விட்டவர்களே நம் முன்னோர்கள் தாம்......புரியாமல், புரிந்து கொள்ளமுடியாமல் இருப்பதனால்தான் அதனிடம் புனிதம் இருக்கிறது'' என்று இக்கதையின் நடுவில் எழுதியிருப்பது ஆசிரியர் தமது கொள்கைகளைச் சரித்திரகாலப் பாத்திரங்களின் மேல் ஏற்றிடுவதேயாகும். சோழ அரசர்களின் காலத்தில் ஸம்ஸ்க்ருதம் லக்ஷக்கணக்கான அறிவாளிகளால் பேசப்பட்டு வந்தது. வேதசாஸ்திரங்கள்பற்றி ஆயிரக்கணக்கான நூல்கள் வடமொழியில் எழுதப்பட்டு அனைவராலும் புரிந்துகொள்ளப்பட் டும் வந்தது. இந்த உண்மைக்கு முரணாக இக்கதையை எழுதி யிருப்பது ஸம்ஸ்கிருத நிந்தனையேயாகும். ''மன்னா போற்றி மகா தேவா போற்றி......இவ்வளவுதானே. எல்லார்க்கும் அது அத்துப் படி. எல்லாருமே குருக்களாகிவிடுகிறார்கள். அந்த வாய் கத்தரிக் காயைத்தான் சாப்பிடவேண்டும் என்பதில்லை. கருவாட்டை யும் சாப்பிடும் வாய்'' என்று தமிழ் அர்ச்சனை கேலி செய்யப் பட்டுள்ளது. தற்காலப் பிரச்னைகளைச் சரித்திர காலத்துக்கு ஏற்றும் வரலாற்றுக்கு முரணான இக்கதையைக் கலைமகள் வெளியிட்டது மிகவும் வருந்தத் தக்கது.

திருவாலி கிருஷ்ணஸ்வாமி, சென்னை-24.
க. இராசகோபாலன், சென்னை-11.

*34. செப்டம்பர் '82 ஞானபூமியில் வெளிவந்துள்ள ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமிகளின் பேட்டியில் (1) ''நானும் (ஜீயர் ஸ்வாமியும்) தருமபுரம் ஆதீனகர்த்தரும் பரஸ்பரம் நமஸ்காரம் செய்துகொள்வது வழக்கம்''. (2) ''சிவபெருமான் காப்பாற்றவும் வருவார்; பெருமாள் ஸம்ஹாரமும் செய்வார். விக்ந மில்லாமல் கார்யம் நடக்க விநாயகர், கல்விக்கு ஸரஸ்வதிதேவி, செல்வத்துக்கு லட்சுமிதேவி என்று வைத்துக்கொண்டிருக்கிறோம். தேவைக்கேற்பப் பூசையும் நடக்கிறது. அங்கம் வேண்டுமென்றால் சந்திரன், சக்திகிடைக்க ஸூர்யன். இப்படி க்ரஹங்களையும் வைத்து வணங்குகிறோம் அதற்குரிய பிரீதிகளைச் செய்கிறோம்'' என்று ஜீயர் ஸ்வாமிகள் பேசியதாக வெளிவந்துள்ளது. இவை ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்துக்குப் பொருந்துமா?*

ஜூலை '82 'ஞானபூமி'யில் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளின் பேட்டி வெளியிடப்பட்டிருந்தது. அதில் பற்பல தவறான விஷயங்கள் இருந்தன. அவை குறித்து ஆடி-மீ ஸுதர்சனத் தில் தலையங்கத்திலும் 23-வது கேள்வியிலும் குறிப்பிட்டு ஞானபூமியைக் குறித்துக் கேள்விகேட்டிருந்தோம். பேட்டி யில் பல பிழைகள் இருப்பதைக் குறிப்பிட்டு. திருத்தங்களை வெளியிடும்படி ஞானபூமிக்கு எழுதியதாகவும், 'அதற்கு யாதொரு பதிலும் இல்லை, திருத்தமும் வெளியிடவில்லை' என்றும் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி அநுக்ரஹத்தோடு வெளி வரும் ''*ஸ்ரீரங்கநாதபாதுகா*'' பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீஉ.வே. ஆடூர் மாதவாசார்யஸ்வாமி நம்மிடம் தெரிவித்தார். 'புதிதாக இந்துக்களுக்குப் பிரமாண நூலைக் கண்டுபிடிக்கவேண்டும்' என்றும், 'பொதுமந்திரத்தை ஒழுங்குபடுத்தி அமைக்க வேண்டும்' என்றும் காமகோடி பீடாதிபதி திரு. மணியனுக்கு நியமித்திருந்ததை ஆடி-மீ ஸுதர்சனம் தலையங்கத்தில் நாம் ஆக்ஷேபித்திருந்தோம். ஆவணி-மீ பாதுகா பத்திரிகையிலும் '*ஞானபூமிக்குச் சில விளக்கம்*' என்னும் தலைப்பில் காமகோடிப் பெரியவரின் நியமனம் தேவையில்லாதது என்னும் விளக்கம் வெளிவந்துள்ளது. இவற்றையும் இதுவரை வெளியிடும்

நேர்மையோ, நமது கேள்விகளுக்கு பதிலளிக்கும் ப்ராமாணி கத்வமோ 'ஞானபூமி'க்கு இல்லை. இதிலிருந்து வைஷ்ணவ மடாதிபதிகளின் பேட்டிகளை ஞானபூமி திரித்தும் மாற்றி யும் வெளியிடுகிறது என்றும், சுட்டிக்காட்டினாலும் திருத்தம் வெளியிடுவதில்லை என்றும் விளங்குகிறது. சைவம்,வைஷ்ணவம் போன்ற வெவ்வேறு மதத்தைச் சேர்ந்த மடாதிபதிகள் பரஸ்பரம் நமஸ்காரம் செய்துகொள்ளமாட்டார்கள் என்பது அனைவரும் அறிந்தது. "சைவமடாதிபதியைக் காமகோடி சங்கராசார்யர்கள் இருவரும் நமஸ்காரம் செய்வது வழக்கம்" என்று ஞானபூமி வெளியிடுமா? ஆகவே, வானமாமலை ஜீயர் ஸ்வாமியை இழிவுபடுத்துவதற்காகவே ஞானபூமி இப்படி பொய்ச்செய்தியை வெளியிட்டிருக்கிறதென்றும், வைஷ்ணவ ஸித்தாந்தத்துக்கு முரணாக அவர் பேசியதாக அச்சிட்டிருக் கிறது என்றும் தெளிவாக விளங்குகிறது. ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஜீயர் ஸ்வாமி பாரததேச ஸஞ்சாரத்திலிருப்பதால், நாம் அவரோடு தொடர்புகொள்ளமுடியவில்லை. தமிழ்நாட்டுக்கு எழுந்தருளியதும் அவரைக்கேட்டு இதுபற்றிய உண்மையை வெளியிடுவோம். பொய்ச்செய்திகளை வெளியிட்டு இந்து மதத்தை ஒன்றாக்கமுடியாது என்பதை 'ஞானபூமி' புரிந்து கொள்ளவேண்டும். வைஷ்ணவத்தை இழிவுபடுத்துவதற்காகவே ஞானபூமியை நடத்தும் அதன் நிர்வாகிகளுக்கு நமது உபதேசம் செவிடன் காதில் சங்கு ஊதியதாகவே ஆகும். சிற்க; இம் மாத 'ஞானபூமி'யில் 36-ம் பக்கத்தில் "*அம்மா மூகாம்பிஹே*" என்று கொட்டை எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. 7-ம் பக்கத்தில் "ஸத்யகாமஜபலா" என்னும் தலைப்பில் உபநிஷத் கதை வெளியிடப்பட்டுள்ளது. இவையும், இப்பத்திரிகையி லுள்ள மற்றும் பல விஷயங்களும் வடமொழியறிவே இல்லாத வர்களும் வைதிகமதத்தின் பிரமாண நூல்களில் பிரவேசமே யில்லாதவர்களும் நடத்துவது இப்பத்திரிகை என்று தெளி வாகக் காட்டுகின்றன. சுஜாதா எழுதியிருக்கும் கட்டுரையில் "விஞ்ஞான பைரவரின் போதனைகள் சுமார் நாலாயிரம் வருஷத் துக்கு முந்தியது என்கிறார்கள், அதேபோல் 'மாலிணி விஜய தந்திரம்' என்கிற அரியநூல் அதனைக்காட்டிலும் பழமையானது என்கிறார்கள்" என்று எழுதியிருக்கிறார். "என்கிறார்கள்" என்

பதற்கு எழுவாய் காணப்படவில்லை. நாமறிந்த பல்லாயிரக் கணக்கான மத இலக்கிய நூல்களில் இந்தப் பெயர்களே இல்லை. இப்படிப் பொய்யைக்கொண்டே மதப் பத்திரிகை நடத்துவது நம் நாட்டைப் பிடித்துள்ள சாபக்கேடுகளில் ஒன்றாகும். வடமொழி தென்மொழி நூல்களில் வல்லவரானபண்பாளர் ஒருவர் ஆசிரியராலொழிய 'ஞானபூமி' உருப்படாது.

S. லக்ஷ்மீநாராயணன், திருச்சி-17.

*35. தஞ்சாவூர் தமிழ் சர்வகலாசாலை காஞ்சீபுரத்தில் வேதாந்தப் பள்ளிக்கூடம் வைக்கப்போவதாக 15-9-82 'ஹிந்து' 12ம் பக்கத்தில் செய்தி வெளிவந்துள்ளது. அதில் ''ஹிந்து மதம், சைவம், வைஷ்ணவம், பௌத்தம், ஜைனம், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய மதங்களுக்கு, படிப்படியாகப் பீடங்கள் அமைக்கப்படும்'' என்று செய்தி வந்துள்ளது. இதில் சைவ வைஷ்ணவங்களைக் காட்டிலும் வேறாக எடுக்கப்படும் 'ஹிந்து மதம்' என்பது என்ன? அதைப்பற்றி எந்தெந்த நூல்களில் வந்திருக்கிறது?*

'அத்வைதம்' என்னும் ஸ்தானத்தில் 'ஹிந்துமதம்' என்று எழுதியிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் ஆதிசங்கரர் ஸ்தாபித்த அத்வைதத்துக்கும் இந்த ஹிந்து மதத்துக்கும் ஸ்நாநப்ராப்திகூட இல்லை. ஆதிசங்கரருடைய அத்வைதத்தில் 'உலகம் பொய்' என்னும் கொள்கையை அடியோடு கைவிட்டு, ''எல்லா ஆத்மாக்களும் ஒன்று'' என்னும் கொள்கையை 'எல்லா தெய்வங்களும் ஒன்று' என்னுமளவுக்குக் குறுக்கிக் கொண்டு, 'எம்மதமும் சம்மதம்' என்னுமளவுக்கு நீட்டிக் கொண்டு, இன்றுள்ள அத்வைதிகளில் பெரும்பான்மையானவர்களும், சைவர்களில் பலரும், பட்டம் பதவிகளைத் தேடி அலையும் அரசியல்வாதிகளும், இலக்கியவாதிகளும், புதிதாக ஒரு மதத்தை உருவாக்கி, வெளிநாட்டானிட்ட 'இந்துமதம்' என்னும் பெயர் இந்த மதத்துக்கே சொந்தம் என்று உரிமை கொண்டாடி வருகிறார்கள். வெளிநாட்டான் சைவம், வைஷ்ணவம், அத்வைதம் என்னும் பல மதங்களடங்கிய கூட்டத்துக்கு 'இந்துமதம்' என்று பெயரிட்டான். விகடன், கல்கி, இதயம், ஞானபூமி முதலான பத்திரிகைகளில் முற்கூறிய புதிய அத்வைதமதமே இந்துமதம் என்று வலிதாகப் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. இந்த 'இந்துமதம்' என்ற பெயருக்கும், இந்தக் கொள்கைகளுக்கும் நமது வேத

சாஸ்திரங்களில் எந்த ப்ரமாணமும் இல்லை. "ஞானபூமி" "விகடன்" "இதயம்" "கல்கி" முதலான பத்திரிகைகளே இந்த இந்து மதத்திற்கு ப்ரமாண நூல்களாகும். இப் பத்திரிகைகளையே படிப்பவர்களாய், "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்ற சார்வாகக் கொள்கையைப் பின்பற்றி வயிற்றுப்பிழைப்பு நடத்தும் பெரும்பாலான இந்து மக்களுக்கு இந்தப் புதிய இந்துமதமே பிடித்திருக்கிறது. இதனால் சைவமும் வைஷ்ணவமும் அழிந்து வருகின்றன. "இந்து" பத்திரிகைச் செய்தி இந்த இந்துமதம் சைவ வைஷ்ண வங்களைக் காட்டிலும் வேறுபட்டது என உணர்த்தியிருப்பது நேர்மையானது. உண்மையான வைஷ்ணவர்களும், சைவர்களும் தங்களுக்கும் இந்த இந்து மதத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது என்று உலகெங்கும் பறைசாற்றி, சைவத்தையும் வைஷ்ணவத்தையும் அந்தந்த மதநூல்களில் சொன்னபடி வளர்த்தால்தான் சைவமும் வைணவமும் இந்நாட்டில் உறுதியாக நிலைநிற்கும். நமது வேத சாஸ்திரங்களுக்கும் உலகத்தில் உரிய மரியாதை ஏற்படும்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

***36. 'கல்கியில்' 2-மாதங்களாக 'சரணம் கணேசா' என்னும் கணபதியைப் பற்றிய சித்திரத் தொடர் வெளிவருகிறது. இதிலுள்ள கதைகளுக்கும் பரணீதரன் விகடனில் எழுதிவரும் தல புராணக்கதைகளுக்கும் பாஸ்கரமார்த்தாண்டன் முதலானோர் இதயம், ஞானபூமி முதலானவற்றில் எழுதிவரும் புராணக்கதைகளுக்கும் நம் சாஸ்திரங்களில் ஏதேனும் ஆதாரமுண்டா ?***

பரணீதரன் அந்தந்த ஊரில் கிடைத்த தல புராணங்களைக் கொண்டு எழுதிவருவதாகக் காட்டிவருகிறார். இவை மற்ற ஊரில் உள்ள ஜனங்களுக்குத் தெரியாது. இதிலிருந்தே 'தங்கள் ஊருக்கும், அங்குள்ள தெய்வத்துக்கும் பெருமை தேடிக்கொள்வதற்காக அந்தந்த ஊர்க்காரர்கள் சமீபகாலத்தில் எழுதிவைத்த கதைகளே இவை என்பது தெளிவாக விளங்குகிறது. ' 'இதயம்' 'ஞானபூமி' முதலானவற்றில் வரும் கதைகளும் இத்தகையவையே. 'சரணம் கணேசா' என்னும் சித்திரக் கதைக்கு இன்னபுராணம் ஆதாரம் என்று கல்கி வெளியிடவில்லை.' "கதை: ரா. கணபதி" என்றும், "படக் கதை அமைப்பு: வாண்டுமாமா" என்றும் 'கல்கி' வெளியிடுகிறது. இதிலிருந்து கல்கியில் பலர் எழுதும் கற்பனைக்கதை

களைப்போல், இதுவும் ரா. கணபதியின் கற்பனையிலுதித்த கதைத்தொடரே என விளங்குகிறது. இக்கதையிலுள்ள கிருத்ராஸுரன் கதை, மாய இந்திராணிக்கதை, பறக்கும் ஆஸனமாய் வந்த கல்பாசுரன் கதை, கணபதி ப்ரஹ்மாவை விழுங்க, ப்ரஹ்மா கணபதியின் வயிற்றில் உலகைக் கண்ட கதை, அநலாசுரன் கதை முதலானவை பாகவதத்தில் உள்ள கண்ணன் கதைகளைப் பார்த்துக் காப்பி அடிக்கப்பெற்றவை. பாகவதக் கதைகளிலுள்ள அழகில் ஒரு சிறிதும் மட்டரகமான காப்பியான இவற்றில் இல்லையே. தோப்புக்கரணக்கதை வயிற்றில் ஊறிக்கிடக்கும் விஷ்ணு த்வேஷத்தாலே கற்பிக்கப் பட்டது. 'விகடன்' 'கல்கி' 'இதயம்' 'ஞானபூமி' முதலியவற்றில் வரும் இத்தகைய கதைகள் அனைத்தும் முழுப்பொய்யானவை என்பதை அறிவாளிகள் பின்வரும் முக்கியமான சான்றிலிருந்து உணரலாம். அதாவது — திருமாலைப் பற்றி ஸ்ரீவிஷ்ணுபுராணம், பாகவதம், பாரதம், ராமாயணம் ஆகியவற்றில் காணப்படும் நூற்றுக்கணக்கான கதைகள் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட சங்கநூல்களிலும், ஐம்பெரும் காப்பியங்களிலும், கம்பராமாயணம் முதலான ஆயிரக்கணக்கான தமிழ்நூல்களிலும், காளிதாஸன் முதலான நூற்றுக்கணக்கான வடமொழிக் கவிஞர்களின் ஆயிரக்கணக்கான வடமொழிக் காவ்யநூல்களிலும், மதாசார்யர்களின் மதநூல்களிலும் எடுத்தாளப்பட்டுள்ளன. இதைப்போலவே சிவனைப்பற்றிய திரிபுரஸம்ஹாரக்கதை, ஆலகாலவிஷபானக் கதை, தக்ஷயஜ்ஞத்தை அழித்த கதை முதலானவையும், முருகனைப் பற்றிய சூர்மாவைத் தடிந்த கதை, கிரௌஞ்சமலையைத் துளைத்த கதை, வள்ளிதேவஸேனையை மணம்புணர்ந்த கதை முதலானவையும் நூற்றுக்கணக்கான தென்மொழி வடமொழி நூல்களில் கையாளப்பட்டுள்ளன. பரணீதரன் 'விகட'னிலும், ரா. கணபதி 'கல்கி'யிலும், பாஸ்கரமார்த்தாண்டன் முதலானோர் 'இதயம்', 'ஞானபூமி'யிலும் எழுதும் கதைகளில் எதுவும் இப்படி இலக்கியங்களில் கையாளப்படவில்லை. இதுவே இக்கதைகளனைத்தும் சமீபகாலத்தில் சிலரால் கற்பிக்கப்பட்டவையே என்பதற்கு அசைக்கமுடியாத சான்றாக விளங்குகிறது. இப்படிப் பொய்க்கதைகளை வளர்ப்பதால் இந்துமதம் வளராது என்பதையும், அறிவாளிகள் விலவறச் சிரிப்பதற்கே இவை இலக்காகும் என்பதையும், இதை எழுதுபவர்களும் இப்பத்திரிகை ஆசிரியர்களும் உணராதது விசித்திரமேயாகும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*37. எல்லாச் சாதியினரையும் சிவ, விஷ்ணு ஆலயங்களில் அர்ச்சகர்களாக நியமிக்கவேண்டும் என்பதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்தக்கோரும் தமிழக அரசின் முயற்சி மத சுதந்திரத்தை அழித்துவிடும் என்றும், கோயில்களைக் கண் காட்சிசாலைகளாக ஆக்கிவிடும் என்றும், ஆகமங்களுக்கும் அனுதியான பழக்கவழக்கங்களுக்கும் முரணானது என்றும், அதனால் அதற்குச் சம்மதிக்கவேண்டாமென்றும் பிரதம மந்திரிக்கும், ஜனாதிபதிக்கும் ஆஸ்திகர்கள் அனைவரும் எழுத வேண்டுமென்று கோரி, நீங்கள் ஸுதர்சனம் துந்துபி ஆவணி (417) இதழில் தலையங்கம் எழுதியிருந்தீர்கள். 6—9—82 'விடுதலை' பத்திரிகையில் இத்தலையங்கத்தை அப்படியே அச்சிட்டு "இதிலிருந்து பார்ப்பனர்கள் திருந்தவேமாட்டார்கள் என்று விளங்குகிறது" என்று எழுதப்பட்டுள்ளது — இதன் அநீதியை 'விடுதலை'க்கு விளக்கவேண்டுகிறேன்.*

தமிழ்நாட்டில் மிகப் பழமையான சங்கநூல்களில் ஒன்றான பரிபாடலில் திருமாலைப்பற்றிப் பல பாடல்கள் உள்ளன. அவற்றில் "*நின் ஏவலுள் பணிந்தமை கூறும் நாவல் அந்தணர் அருமறைப் பொருளே*" [பரிபாடல் 1-12, 13] [நாவன்மையுடைய அந்தணர் ஓதும் அருமறைப்பொருள் உலகனைத்தும் உனக்கு வசப்பட்டிருப்பதைக் கூறும்] "*புகரறு காட்சிப் புலமும் நீ*" [பரிபாடல் 1-45, 46] [குற்றமற்ற அறிவை விளைக்கும் வேதமும் உன்னையே பரம்பொருளாகக் கூறுகிறது.] "*வாய்மொழிப்புலவ*" [பரிபாடல் 1-65] [வாய்மூலமாகவே பரவும் வேதத்தில் புலப்படுகிறவன் திருமாலாகிற நீயே] "*வடு இல் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த கெடுஇல் கேள்வியுள் நடு ஆகுதலும்*" [பரிபாடல் 2-24, 25] [குற்றமற்ற கொள்கையுடைய உயர்ந்தவர்களால் ஆராயப்படுவதாய், அழிவில்லாததாய், கேட்டே அறியப்படுகையால் கேள்வி (சுருதி) எனப்படுவதான வேதத்தில் திருமாலாகிற நீ அனைத்துக்கும் அந்தர்யாமியாக ஓதப்படுகிறாய்.] "*உள்ளுநர் உரைப் போர் உரை*" [பரிபாடல் 2-35] [வேதப்பொருளை உட்கொண்டு (திருமாலின் பெருமையை) உரைப்போர் உரை] "*சாயல் நினது வான் நிறை என்னும் நாவல் அந்தணர் அருமறைப் பொருளே!*" [பரிபாடல் 2-56, 57] [நினது நிறமும் அருளும் நீர் நிறைந்த மேகத்தையொக்கும் என்று நாவன்மையுடைய அந்தணர் ஓதும் அருமறைப்பொருள் கூறும்.] "*கேள்வியுள்*

*கிளந்த ஆசான் உரை நின் உருபு''* [பரிபாடல் 2-61, 65] [வேகத்தில் சொல்லப்பட்ட எசமானன் (யாகம் செய்பவன்) சொல்லும் வேதவாக்கியம் திருமாலாகிற உன் உருவமாகும்] *''மாயோய் நின் வயின் பரந்தவை உரைத்தேம் மாயா வாய் மொழி உரைதர''* [பரிபாடல் 3-10, 11] [மாயப்பிரானே! உலகம் முழுவதும் உன்னிடமிருந்தே உண்டாயிற்று என்பதை அழியாத வேதம் ஓதுவதைக்கொண்டு நாம் சொன்னோம்] *''தாமரைப் பூவினுள் பிறந்தோனும் தாதையும் நீயென மொழியுமால் அந்தணர் அருமறை''* [பரிபாடல் 3-13, 14] [தாமரைப் பூவில் பிறந்த பிரமனும் அவனது தந்தையும் திருமாலாகிய நீயே என்று அந்தணர் ஓதும் அருமறை முழங்குகின்றது] *''பதினுயிரம் கை முதுமொழி முதல்வ''* [பரிபாடல் 3-42] [எண்ணற்ற கைகளையுடையவனுய், முதுமைமிக்க மொழியாகிய வேதத்தில் முதல்வனுகக் கூறப்படுகிறவனே!] *''முன்னை மரபின் முதுமொழி முதல்வ''* [பரிபாடல் 3-47] [அநாதி காலமாக ஆசார்ய சிஷ்ய மரபு வழியில் பரவிவரும் வேதத்தில் முதல்வனுக முழங்கப்படுபவனே] *''ஏஎ இன கிளத்தலின் இனைமை நற்கு அறிந்தனம்''* [பரிபாடல் 3-62] [சாமவேதம் இப்படிக் கூறுகையால் திருமாலின் இப்பெருமையை விளக்கமாக அறிந்தோம்] *''வேதத்து மறை நீ''* [பரிபாடல் 3-66] [வேதத்தில் உபநிடதம் நீயே (உன்னைச் சொல்லுவதே)] *''தொல் இயல் புலவ''* [பரிபாடல் 3-86] [தொன்மையான நூலாகிற வேதத்தில் புலப்படுகின்றவனே!] *''நின்னோரன்னோர் அந்தணர் அருமறை''* [பரிபாடல் 4-65] [உன்னைப்போன்ற பெருமையுடைய அந்தணர் ஓதும் அருமறை உன்னைப் பரம்பொருளாகக் கூறுகிறது] *''பாப்புப் பகையைக் கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை ஏவலின் முதுமொழி கூறும்''* [பரிபாடல் 13-38, 39, 40] [பாம்புக்குப் பகையான் கருடனைக் கொடியாகக் கொண்ட அழியாத செல்வமுடைய திருமாலை ஏவராலும் இயற்றப்படாத முதுமொழியான வேதம் பரம்பொருளாகக் கூறும்] *''என ஆங்கு நலம்புரீஇ அம்சீர் நாம வாய்மொழி இது என உரைத்தலின்''* [பரிபாடல் 15-62, 63, 64] [திருமாலின் இந்தப் பெருமைகளை அனைவர்க்கும் நன்மையை விரும்புவதும், அழகிய பெருமைகளையுடையதுமான புகழ்மிக்க வேதம் இவ்வண்ணம் உரைக்கின்றது] *''ஒருசார்—அறத்தொடு வேதம் புணர் தவம் முற்றி விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித் திறத்தில் திரிவில்லா அந்தணர் ஈண்டி அறத்தில் திரியா பதி''*

[பரிபாடல்திரட்டு முதல் பாடல் 18, 21] [திருமால் திருப்பதி யான அந்த இருந்தையூரில் ஒருபுறம்—அறம், வேதமோதுதல், தவம்புரிதல் ஆகியவற்றில் நிறைவுபெற்று, மிக்க புகழோடு, விளங்கிய கேள்வித்திறமுடைய குற்றமில்லாத அந்தணர் ஒன்றுசேர்ந்து வேதநெறியில் வழுவாது வாழுமிடம் உள்ளது] என்று திருமாலே வேதமுதல்வன் என்றும், அந்தணர்களே வேதத்தை ஓதி அவனைத் திருப்பதிகளில் வழிபட்டு வந்தார்கள் என்றும் பலவிடங்களில் தெளிவாகச் சங்ககாலச் சான்றோர் களான கீரந்தையார், கடுவன்இளவெயினனார், நல்லெழுசியார், இளம்பெருவழுதியார் முதலான பெரியவர்கள் பாடியிருக்கிறார் கள். இதிலிருந்து வேதத்தில் பரம்பொருளாகச் சொல்லப்பட்ட திருமாலை வேதத்தை ஓதும் அந்தணர்களே இரண்டாயிரம் வருடத்துக்கு மேலாக ஆலயங்களில் வேதத்தைக்கொண்டு வழிபாடு செய்துவந்தனர் என்று விளங்குகிறது. பிற்காலத் தில் ஆதிசைவர் என்னும் அந்தணவகுப்பினர் சிவன்கோவில் களில் வழிபாடு நடத்தினர் என்பது தேவாரம் முதலான வற்றிலிருந்து தெரிகிறது. ஆடு கோழி முதலானவை பலி யிடப்படும் காளிகோவில் முதலானவற்றில் அவற்றையுண்ணும் அந்தணரல்லாதார் வழிபாடு நடத்திவந்தனர் என்றும் நூல்களி லிருந்து விளங்குகிறது. ஆயிரக்கணக்கான வருடங்களாக இயங்கிவரும் இம்முறையை மாற்ற மதச்சார்பற்ற அரசுக்குத் தகுதி ஏது? உயிர்ப்பலியிடும் கோவில்களிலும் ஒரு குறிப் பிட்ட சாதியினரே வழிபாடு நடத்துகிறார்கள். அங்கு கிளர்ச்சி செய்தால் ஆடுவெட்டும் அரிவாளால் தலையைச் சீவிவிடுவார்கள் என்றறிந்தே சாதுக்களான அந்தணர்கள் அர்ச்சகர்களாகவுள்ள கோவில்களில் கிளர்ச்சி செய்கிறார்கள். "கடவுள் இல்லை. கடவுளை நம்புகிறவன் முட்டாள், காட்டுமிராண்டி" என்றுகூறும் இவர்களுக்கு, கோவில்களின் நடைமுறைகளை மாற்றியமைக்கக் கிளர்ச்சி செய்ய என்ன தகுதியுள்ளது? தாங்கள் வழிபடும் கோவில்களில் வழிபாட்டு முறையை மாற்றக்கூடாது என்று அரசிடம் கோரும் ஆஸ்திகர்கள் திருந்தவேண்டியவர்களல்ல; கோவில்களை அழிப்பதற்குக் குறுக்குவழியாகத் தங்களுக்குச் சம்பந்தமில்லாத கோவில்களில் கிளர்ச்சிசெய்யும் இவர்களே திருந்தவேண்டியவர்கள் என்பதை நடுநிலையாளர்கள் அறிந்தே யிருக்கிறார்கள். வசைபாடாமல் நேர்மையுடன் இவ்விஷயங்க ளுக்குப் பதிலுரைக்கும் வல்லமை 'விடுதலை'க்கு இருந்தால் அதை வரவேற்கிறோம்.

S. முரளி, அந்தணல்லூர். (38, 39 கேள்விகள்)

*38. 15—8—82 ''தாய்'' பத்திரிகையில் வெளிவந்துள்ள பேட்டியில் சிறிய பீடாதிபதி (காமகோடி) ''நமது இந்துசமயம் பரந்த விசாலமான மனம் படைத்தது. ஆகவே இந்துக்கள் தங்கள் சமயம் உயர்ந்தது. பிற சமயங்கள் தாழ்ந்தவை என்று எப்போதும் எண்ணியவர்கள் அல்ல. எம்மதமும் சம்மதம் என்கிற நிலை இருந்தது.'' என்று பேசியதாக உள்ளது. இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

மதத்தலைவர்கள் மதம்பற்றி அறியாத அரசியல் தலைவர்களுக்கும், பாமரமக்களுக்கும் மதம்பற்றிய உண்மைகளை எடுத்துக்கூறி அவர்களுக்கு வழிகாட்டவேண்டும். அப்படியிருக்க, காமகோடி பீடாதிபதிகள் இருவரும் பாமரமக்களிடையே புகழுக்கும், அரசியல் தலைவர்களின் ஆதரவுக்கும் ஆசைப்பட்டு அரசியல் தலைவர்களைப் பின்சென்று, '''எம்மதமும் சம்மதம்' என்பதுதான் இந்து (வைதிக)மதம்'' என்னும் பெரும் பொய்யைப் பரப்பிவருகிறார்கள். இதனால் பாமர இந்துக்களிடையே வைதிகமதத்தின் பிரிவுகளான அத்வைதம் விசிஷ்டாத்வைதம் முதலான வேதாந்த மதங்களைப்பற்றியும் சைவம் வைஷ்ணவம் என்கிற இரு பெரு தைவிகமதங்கள் பற்றியும் அறிவும், உணர்ச்சியும் பெரும்பாலும் அழிந்துவிட்டது. இதனால் பிறமதத்தவர்களுக்கு இவர்களை மதம் மாற்றுவது எளிதாகிவிட்டது. கிறிஸ்தவ அல்லது இஸ்லாமிய மதத் தலைவர்கள் தமது மதத்தைப்பற்றி இப்படிப் பேசுவார்களா என்பதையும், அத்வைதம் பற்றி உள்ளபடி அறிந்த சிருங்கேரி பீடாதிபதி இதை ஒப்புக்கொள்வாரா என்பதையும் நடுநிலையாளர் சிந்திக்கவேண்டும்.

*39. 'எம்மதமும் சம்மதம்' என்னும் பச்சைப் பசும்பொய்யான சமரச மதத்தைப் பொதுஜனப் பத்திரிகைகள் கட்டுப்பாடாகப் பரப்பி வருவதைத் தட்டிக்கேட்பாரில்லையா?*

சென்ற மாதம் முஸ்லிம் ஒருவர் சமரசமதத்தின் பொய்ம்மையை விளக்கும் கேள்வியொன்றைக் குமுதத்தில் கேட்டிருந்தார். அதற்கு அரசு பதிலில் 'வழவழா கொழகொழா' என்று புரியாத பதில் அளிக்கப்பட்டிருந்தது. விடாமல் 30—9—82 குமுதத்தில் ''நா. ஜி. அஹமது''எனும் ஒரு முஸ்லிம் இதுபற்றிக் கேள்வி கேட்டிருந்தார். அக்கேள்வியும் பதிலும் பின்வருமாறு:—

கேள்வி:- எம் மதமும் சம்மதம் என்றால் வெஜிடேரியன் நான் வெஜிடேரியன் ஆவாரோ? திருமண உறவில் சிறிய தந்தை மகளை (எம் மதத்தின் கருத்துக்களும் சம்மதம் என்பதால்) திருமணம் செய்

வாரோ? இன்னும் இதுபோல் பல மாற்றுக் கருத்துக்கள் இருப்ப தால் எம்மதமும் சம்மதம் என்ற அரசியல் சித்தாந்தத்தில் உண்மை இல்லை என்று உணர்வீரா?

பதில்:- 'உங்கள் மதத்தை நாங்கள் மதிக்கிறோம். எங்கள் மதத்தை நீங்கள் மதிக்கிறீர்கள்' என்பதுதான் 'எம்மதமும் சம்மதம்' என்ற தத்துவத்தின் பொருள். அது உள்ளம் சம்பந்தப்பட்டது. அரசியல் சம்பந்தப்பட்டது அல்ல. நீங்கள் சைவ உணவு சாப்பிடுவ தாகவும், நான் அசைவ உணவு சாப்பிடுவதாகவும் வைத்துக் கொள்வோம். நாம் ஒருவரையொருவர் மதித்து நண்பர்களாக இருப் பது சாத்தியமில்லையா? திருமண உறவு ஒன்றுதான் உலகில் உறவா?

இதிலிருந்து எம்மதமும் சம்மதம் என்றால் மதங்கள் பரஸ்பரம் சகிப்புத் தன்மையுடன் இருக்கவேண்டும் என்பதே பொருள் என்னும் உண்மையை வேறுவழியில்லாமல் குமுதம் ஆசிரியர் ஒப்புக்கொள்ள நேர்ந்துவிட்டதைக் காணலாம். இந்தப் பொய்வாதத்தைப் பயன்படுத்தி வைஷ்ணவத்தை அழிக்க முயலும் 'விகடன்' 'கல்கி' 'இதயம்' 'கலைமகள்' 'ஞானபூமி' முதலான பத்திரிகைகளுக்கும் இந்த நேர்மை உண்டாக வேண்டும் என்று பிரார்த்திப்போம்.

K. A. தேவராஜன், சென்னை-1 (40,41 கேள்விகள்)

*40 19–10–82 'ஹிந்து' பத்திரிகையில்—Dr வரதாச்சாரி ஆகமங்கள்பற்றி எழுதியிருக்கும் புத்தகத்தை விமர்சிக்கும்போது, ப்ரஹ்மஸ்ரீ அக்நிஹோத்ரி ஆகமங்களைப்பற்றியும், விசிஷ்டாத் வைதத்தைப்பற்றியும், ஆழ்வார்கள் ஆசாரியர்களைப்பற்றியும் அப் ராமாணிகமாகவும் முன்னுக்குப்பின் முரணாகவும் பல குழப்பமான கருத்துக்களைக் கிளப்பியிருப்பதைக் கண்டிக்க வேண்டுகிறேன்.*

இந்தப் பேர்வழி காமகோடி பெரியபீடாதிபதியால் வைஷ்ணவத்தை இழிவுபடுத்துவதற்காகவே சம்பளம் கொடுத்து நியமிக்கப் பெற்றிருப்பவர். இத்தகைய கருத்துக்கள் பல வற்றைப் பெய்து இவர் எழுதிய 'வரலாற்றில் பிறந்த வைணவம்' என்னும் சுவடியை உபயகலையிலுமுள்ள வித்வான்களும் அறிவாளிகளுமான நூற்றுக்கணக்கானவர்கள் கண்டித்து இவரைச் செத்தபாம்பாக்கிவிட்டார்கள். இந்த செத்த பாம்பை மறுபடியும் அடிக்கவேண்டிய அவசியமில்லை. "இவர் உங்களுக்கு ஆசார்யர் என்பதற்காக இவர் வாந்தி யெடுப்பதையெல்லாம் அச்சிட்டு உங்களுடைய பத்திரிகை யைத் தாழ்த்திக்கொள்கிறீர்களே" என்று உங்களைப்போன்ற பலர் ஹிந்து' பத்திரிகைக்குக் கடிதம் எழுதினால் போதுமானது.

*41. நம்பிள்ளை சிஷ்யரான நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர் நம்பிள்ளையின் திருவாய்மொழி உபந்யாஸத்தை ஒருலக்ஷத்*

*திருபத்தையாயிரம் படிகளாகப் பட்டோலை கொண்டதை நம்பிள்ளை கரையானுக்கு இரையாக்கினதற்குக் காரணமென்ன?*

இதற்குக் காரணம் ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் (பக்கம் 390) பின்வரும் நம்பிள்ளை திருவாக்கில் காட்டப்பட்டுள்ளது. "'வாரீர்! திருவாய்மொழி நிமித்தமாக நாம் வாக்காலே சொன்னதை எழுதினீராகில், நம்முடைய சித்தஸ்தமான பொருளை எழுதப் பெற்றீரோ?' என்று வெறுத்து அருளிச்செய்து, 'உடையவர் காலத்திலே திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழிக்கு ஸ்ரீவிஷ்ணுபுராணப்ரக்ரியையாலே ஆறுயிரமாக இடுகைக்கு உடையவரை அநுமதிகொள்ளப் பட்ட யத்நத்திற்த மட்டுமுடிவில்லை; ஆனபின்பு, நம்முடைய காலத்திலே நம்மையுங்கேளாமல் லக்ஷத்திருபத்தையாயிரங் க்ரந்தமாக இப்படி பரக்க எழுதினால், ஒரு ஶிஷ்யாசார்ய க்ரமத்துக்கு அஸம்ப்ரதாயமாய்ப் போங்காணும்..." இதில் உள்ள நம்பிள்ளை ஸ்ரீஸூக்தியிலிருந்து இவ்வளவு விரிவாக உரையை வெளியிட்டால், அனைவரும் ஓர் ஆசார்யனை அடையாமல் தாமே ஏடுபார்த்துப் பொருளுணரத் தொடங்கி விடுவார்கள் என்னும் பயத்தாலேயே நம்பிள்ளை அந்நூலைக் கரையானுக்கு இரையாக்கி விட்டார் என்று தெரிகிறது.

ஸ்ரீமத் பரமஹம்ஸ சின்ன ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி,
நெடிகட்டபாலம், A.P. (42 to 44 கேள்விகள்)

*42. ஸ்ரீராமாநுஜர் யாதவப்ரகாச சிஷ்யராயிருக்கும்போது ஸமாச்ரயணம் ஆகாத நிலையில், வரதராஜப்பெருமாளுக்கு எப்படி தீர்த்த கைங்கர்யம் செய்யலாம்?*

ஸ்வதந்த்ரனை எம்பெருமானுடைய நியமனத்தின்பேரில் ஆதிசேஷாவதாரமான ஸ்ரீராமாநுஜர் செய்ததாகையாலே குறையில்லை என்றே கொள்ளவேண்டும். ஆகையால் இக்காலத்தவர்களும் இதுபோல் செய்யலாம் என்ற அதிப்ரஸங்கம் ஏற்படாது.

*43. உடையவர் திருக்கோட்டியூர்நம்பியிடம் உபதேசம் பெற்றது திருமந்த்ரார்த்தமா? சரமச்லோகார்த்தமா? இரண்டுமா?*

பெரியநம்பிகள் எம்பெருமானார்க்கு த்வயத்தின் அர்த்தத்தை முழுவதும் உபதேசித்து, "மற்ற அர்த்தங்களைத் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளும்" என்று நியமித்ததாக ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் (நம் பதிப்பு பக்கம் 191) உள்ளது. "நம்பி சரமஶ்லோகப்பொருளை அதிகுஹ்யமாக வைத்துக்கொண்டிருக்கிறார். அதைக் கேட்

டால் உபதேசிக்கவேமாட்டார்" என்பது உடையவருக்குத் தெரியும். அதனால் உடையவர் "நம்பியிடம் சரமச்லோகார்த்தத்தை எப்படியாவது பெற்றுவிடவேண்டும்" என்ற திருவுள்ளத்துடன், திருமந்த்ரார்த்தத்தையே முதலில் பிரார்த்தித்தார். பதினெட்டுமுறை நடந்தபின்பு அதை உபதேசம்பெற்று, ஆசையுடையோர்க்கு அதை உபதேசித்து, இவருடைய கருணையை அறிந்த நம்பியால் 'எம்பெருமானார்' என்னும் பட்டம் சூட்டப்பெற்று, தாம் கேளாதேயிருக்க, நம்பி தம்மாலேயே சரமச்லோகார்த்தத்தை உபதேசிக்கப்பெற்றார். இதுவும் குருபரம்பராப்ரபாவம், ப்ரபந்நாம்ருதம் முதலான க்ரந்தங்களிலிருந்து அறியப்படுகிறது. ஆகையால் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் உடையவர் உபதேசம் பெற்றது திருமந்த்ரார்த்தமும் சரமச்லோகார்த்தமும் ஆகிய இரண்டுமே. ஆயினும் அவற்றில் ப்ரதானமானது சரமச்லோகார்த்தமே. அதைப் பெறுவதற்காகவே உடையவர் இப்பாடுபட்டார். அதனாலேயே முமுக்ஷுப்படி சரமச்லோக ப்ரகரண வ்யாக்யானவதாரிகையில் "இதில் அர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் எழுந்தருளிற்று" என்று தொடங்கி மாமுனிகள் அருளிச்செய்தார்.

*44. திருமந்த்ரத்தை ப்ரபந்நர்கள் ஒருநாளைக்கு 108, 1008 என்ற கணக்கில் ஸ்வயம் ப்ரயோஜனமாக ஜபம் பண்ணலாமா? குறிப்பாக ஸ்த்ரீ சூத்ரர்கள் முற்கூறியபடி ஜபம் செய்யலாமா?*

"நம்முடைய பூர்வாசார்யர்கள் புறம்புள்ளாரைப்போலே திருமந்த்ரத்தை ஜபஹோமாதி முகத்தாலே கார்யம் கொள்ளாமல், அர்த்தத்திலேயே ஊன்றிப்போருவர்கள்" என்று ஈடு முதலான க்ரந்தங்களில் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸ்வயம் ப்ரயோஜனமாக ஜபம் செய்யும்போது, 108, 1008 என்னும் கணக்கு நிர்ப்பந்தமில்லை. அர்த்தாநுஸந்தானத்துடன் ஜபம்செய்வதே தக்கது. அதனாலேயே பூர்வதினசர்யையில் "*மந்த்ரரத்நாநுஸந்தான ஸந்ததஸ்புரிதாதரம்। ததர்த்த தத்த்வ நித்யாந ஸந்நத்த புலகோத்கமம்॥*" [மந்த்ரரத்னமான த்வயத்தின் அநுஸந்தானத்தாலே எப்போதும் உதடு துடிக்கப் பெற்றவர். அதனுடைய உண்மைப்பொருளை த்யானிப்பதாலே எப்போதும் மயிர்க்கூச்செறியப்பெற்றவர்] என்று மாமுனிகளின் அநுஷ்டானம் காட்டப்பட்டது. ஜீயர் ஸ்வாமிக்கு இவ்விஷயங்கள் தெரிந்திருந்தபோதிலும், லோகக்ஷேமார்த்தமாகக் கேள்விகேட்டு பதிலை வெளிப்படுத்தியிருப்பதற்கு அனைவரும் க்ருதஜ்ஞதாநுஸந்தானம் செய்ய ப்ராப்தம்.

S. லக்ஷ்மீநாராயணன், திருச்சி-17. (கேள்வி 45, 46)

*45. அனைத்துச் சாதியினரையும் ஆலயங்களில் அர்ச்சகராக நியமிக்கவேண்டும் என்று பரிந்துரை செய்திருக்கும் மகராஜன் குழுவின் அறிக்கையை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

சங்ககாலத்திலிருந்து இன்றுவரையுள்ள தமிழ்நூல்களையும், ஆகமங்கள் முதலான வடமொழி நூல்களையும் ஆராயும் போது, விஷ்ணுகோவில்கள் வேதவிதிப்படி அந்தணர்களால் எப்போதும் ஆராதிக்கப்பட்டு வந்தன என்று விளங்குகிறது. இதை நாம் ஆவணி, புரட்டாசி, ஐப்பசி மாத ஸுதர்சனம் தலையங்கங்களிலும், 37-வது கேள்வியின் பதிலிலும் விரிவாக விளக்கியிருக்கிறோம். நமது ஆவணி மாதத் தலையங்கத்தை அச்சிட்டுத் தன் வயிற்றெரிச்சலை வெளிப்படுத்திய விடுதலையும் நமது நடுநிலைநிற்கும் விமர்சனங்களுக்கு இன்றுவரை யாதொரு பதிலும் எழுத இயலாமல் நிற்கிறது. ஆயிரக்கணக்கான அன்பர்கள் இதுபற்றித் தங்கள் மறுப்பைத் தெரிவித்து மத்திய அரசுக்குக் கடிதங்கள் அனுப்பியுள்ளதாகவும் நமக்குச் செய்திகள் வந்துள்ளன. தமிழக அரசின் அறநிலைய அமைச்சரான வீரப்பன் அவர்களும் இந்தத் திட்டம் கேரளாவில் படுதோல்வியடைந்ததைச் சுட்டிக் காட்டி, 'பெரும்பான்மையான அர்ச்சகர்கள் சோற்றுக்கே வழியில்லாமல் திண்டாடும் போது, அர்ச்சகர் பதவிக்கு ஆசைப்பட்டு எவரும் வரமாட்டார்கள்' என்று எடுத்துக் காட்டியிருக்கிறார். ஆகையால் மகராஜன் குழுவினரின் அறிக்கை செயல்படுத்த முடியாத வெறும் காகிதமாக நிற்கப்போவது திண்ணம். இதுபற்றிய ஐப்பசி மாத ஸுதர்சனம் தலையங்கம் ஸுதர்சனர் பதில் இந்த ஶதகத்தில் அநுபந்தமாக இணைக்கப்பட்டுள்ளது.

*46. வைஷ்ணவ மடாதிபதிகள் தங்கள் பேட்டியில், தங்கள் மதத்துக்கு முரணாகப் பேசினார்கள் என்று பொய்யை வெளியிட்ட ஞானபூமி திருந்திற்றா ?*

ஐப்பசி மாத ஸுதர்சனத்தில் 'ஞானபூமியா ? பொய்ப் பூமியா ?' என்னும் தலையங்கத்தில் சென்னை கௌடியமடத்தின் தலைவரான பக்திப்ரஜ்ஞான யதிமகாராஜின் கடிதத்தை வெளியிட்டு, அவரது பேட்டியில் முக்யமான விஷயங்களைத் தாறுமாறாகத் திருத்தி 'ஞானபூமி' வெளியிட்டிருப்பதை அம்பலப்படுத்தினோம். இதற்கு முன் வெளிவந்திருந்த ஸ்ரீமத்

ஆண்டவன் ஸ்வாமி பேட்டியிலும், ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமி பேட்டியிலும் பல விஷயங்கள் திரித்துக்கூறப்பட்டிருப்பதை 34-வது கேள்வி பதிலில் நிரூபித்திருக்கிறோம். ஆயினும் இன்றுவரை ஞானபூமி வருத்தம் தெரிவிக்கவோ திருத்தம் வெளியிடவோ மனமில்லாமல் இருக்கிறது. இப்படிப் பொய்களைப் பரப்பி வைஷ்ணவத்தை அழித்துவிட மணியன் மனப்பால் குடிக்கிறார் என்று இவற்றிலிருந்து விளங்குகிறது. வேதங்களாலும், ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களாலும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களாலும், ஆசார்யர்களின் அத்புத க்ரந்தங்களாலும் ஓங்கிவளர்ந்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவமாகிற கோட்டையை, சுண்டெலி போன்ற இவர்களால் ஒரு சிறிதும் நலியச் செய்யமுடியாது. இச்செயல்களால் தங்களைத் தாழ்த்திக் கொள்வது தவிர வேறு எப்பயனையும் காணமாட்டார்கள் இவர்கள். "ஞானபூமியா? பொய்பூமியா?" என்னும் கட்டுரையும் ஸுதர்சனர் பதில் இந்த பாகத்தில் அநுபந்தமாக இணைக்கப் பட்டுள்ளது.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*47. 1982 நவம்பர் கலைமகளில் சிருங்கேரி பீடாதிபதி மதகண்டனம் பற்றியும், சிவவிஷ்ணு அபேதம் பற்றியும் எழுதியிருப்பவற்றை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

1982 கார்த்திகை மாத ஸுதர்சனத்தில் "சிருங்கேரி பீடாதிபதியைக் குறித்துச் சில கேள்விகள்", "வைதிக மதத்தின் பழைய நிலையும், இப்பொழுது ஒற்றுமைக்கு வழியும்" என்ற தலையங்கங்களில் இதுபற்றி விமர்சித்து, சிருங்கேரி பீடாதிபதியைக் குறித்துச் சில கேள்விகள் கேட்கப்பட்டுள்ளன. இக்கேள்விகளுக்கு எவரேனும் பதிலுரைத்தால் அவை ஆராயப் பெற்று மற்றும் பல தெளிவுகள் பிறப்பிக்கப்படும்.

பெயர் வெளிவர விரும்பாத ஓர் அன்பர்.

*48. 20—10—82 அன்று மதுரையில் வெளியிடப்பட்ட "திருவருள் நாதம்" என்ற நூலில் கிருபானந்தவாரியார், (1) "உலகு அனைத்தையும் படைப்பவர் பிரம்மா; காப்பவர் திருமால்; அழிப்பவர் உருத்திரன். இவர்களில் ஒவ்வொருவரும் தாமே முழுமுதற்கடவுள் என்று சில சமயங்களில் எண்ணிக்கொள்வார்கள். ஆனால் இம்மூவருக்கும்கூடத் தாயாக இருப்பவள் பராசக்தி" [பக்கம் 6]. (2) 'ஸரஸ்வதி, இலக்குமி, உருத்திராணி என்ற மூன்று சக்திகளின் துணைகொண்டு*

*பிரம்மா, திருமால் உருத்திரன் ஆகிய மூவரும் முத்தொழில் களைச் செய்கின்றனர். இம்மூன்று சக்திகளாகவும் விளங்கு பவள் உண்மையில் பராசக்தியே" [பக்கம் 6]. (3) மீனுட்சி யம்மைப் பிள்ளைத்தமிழில், "தனி முதல் யாம் என்பார்க்கு அம்மனையாய். அவர்தம் மனை ஆனவள்" என்று பரதேவதை யைப் போற்றுகிறுர் ஸ்ரீகுமரகுருபர ஸ்வாமிகள். அம்மனை என்றுல் தாய். தம்மனை என்றுல் தம்மனைவியர். அதாவது, பராசக்தியே மும்மூர்த்திகளுக்கும் தாயாகவும் இருக்கிறுள். தாரமாகவும் இருக்கிறுள். இந்த உயரிய தத்துவத்தை நினை வுறுத்தும் வகையிலேயே, 'தாய்க்குப் பின் தாரம்' என்ற முதுமொழி எழலாயிற்று [பக்கம் 6-7]. (4) "பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் இம்மூவருக்கும் மேலான சிவபரம்பொரு ளாகவே தன்னை ஆக்கிக்கொள்ள ஆசைப்படுகிற மனிதன், அதற்கு முதற்படியாக இவ்வுலகியல் இன்பங்களிலுள்ள ஆசை களை விட்டொழிக்கவேண்டும் என்பது உபநிடதங்களின் முடிவு" [பக்கம் 10] என்று எழுதியுள்ளார். இந்த 4 விதண்டா வாதங்கள் எந்த "உபநிடதத்தில்' இருக்கின்றன? இவருடைய வாதங்களில் உள்ள பொய்ம்மைகளைத் தகர்த்தெறிந்து உண்மையை விளக்கியருளப் பிரார்த்திக்கிறேன்.*

இக்கொள்கைகள் த்ரிமதஸ்த, ஆசார்யர்கள் கையாண்ட எந்த உபநிடதத்திலும் இல்லை. தமிழ்நாட்டில் சங்கநூல்கள் திருமாலை வேதத்தில் முழங்கப்படும் பரம்பொருளாகக் காட்டின. சிவன் முதலான எல்லா தெய்வங்களையும் அவனுல் படைத்து, அளித்து, அழிக்கப்படும் ஜீவர்களாகவே காட்டின. சங்ககாலச் சான்றேர்கள் பராசக்தி என்று எந்த தெய்வத்தை யும் குறிப்பிடவில்லை. 'காடுகாள்' என்று காளியைக் குறித் தனர். அவளுக்கு, கிராமத்துக்கு வெளியே சுடுகாட்டுக்கு அருகிலேயே கோயில்கள் அமைந்திருந்ததால் "காடுகாள்" எனப்பட்டாள். இப்போதும் காளிக்குப் பெரும்பாலான கிராமங்களில் சுடுகாட்டுக்குப் பக்கத்திலேயே பழைய கோயில்கள் அமைந்திருப்பதைக் காணலாம். வேதத்தின் பூர்வபாகத்தில் விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலான தெய்வங்களைப்போல், காளியை ஒரு தெய்வமாகவும் எடுக்க வில்லை. புராணங்களிலேயே காளியைப்பற்றி வருகிறது. உலகப்புகழ்பெற்ற ஸ்ரீமத்₃பா₄க₃வதபுராணத்தில் பத்தாவது ஸ்கந்த₄த்தின் தொடக்கத்தில் எம்பெருமான் 'விஷ்ணு மாயை'

எனும் காளியை அழைத்து, யசோதைக்குப் பெண்ணாகப் பிறக்கும்படி நியமித்து, "உன்னைப் பாமரஜனங்கள் பற்பல பெயரிட்டு வணங்குவார்கள்" என்று வரங்கொடுத்ததாக வுள்ளது. "இலச்சையாய மோடி" [திருச்சந்த 53] என்னும் பாசுரத்தில் திருமழிசையாழ்வார்—ஆடு, கோழி முதலானவற்றை அறுத்துப் பலிகொள்ளும் இந்த தெய்வத்தை ஸாத்விகர்கள் கண்ணால் காண்பதற்கும் லஜ்ஜைப்படுவார்கள் என்று அருளிச் செய்தார். இன்றும் பல கோயில்களில் ஆடுகோழியையறுத்துத் தின்னும் பாமரமக்களாலே வணங்கப்படும் தெய்வமாகவே காளி இருந்து வருகிறாள் என்பது அனைவரும் அறிந்தது. காளிக்கு நரபலி கொடுக்கும் செய்திகளும் பத்திரிகைகளில் அடிக்கடி வருகின்றன. சில நூற்றாண்டுகளுக்குள் அத்வைதிகளில் பெரும்பாலானோர் சைவர்களாகவும், சாக்தர்களாகவும் மாறியபின், அவர்கள் சிலஆகமங்களையும் தேவீபாகவதம் என்னும் பொய் நூலையும் எழுதிவைத்து. அவற்றில் வேதத்துக்கும் ஸ்ம்ருதி இதிஹாஸ ஸாத்விகபுராணங்களுக்கும் முரணாகக் காளியைப் பராசக்தியென்னும் தெய்வமாக்கி, அவள் மூம்மூர்த்திகளுக்கும் மூலமானவள் என்று பொய் எழுதிவைத்தனர். 'தாயே தாரமாய் இருக்கிறாள்' என்னும் கொள்கையிலிருந்தே இந்த மதம் எத்தனை தாழ்ந்தது என்பதை நல்லோர்கள் உணரலாம். "ஒரு மனிதனுக்குத் தாயின் பரிவுக்கு அடுத்த படியாகவே உள்ளது தாரத்தின் பரிவு" என்னும் பொருளிலேயே "தாய்க்குப்பின் தாரம்" என்னும் பழமொழி உலகில் வழங்குகிறது. அதற்கு மிகவும் ஒழுக்கக்கேட்டை விளைக்கக் கூடிய அவப்பொருளைக் கூறுவது மிகவும் அருவருக்கத் தக்கது. இந்த சாக்தமதத்தில் மகாரபஞ்சகம் (மது, மாம்ஸம், மைதுனம்) முதலான மற்றும் அருவருக்கத்தக்க பல அநுஷ்டானங்களும் உண்டு என்பதை ஏற்கனவே ஸுதர்சனர் பதிலில் காட்டியிருக்கிறோம். இத்தகைய மதத்தைச் சேர்ந்தவர்கள் தாய்க்கும் தாரத்துக்கும் வித்தியாசத்தைக் காணாமலிருப்பது வியப்பல்ல. சைவ வைஷ்ணவ ஆகமங்கள்—ப்ரஹ்ம ஸூத்ரம், சங்கநூல்கள் முதலான பழைய நூல்களில் எடுக்கப் பட்டிருப்பதுபோல், இந்த சாக்த ஆகமங்களும், இவற்றின் கொள்கைகளும் சுமார் அறுநூறு வருஷத்திற்கு முன் எந்த நூலிலும் ஆதாரவாகவோ, மறுப்பதற்கோ எடுக்கப்படாமையால் அந்தக் காலகட்டத்திற்குள் பரப்பப்பட்ட மதமே இது என்பதை நடுநிலையாளர்கள் நன்கு உணரலாம்.

பேராசிரியர் டாக்டர் இரா. அரங்கராஜன், *M.A., B.T., Ph.D.*
தமிழ்த்துறை, மதுரைக்கல்லூரி, மதுரை.

*49. வேதத்தில் விஷ்ணு, வைஷ்ணவம் என்ற பதங்கள் பல்லாயிரக்கணக்கில் பார்க்கப்படுகின்றன. வைஷ்ணவம் என்பது விஷ்ணு ஸம்பந்தமான யாகயஜ்ஞங்களைக் குறித்துத்தானே ப்ரயோகமாகிறது. விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொண்ட சமயத்தினர் என்ற பொருளில் "ப்ரபு₄ரஹம் அந்ய ந்ருணும் ந வைஷ்ணவாநாம்" என்கிற ஸ்ரீவிஷ்ணுபுராண ச்லோகத்திலுள்ளபடியே வேதத்திலும் வருகிறதா?*

வேத₃ம் நித்யமானது. நித்யமான வைதிகசமயம் வைஷ்ணவமே. உண்மையில் எல்லா ஜீவர்களும் வைஷ்ணவர்களே. இதை ஶதபத₂ப்₃ராஹ்மணம் ஐந்தாம் காண்ட₃ம் இரண்டாவது ப்ரபாட₂கம் நாலாவது ப்₃ராஹ்மணத்தில் "*வைஷ்ணவா: புருஷா:*" [ஜீவர்கள் அனைவரும் வைஷ்ணவரே] என்று ஶுக்லயஜுர்வேத₃ம் ஓதிற்று. "*விஷ்ணோ அவதார ஸ்வீகாரேண மநுஷ்ய ஸம்ப₃ந்த₄ாத் மநுஷ்யா: ஸர்வே வைஷ்ணவா: — விஷ்ண்வதி₄ஷ்டி₂தா: இத்யர்த்த₂:*" [விஷ்ணுவானவர் அவதரித்து எல்லா மனிதர்களுடன் உறவுகொள்ளுகையாலே மனிதர்கள் அனைவரும் வைஷ்ணவரே; அதாவது விஷ்ணுவினாலே அதி₄ஷ்டி₂க்கப்பட்டவர்களே என்று பொருள்.] என்று அத்₃வைதியான ஸாயணரே இதற்கு பா₄ஷ்யமிட்டார். பிற்காலத்தில் இந்த நிலையான உண்மையில் குழப்பம் விளைக்கப்பட்டு, பல மதங்கள் தோன்றின. அப்போது, "*அறியக் கற்று வல்லார் வைட்டணவர்*" [திருவாய் 5-5-11] என்கிறபடியே இந்த ஜ்ஞாநத்தை உடையவர்கள் '*வைஷ்ணவர்கள்*' என்று சிறப்பாகக் குறிக்கப்பட்டனர். நித்யமான வேத₃ம் வேறு மதங்களை மதமாகக் கருத இடமில்லையாகையால், 'வைஷ்ணவ மதம்' என்றோ, 'வைஷ்ணவ மதத்தைச் சேர்ந்தவர்' என்றோ குறிப்பிட்டுக் கூறவேண்டிய அவசியமில்லை. அதனால் கூறவில்லை.

S. அரங்கதுரை, பாஞ்சஜந்யப்பேரியக்கம், வெள்ளமடை.

*50. காஞ்சீபுரம் "இந்து தமிழ்க் கவிஞர் தலைமை மன்றம்" ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்கள் அருளாணைப்படி ஆறும் ஆண்டு*

பொங்கல் திருநாள் கவிதைப் போட்டியை நடத்துகின்றது. கவிதைப் போட்டிக்குரிய தலைப்புக்கள் "(1) சிலப்பதிகாரம் கூறும் இந்துசமய உண்மைகள்; (2) மணிமேகலை விளக்கும் இந்துசமயக் கொள்கைகள்; (3) ஆழ்வார்கள் காட்டிய சைவ வைணவ சமத்துவம்"என்பவைகளாகும் [தினமணி (26-11-82) செய்தி]. வைணவமே உண்மையான வைதிகமதமாக மூன்று நூல்களிலும் குறிக்கப்பெற்றுள்ளது எனக் கவிதை எழுதி அனுப்பினுலாவது இவர்களுக்கு புத்தி வருமா?

"சிறியார் சிவப்பட்டார்" [நாச் திருவ 6] என்று திருமழிசையாழ்வார் அருளியதை நிரூபித்துவரும் இவர்கள் நாம் உண்மையை எவ்வளவு எழுதினுலும் பொய்யையே பிரசாரம் செய்வார்கள். உண்மைக்கு இடமளிக்கமாட்டார்கள். இவர்களுடைய இத்தகைய செயல்களைப் புறக்கணிப்பதே நாம் செய்யத்தக்கது.

திருவாலி சே. ஸ்ரீநிவாஸன், விசாகப்பட்டிணம்.2.
(51, 52 கேள்விகள்)

51. "மழித்தலும் நீட்டலும் வேண்டா—உலகம் பழித்த தொழித்து விடின்" என்ற குறள்வழி, "அத்தகு செயல்கள்" தேவையற்றவையே என்று வினவுபவர்களுக்கு எவ்வகையான விளக்கத்தினை—விடையினை இறுக்கவேண்டும்?

"உலகமாகிற உயர்ந்தோர் பழித்தவற்றை ஒருவன் விட்டு விட்டால், அவன் துறவு மேற்கொள்ள வேண்டிய அவசிய மில்லை" என்பது இக்குறளின் கருத்தாகும். இல்லறத்திலிருந்து கொண்டே கூடாவொழுக்கத்தைவிட்டு, உயர்ந்தோர் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பவன் துறவியிலும் உயர்ந்தவன் என்பது இதிலிருந்து தேறும் பொருள். இது எல்லா சாஸ்திரங் களும் ஒப்புக்கொண்ட விஷயம். ஸம்ஸார வாழ்க்கையில் வெறுப்புற்ற சிலர்க்கு உரியது துறவு. பலர்க்கு உரியது இல்லறமே. இல்லறத்திலிருந்தும் ஒழுக்கமுடையவன் துறவியிலும் சிறந்தவன் என்பதை வலியுறுத்தவே வந்தது இக் குறள். துறவை இல்லைசெய்யவோ பழிக்கவோ வந்ததல்ல. [illegible] ந்யாயத்தை நினைப்பது.

*52. திருவெழுகூற்றிருக்கையில் மங்கைமன்னன் ''நெறிமுறை நால்வகை வருணமுமாயினை'' என்று அருளியிருக்கின்றபோழ்து அப்பரம்பொருளை ஏன் நால்வகை வருணத்தாரும் பூஜை வழிபாடுகள் செய்யக்கூடாது? என்ற ஐயம் எனக்கு எழுகிறது. மேற்கூறிய ஆழ்வாரது அருளிச்செயலுக்கு நமது ஆசார்யர்களின் வ்யாக்யான விளக்கங்களோடு எனது ஐயத்தினை நிவர்த்திக்குமாறு பிரார்த்திக்கிறேன்.*

''சாதுர்வர்ண்யமும் நீயிட்ட வழக்கு'' என்பது இங்கு பெரியவாச்சான்பிள்ளையின் உரை. ''*மேதகும் ஐம்பெரும் பூதமும் நீயே*'' எனும் அடுத்த அடியும், பஞ்சபூ₄தங்கள் எம்பெருமானுக்கு வசப்பட்டிருக்கின்றன என்று காட்டுகின்றது. வழிபாடு செய்வதைப்பற்றி எழுந்ததல்ல இப்பாசுரம். எல்லா வர்ணத்தார்க்கும் அவரவர் வீடுகளில் எம்பெருமானை வழிபாடு செய்ய உரிமையுண்டு. லோகக்ஷேமத்தின் பொருட்டு வேத₃ாக₃மங்களைக்கொண்டு வழிபாடு நடக்கும் திருக்கோயில்களிலேயே வேத₃ம் ஓதுவதில் அதி₄காரமுடைய அந்தணர் திருவாராத₄னம் செய்யவேண்டும் என ஆக₃மங்களால் விதி₄க்கப்பெற்று இன்றளவும் நடைமுறையில் உள்ளது. இதை மாற்றுவது முறையல்ல.

A. *கிருஷ்ணமாச்சாரி, சென்னை-22.*

*53. பூனா யுனிவர்ஸிடியில் பதிப்பித்துள்ள* ''**Ramanuja's Sri Bhashyam**'' *[ராமாநுஜரின் ஸ்ரீப₄ாஷ்யம்] என்கின்ற ஸ்ரீகோசத்தில். ராமாநுஜர் ''ஸ்ரீபாகவதத்திலிருந்து'' மேற்கோள் காட்டவில்லை என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இது உண்மையா? இதற்குக் காரணம் என்ன?*

எம்பெருமானார் ஸ்ரீப₄ாஷ்யத்தில் வேத₃வேத₃ாந்தங்கள் விஶிஷ்டாத்₃வைதத்தையே கூறுகின்றன என நிலைநாட்டினார். வேத₃த்திற்கு உபப்₃ரும்ஹணம் எனும் முறையில் புராணங்களை எடுக்கும்போது புராணரத்னமான ஸ்ரீவிஷ்ணுபுராணவாக்யங்களையே பெரும்பாலும் விசாரித்து விஶிஷ்டாத்₃வைதமே பௌராணிகமதமுமாகும் என நிலைநாட்டினார். மற்ற புராணங்கள் பலவற்றை எடுக்கவில்லை. ஆதி₃ஶங்கரப₄ாஷ்யத்திலும் இந்நிலையே காணப்படுகிறது. இதனால் பதினெட்டு

மஹாபுராணங்களில் சேர்ந்த ஸ்ரீபாகவதம் முதலானவற்றை அப்ரமாணம் என்று கூற இயலாது. ஸ்ரீராமாநுஜரை ஒட்டி அவதரித்த மற்ற பூர்வாசார்யர்கள் ஸ்ரீபாகவதத்தைக் கையாண்டிருக்கையாலே அது பரமப்ரமாணமேயாகும். எம்பெருமானாருடைய பரமாசார்யரான ஆளவந்தார் 'புராணரத்நம்' என்று விஷ்ணுபுராணத்தைக் குறித்ததிலிருந்தே மற்ற புராணங்களும் உண்டு என உணர்த்தியுள்ளது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

M. இராதாகிருஷ்ணன், பாண்டிச்சேரி.

*54 திருவாய்மொழி "குழகி எங்கள் குழமணன் கொண்டு" [6-2-6] ஈடு வியாக்யானத்தில் "த்ரைலோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்" என்னும் ச்லோகத்திற்கு "மூன்று லோகத்தையும், அத்தோடே விச்வசப்தவாச்யனானவன் தன்னையும் கூட ஒரு தட்டாக்கினால், பிராட்டியுடைய ஒரு கலாமாத்ரத்துக்கு எடை நிற்கமாட்டாது" என்று பொருள் அருளப்பெற்றது? இது அதிசயோக்தியா? அல்லது உள்ளதுரைத்தலா?*

இது அதிசயோக்தியல்ல; உண்மையுரைத்தலேயாகும். பிராட்டியின் ஸ்வரூபரூபகுணங்கள் எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணங்களைக் காட்டிலும் பல வகையில் சிறப்புற்றவை. ஆயினும், அத்தகைய பிராட்டி எம்பெருமானுடைய உடைமைப் பொருளாகையாலே, இச்சிறப்புக்களெல்லாம் எம்பெருமானுடைய சிறப்புக்களாகவே முடிந்து நிற்கின்றன. "ஸ்வத: ஸ்ரீஸ்த்வம்" [ஸ்ரீ குணர 31] என்னும் ஸ்லோகத்தில் மணிக்கு ஒளிபோலேயிருக்கும் பிராட்டியால் எம்பெருமானுக்குப் பல சிறப்புகள் விளைந்தபோதிலும், ஒளியால் சிறப்புறும் மணிக்குப்போலே எம்பெருமானுக்கும் குறைவாராது என நிரூபித்தார் பட்டர். நமது ஸ்ரீஸூக்த வ்யாக்யானத்தில் இதன் விரிவு காணலாம்.

T. R. ஸ்ரீதரன், திருச்சி-8.

*55 23—11—82 'தினமலரி'ல் (நாளிதழ்) 'வைஷ்ணவன்' என்ற புனைபெயருடன் யாரோ ஒருவர் ஸ்ரீரங்கத்தில் ஜீயர் ஸ்வாமி ஏற்றிருக்கும் கோபுரத் திருப்பணியை மிகவும் இழிந்த சொற்களால் விமர்சித்துள்ளார். எம்பெருமானுக்கு எழுப்பப்*

*படும் அக்கோபுரத்தினை மனிதர்களுக்கு உருவாக்கப்பட்டிருக்கும் சத்துணவு திட்டத்துடன் தொடர்பு படுத்தி எழுதியுள்ளார். தாங்கள் அதற்கு மறுப்பு ஒன்று தயாரித்து தங்கள் ஸுதர்சனத்தில் ஒரு செய்தியாகவும், தினமலருக்கு ஒரு கடிதமாகவும் எழுதப் பிரார்த்திக்கிறேன்.*

அந்தக் கட்டுரையை எழுதியவரின் செயலைக் காட்டிலும், அதை வெளியிட்ட பத்திரிகையின் மனப்பான்மை மிகவும் இழிவானதும், விஷமத்தனமானதுமாகும். "வைஷ்ணவர்கள் தமக்குள் அடித்துக்கொள்ளட்டும்; அதைப் பார்த்து நாம் ரசிப்போம்" என்னும் இந்தக் குரூரமனப்பான்மையை நாம் உதாசீனப்படுத்திவிடுவது நல்லதேயொழிய, இந்தக் கட்டுரைக்கு பதிலெழுதி அனுப்பி, அந்த மனப்பான்மைக்கு மேலும் இரை யிடுவது சரியல்ல; இக்கருத்திலேயே 'ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா' விலும் இக்கட்டுரை பொருட்படுத்தப்படவில்லை என்பதை உணரலாம்.

N. ஸ்ரீநிவாஸய்யங்கார், திருக்குறுங்குடி.

*56. ஸ்ரீராமனுக்கும், வஸிஷ்டருக்கும் ஸம்வாதரூபமாக வுள்ள "யோகவாஸிஷ்டம்" எனும் நூல் ப்ரமாணமானதா?*

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தின் பெருமையையும், புகழையும் பார்த்து, பல கவிகள் ராமகதையைக் கருப்பொருளாகக் கொண்டு காவியங்களை இயற்றினார்கள். அவற்றில் வடமொழியில் காளிதாஸனின் ரகுவம்ஶமும், பவபூதியின் மஹாவீரசரிதமும், உத்தரராமசரிதமும், முராரியின் அநர்க்கராகவமும் முக்கியமானவை. வடமொழியறிஞர்களால் காவிய நயங்கருதிக்கொண்டாடப்படுபவை. அவ்வண்ணமே தமிழில் அமைந்த ஒப்பற்ற பெருங்காவியமான கம்பராமாயணமும் ஆயிரம் வருடங்களாகத் தமிழ்கூறும் நல்லுலகத்தால் போற்றிப் புகழப்பட்டு வருகிறது. ஆயினும், அறிஞர்கள் அனைவரும் "ராமபிரான் கதையை உள்ளது உள்ளபடி உரைப்பது" என்னும் பெருமையை மஹர்ஷியான வால்மீகியின் ஸ்ரீமத் ராமாயணத்திற்கு ஒப்புக்கொண்டார்களேயொழிய, இக்காவியங்களுக்கு ஒப்புக்கொள்ளவில்லை. இந்நிலையில் வால்மீகி ராமாயணத்தின் ஒப்பற்ற பெருமையைப் பார்த்துப் பொறுமை

கொண்ட சிலர் (சுமார் 500 வருடங்களுக்குள்) ஆநந்த₃ ராமாயணம், அற்புதராமாயணம், யோக₃வாஸிஷ்ட₂ம் எனும் போலி ராமாயணங்களை உருவாக்கினார்கள். 500 வருடங்களுக்கு முற்பட்ட எந்தச் சான்றோரும் இவற்றின் பெயரைக் கூடத் தமது நூல்களில் தொடாதிருப்பதும், இவற்றிலிருந்து ஒரு துணுக்கைக்கூட மேற்கோளாகக் காட்டாதிருப்பதுமே இவை மிகவும் நவீனமானவை என்பதை நிலைநாட்டித்தரும். இவற்றினுள் — வால்மீகிராமாயணம் ஸ்ரீராமபிரான் ஸகல கல்யாணகு₃ணபி₄ராமனும், பரப்₃ரஹ்மமான ஸ்ரீமந்நாராயணனே என்று ஸர்க்க₃ந்தோறும் நிரூபிப்பதையும், நிர்கு₃ணப்₃ரஹ்ம வாத₃த்திற்கு அதில் ஒரு ஶ்லோகத்திற்கூட இடமில்லாதிருப்பதையும் பார்த்து, பெருங்கடுப்புக்கொண்ட அத்₃வைதிகள் சிலரால் கற்பிக்கப்பட்டது யோக₃வாஸிஷ்ட₂ம் என்பது அதைச் சிறிது படித்தாலும் விளங்கும். மதாசார்யர்களாலோ, பொது மக்களாலோ ஏற்கப்படாமையாலும் இது மிகப் பிற்காலத்தில் எழுந்த போலிநூல் என உணரலாம்.

*ரெ. சீனிவாசன், சென்னை-17* (57, 58 கேள்விகள்)

*57. தாங்கள் ஸுதர்சனர் பதிலில் இராமாயண காலத்திலேயே உருவவழிபாடு இருந்ததாகவும், சக்ரவர்த்தித் திருமகனே திருவரங்கநாதனை வழிபட்டதாகவும் எழுதியுள்ளீர்கள். இதற்கு வால்மீகி இராமாயணத்தில் சான்று உண்டா? இருந்தால் அந்த ராமாயண ச்லோகத்தையும், அதன் பொருளையும் தெரிவிக்குமாறு பிரார்த்திக்கிறேன். ஸ்ரீராமனே பரமாத்மாவாக இருக்கும்பொழுது அரங்கநாதனை அவன் தனியாக வழிபடவேண்டுமா?*

*"க₃தே புரோஹிதே ராம: ஸ்நாதோ நியதமாநஸ:। ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாக₃மத்॥"* [புரோஹிதர் சென்றவுடன், நீராடி நெஞ்சை ஒருமுகப்படுத்தி, பரந்த கண்களையுடைய மனைவியுடன் நாராயணனைத் திருவாராத₄னம் செய்தான் ராமன்.] என்று ஸ்ரீராமாயணத்தில் அயோத்₄யா காண்ட₃த்தில் ஆறும் ஸர்க்க₃த்தின் தொடக்கத்தில் தசரதனால் நிர்ணயிக்கப்பெற்ற பட்டாபி₄ஷேகத்திற்கு முன் ஸ்ரீராமன் ஸீதையோடு கூட நாராயணனைத் திருவாராத₄னம் செய்தான்

என வால்மீகி காட்டுகிறார். இந்தப் பெருமாள் இக்ஷ்வாகு வம்ஶத்தவரால் பரம்பரையாக ஆராதிக்கப்பெற்று வந்தவர்; இவரே பட்டாபிஷேகம் நடந்தபின் விபீஷணனுக்குப் பரிசாக அளிக்கப்பெற்று, அவன் இலங்கைக்கு விமானத்துடன் எடுத்துச் செல்கையில் இரண்டு காவேரிக்கு நடுவில் சோலை வாய்ப்பைக் கண்டு இங்கேயே எழுந்தருளி, ரங்கநாதன் எனப் பெயர் பெற்றவர் என்று புராணங்களாலும், பூர்வாசார்யர்களாலும் பேசப்பெற்றது. ராமன் மனிதனாகப் பிறந்து உத்தமமனிதன் எப்படி வாழவேண்டும் என்று காட்டினவனாகையாலே, இக்ஷ்வாகுகுல தெய்வமான ஸ்ரீமந் நாராயணனை அவன் திருவாராதனம் செய்தது மிகப் பொருத்தமே. இப்படிப் பெருமாளாலே ஆராதிக்கப்பெற்றமையாலேயே ஸ்ரீரங்கநாதன் சான்றோர்களாலே '*பெரியபெருமாள்*' என்று அழைக்கப்பெற்றார்.

*58. ராமாயணத்தில் பிராட்டி அக்னிப்பிரவேசம் முடித்த பிறகு தசரதன் ருத்ரனுடைய தேரில் வந்ததாகக் கூறப்பட்டுள்ளதே: தசரதனுக்கு ஏன் வைகுண்டலோகம் கிட்டவில்லை?*

தசரதன் கடைசிவரையில் ராமனைப் பரமாத்மாவென்று உணராமல், அவனிடம் பிள்ளைப்பாசமே வைத்தான். பரம பாகவதனை பரதனிடம் அவநம்பிக்கைகொண்டு, 'ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க அவன் தடையாகிவிடுவான்' என நினைத்து, அவனை மாமன் வீட்டுக்கு அனுப்பினான். இதைச் செய்யாமலிருந்திருந்தால் கூனி கைகேயிகளின் முயற்சி முளையிலேயே பரதனால் கிள்ளியெறியப்பட்டிருக்கும். இதை உணரவில்லை தசரதன். இவ்வண்ணமாக — ஸ்ரீராமன் பரமாத்மா என்பதை விஶ்வாமித்ரர் முதலான பலர் எடுத்துக் கூறியும், ஸ்ரீராமன் செய்த தாடகா ஸுபாஹு வதத்தைக் கேட்டும், பரஶுராம கர்வபங்கத்தை நேரே கண்டும் தெளியாமையாலும், பாகவதாபசாரப்பட்டமையாலும் தஶரதன் நரகத்தையே அடைந்திருக்கவேண்டும்; பெருமாள் தம் இரக்கத்தாலே தந்தையான அவனுக்கு இந்த்ரலோகமாகிற ஸ்வர்க்கத்தைக் கொடுத்தார் என்று பூர்வாசார்யர்கள் நிர்வஹிப்பார்கள்.

N. ஸாரநாதன், அட்வகேட், சீர்காழி.

*59. பெரிய திருமொழியில் காழிச்சீராம விண்ணகரம் பற்றிய 'செங்கமலத்து அயன் அனைய மறையோர்' [3-4-10] என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் 'திருவிளக்குப்பிச்சன்' செய்தி வருகிறது. இது யாரைக் குறிக்கும்? இங்கு கூறப்படும் செய்தியின் சாரம் என்ன?*

"செங்கமலத்து" என்று தொடங்கும் பாசுரத்தில் சொல்லப்பட்ட திருவிளக்குப்பிச்சன் கதை பின்வருமாறு;— முற்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் திருவிளக்கு ஏற்றும் பணியாளன் (திருவிளக்குப்பிச்சன்) ஒருவன் இருந்தான். பெரியபெருமாளிடம் மிக்க பரிவையுடைய இவன் "*எம்பிரானுக்கு எழுமையும் பித்தனே*" [பெரு-திரு 3-6] முதலான பாசுரங்களில் குலசேகரர் அருளிச்செய்த ரீதியில் பைத்தியம் பிடித்தவன் போல் இருந்ததால் 'பிச்சன்' என்றே அனைவராலும் அழைக்கப்பட்டான். இவனுடைய பரிவைக்கண்டு பெரியபெருமாள் அர்ச்சாஸமாதியைமீறி இவனோடு வார்த்தை சொல்லி ரஸிப்பதுண்டு. அந்த முறையில் ஒரு சமயம் பெரியபெருமாள் இவனோடு ரஸமாக வார்த்தையாடிவருகையில் 'மிகப் பெரியவர்களுக்கும் சிறு சிறு குறைகளுண்டு' என்று பிச்சன் சொல்லத் தொடங்கினான். இவனது வாயைக்கிண்டி ரஸிக்கத் திருவுள்ளம் பற்றிய பெரியபெருமாள் 'நம் ஆழ்வார்களுக்கு ஏதாவது குறையிருந்தால் சொல்லு' என்று கேட்டார். அப்போது பிச்சன் "செங்கமலத்து" என்னும் பாசுரத்தில் திருமங்கையாழ்வார் "*அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம் கொங்கு மலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன்*" என்று தம்மைப் பலவாறு புகழ்ந்திருப்பதை எடுத்துக்காட்டி, "பிரானே! இவ்வாழ்வார்களும் உம்மைக் கவிபாடுகிறேன் என்று தொடங்கி முடிவுப் பாசுரத்தில் தம் பெருமையைச் சொல்லிமுடித்தவர்கள் தானே! தற்புகழ்ச்சியாகிற இக்குறை இவர்களுக்கும் உண்டு" என்று கூறினானும். அதற்குப் பெரியபெருமாள் "அப்பாசுரங்களும் ஸம்ஸாரியாயிருந்த தாங்கள் என்னாலே மயர்வற மதிநலமருளப்பெற்ற பின்பு திருந்திய படியைக் கூறும் பாசுரங்களேயாகையால் என்பெருமையிலேயே முடிந்துநிற்கும். ஆகையால் அவர்களுக்குத் தற்புகழ்ச்சிக் குற்றமில்லை" என நிரூபித்தாராம்.

V. ரங்கராஜன், திருச்சி-20.

*60. ஆண்டாள் பாடியருளிய திருப்பாவையில் "ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர" [25] என்றும், கடைசியில் "பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது" [29] எனவும் உள்ளது. முதலில் ராஜகுலத்தில் பிறந்ததைத் தீர்மானமாகக் கூறுவதும் பிறகு இடைக்குலத்தில் பிறந்ததாகக் கூறுவதும் முரணாக உள்ளதே! இதை எப்படிப் பரிஹரிப்பது?*

'கண்ணன் வடமதுரையில் பிறந்தவன், ஆய்ப்பாடியில் வளர்ந்தவன்' என்னும் உண்மை 'ஒருத்தி மகன்' பாசுரத்தில் கூறப்பட்டது. இருந்தபோதிலும், "பிள்ளை பிறந்தவிடம் உண்மையில் பிறந்தவிடமாகாது; எந்த இடத்தில் பிறந்த குழந்தை அழுது பால் குடிக்கிறதோ, அந்த இடமே பிறந்த இடமாகும்' என்று பொதுஜன வழக்கு ஒன்று உண்டு. அதையொட்டிச் 'சிற்றஞ்சிறுகாலே'யில் 'பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து' என்று கூறப்பட்டது. ஆகையால் முரணில்லை. பிறந்து செய்த லீலைகளெல்லாம் மதுரையிலன்றே, ஆய்ப்பாடியில் தானே; ஆகையால் ஆழ்வார்கள் 'மதுரையில் பிறந்தான்' என்று அருளுவதை கௌணமாகவும், 'ஆய்ப்பாடியில் பிறந்தான்' என்று அருளுவதை முக்யமாகவும் கொள்ளுவதே ரஸிகர்கள் பணியாகும்.

சென்னை அன்பர் ஒருவர். சென்னை-94.

*61. அ. தி. மு. க. பத்திரிகையான 'நீரோட்ட'த்தில் வைணவர்கள் தமிழுக்குச்செய்த ஸேவை பாராட்டப்பட்டுள்ளது. இதை அனுப்பிவைக்கிறேன். வைணவ உலகுக்குத் தெரியப் படுத்தவும்.*

தாங்கள் அனுப்பிய பத்திரிகை வந்தவுடன் சென்ற (மார்கழி) இதழில் அப்பகுதியை அச்சிட்டு முகப்பில் இணைத்து அனைவருக்கும் அனுப்பினோம். பலர் அதிலுள்ள உண்மைகளைக் கண்டு பாராட்டியுள்ளார்கள். சில அன்பர்களின் வேண்டுகோளின் படி அக்கட்டுரையில் எழுதப்பட்டுள்ள ஸம்ஸ்க்ருத நிந்தை மொழிகள் முறையற்றவை என்பதை "அரசியல்வாதிகளுக்கு

அறிவுரை" என்னும் தலைப்பில் இம்மாதம் (தை மாதம்) தலையங்கத்தில் வெளியிட்டுள்ளோம். இவ்விரு கட்டுரைகளும் ஸுதர்சனர் பதில் இந்த சக்கத்திற்கு அனுபந்தமாக இணைக்கப்படும். வடமொழி வெறுப்பு தமிழர் பண்பாட்டுக்கு முரணானது என்பதை அரசியல்வாதிகள் உணர்வார்களாக.

ரெ. நந்தகுமார், சென்னை-40.

*62. கௌடிய மடத்தினரால் வெளியிடப்படும் 'கௌடிய' என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் அதன் ஆசிரியரான பக்தி ப்ரஜ்ஞான யதிமகராஜ் அவர்கள் 'ஞானபூமி'யில் சைவ வைஷ்ணவங்கள் பற்றிய தன்து கருத்து திரித்துக் கூறப் பட்டிருக்கிறது என்று கட்டுரை வெளியிட்டிருக்கிறார். ஞான பூமிக்குத் திருத்தம் வெளியிடும் நேர்மையில்லை. இதை வைஷ்ணவ வுலகுக்கு வெளிப்படுத்த வேண்டுகிறேன்.*

பக்தி ப்ரஜ்ஞான யதிமகராஜ் அவர்கள் ஆதிசங்கராசார்யர் உள்பட எல்லா மதாசார்யர்களும் "நாராயணனே பரமாத்மா" என்பதை மிகத் தெளிவாகக் கூறியுள்ளதாக பேட்டியளித்திருக்கிறார். இதை அடியோடு மாற்றி 'சிவனும் விஷ்ணுவும் ஒன்றே' என்பதே அவர் கருத்து என்றும், 'ஆழ்வார்களும், நாயன் மார்களும் அப்படியே சொல்லியிருக்கிறார்கள்' என்றும் பெரும் பொய்யை வெளியிட்டிருக்கிறது ஞானபூமி. "**Absolutely this is a deliberate misrepresentation of my talk**". (இது எனது பேச்சை வேண்டுமென்றே நேர்மாறாக மாற்றி எழுதியிருப்பதாகும்) என்றும், நாயன்மார்கள் சிவபரத்வத் தையே சொல்லியிருக்கிறார்கள் என்றும், ஆழ்வார்கள் விஷ்ணு வைப் புகழ்ந்து பாடியிருப்பது மாத்திரமல்ல; மற்ற எல்லா தெய்வங்களைக் காட்டிலும் விஷ்ணுவே மேலான பரமாத்மா என்று ஐயத்திற்கு இடமில்லாமல் கூறியிருக்கிறார்கள் என்றும் யதிமகராஜ் தெளிவாக எழுதியிருக்கிறார். இதிலிருந்து வைஷ்ண வத்தைத் திரித்துக்கூறி அழித்துவிடவேண்டும் என்னும் கெட்ட எண்ணத்தோடேயே ஞானபூமி நடத்தப்படுகிறது என்று விளங்குகிறது. அதில் வெளிவரும் விஷயங்களும் வேதசாஸ்திரவிருத்தங்களாகவும் அபத்தக்களஞ்சியங்களாகவும் இருக்கின்றன என்பதை சாஸ்த்ரம் கற்றவர்கள் அனைவரும்

கூறுகிறார்கள். இதனால் நமது வைதிகமதம் மிகவும் நலி வடைந்துவிடும். நல்லவர்கள் இப்பத்திரிகையைப் படிக்காம லிருப்பது நல்லது.

ஸ்ரீதரராமாநுஜதாசர், மதுரை.1.

*63 இதிஹாஸ ஸ்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தில், பெரிய உடையார் (ஜடாயு) பிராட்டியை இலங்கைமன்னனான இராவணன் கவர்ந்து சென்றான் என்று அருளியதை அறிந்துவைத்தும் எம்பெருமான் வானர வீரர்களை நால்திசையிலும் பிராட்டியைத் தேட வைத்தது ஏன்? கவர்ந்து சென்றவன் இராவணன் என்று அறிந்துவைத்தும் இலங்கைக்கு முதலில் தேடச்செல்லாதது ஏன்?*

ராவணன் கவர்ந்து சென்றான் என்பதை அறிந்திருந்த போதிலும் அவன் உலகில் எந்த மூலையில் ஒளித்து வைத்தி ருப்பான் என்பதை நிர்ணயிக்க முடியாதாகையாலே எல்லா திக்குகளுக்கும் வாநரவீரர்கள் அனுப்பப்பட்டார்கள். இலங்கையில் ஒளித்து வைத்திருப்பதற்கு ப்ரஸக்தி அதிகம் என்பதாலேயே அநுமன் தென்திசைக்கு அனுப்பப்பட்டான். ஆகையால் ஒரு குறையுமில்லை.

ராமகோபாலன், ஆரியூர். (64, 65, 66 கேள்விகள்)

*64. இடைக்குலத்தில் பிறந்தது, கூத்தாடியது முதலான கண்ணனின் செயல்கள் அவனது ஸௌலப்யத்தைக் குறிக்கு மானால், எலும்பும் சாம்பலும் தரித்துக் கோவணத்துடன் கூத்தாடுதல் முதலான சிவபெருமானின் செயல்களும் அவனது ஸௌலப்யத்தைக் குறிக்கத் தடையென்ன?*

ஸௌலப்யம் என்றால் அடைவதற்கு எளிமை என்று பொருள். பரமாத்மா இடையர்களுக்கும் பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் அடைய எளியவனாய் ஆய்ப்பாடியில் அவத ரித்தான் என்றால் அது ஸௌலப்யத்தின் எல்லை நிலமாகும். எவரும் போக அச்சப்படும் சுடுகாட்டில் எலும்பு மாலையையும் சுடுகாட்டுப் பிணச் சாம்பலையும் பூசிக்கொண்டு பேய்களோடு கூத்தாடுவது ஸௌலப்யமாகாது. சிவனிடமும் அடியவர்க ளுக்கு எளியனாயிருந்த ஸௌலப்யம் இல்லை என்று எவரும் சொல்லவில்லை ஆனால் பரத்வத்தோடுகூடிய ஸௌலப்யமே ஜீவர்களை உய்விக்கக் கூடியது. பரத்வம் இல்லாத வெறும் ஸௌலப்யம் எல்லா ஜீவர்களிடமும் இருக்கிறது பரத்வத் தோடு கூடிய ஸௌலப்யம் திருமால் ஒருவனிடமே உள்ளது என்று வேதஶாஸ்த்ரங்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

*65. எம்பெருமான் வேதங்களைக் கொடுத்தும் அவதாரங்கள் செய்தும் மக்களைத் திருத்த முடியாமையால் ஆழ்வார்களை அவதரிப்பித்தான் என்று ஆசார்யர்கள் கூறுகிறார்கள். அது உண்மையானால் பெருமான் அவதாரங்களால் ஒரு பயனும் விளையப்போவதில்லை என்பதை முன்கூட்டியே உணரமுடியாதவனா? உணர்ந்தானானால் உணர்ந்தும் அவதாரம் செய்தது ஏன்? அவதாரம் செய்துமக்களைத் திருத்தமுடியவில்லை என்பது உண்மையானால் அவனது ஸர்வசக்திக்குக் குறைவில்லையா?*

எம்பெருமான் அவதரித்து 'நான்தான் பரமாத்மா' என்று கூறினால் அதைத் 'தற்புகழ்ச்சி' என்று நினைத்து நம்ப மறுக்கிறார்கள். அப்படியும் அக்ரூரர், மாலாகாரர், க₃ஜேந்த்₃ரன், ப்ரஹ்லாத₃ன் முதலான பலர் எம்பெருமானால் திருத்தப்பட்டிருக்கிறார்கள் என்று இதிஹாஸபுராணங்கள் கூறுகின்றன. ஆகையால் எம்பெருமானுடைய அவதாரம் பயனற்றதல்ல. தன்னால் திருத்தப்பட்டவர்களைக் காட்டிலும் பன்மடங்கு ஜீவர்களைத் திருத்தவேண்டும் என்ற கருத்தாலேயே ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் அவதரிக்கச்செய்தான். அவர்களும் தங்கள் பெருமையைக் கூறாமல் எம்பெருமான் பெருமையை நிரூபிக்கையாலே ஜனங்கள் நம்பினார்கள். ஆயிரக்கணக்கிலும் லக்ஷக்கணக்கிலும் ஜீவர்கள் திருந்தினார்கள். ஆகையால் எந்தக் குறையுமில்லை.

*66. சேதனனுடைய முதல் முயற்சிக்குத் தக்கபடி பகவான் அருள் செய்கிறான் என்றால், அந்த முதல் முயற்சி ஹேதுவாக ஆகிவிடுகிறதே? அவன் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறான் என்பது எப்படிப் பொருந்தும்?*

எம்பெருமானுக்கு ஸஹேதுக க்ருபை, நிர்ஹேதுக க்ருபை இரண்டும் உண்டு. தங்கள் ஆநந்த₃த்தை அவர்கள் விரும்பினார்கள் என்றால் அதற்கான ஸாத₄னங்களை அவர்களை அநுஷ்டி₂க்கச்செய்து ஸஹேதுக க்ருபையையே செய்கிறான் எம்பெருமான். எம்பெருமானுடைய ஆநந்த₃த்தையே குறிக்கோளாகக் கொண்டவர்களுக்கே எம்பெருமான் நிர்ஹேதுக க்ருபையைச் செய்து மோக்ஷத்தை அளிக்கிறான். எல்லா ஜீவர்கள் விஷயத்திலும் ஸ்ருஷ்டி, அவதாரம் முதலானவற்றை நிர்ஹேதுகமாகவே செய்கிறான். ஆகையாலே குறையேதுமில்லை.

K. A. தேவராஜன், B.Sc. A.C.A., C.A.I.I.B., M.A. ஹிந்தி,
திருநெல்வேலி-2.

67. அடியேன் 10—2—83ல் "ஞானபூமி" பத்திரிகை ஆசிரியர் திரு. மணியன் அவர்களுக்கு "திருமாலைப்பற்றிப் பல பொய்களைச் சுமந்து வரும் தங்களது பத்திரிகைக்கு 'ஞான' என்ற விருது பொருந்தாது. ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களையும், பகவத்கீதையையும் அறியாத ஜனங்களை ஏமாற்றி, அவர்கள் பொழுது போக்குக்காக இப்படி பத்திரிகை வெளியிடுவது விபரீதபலனையே விளைக்கும். இனியும் வைணவத்தைப் பற்றி உங்களது 'அஞ்'ஞானபூமியில் எழுதினால் உங்கள்மீது நடவடிக்கை எடுக்கவேண்டிவரும்" என்று எழுதியிருக்கிறேன் தாங்களும் அவருக்கு ஒரு கடுமையான புத்திமதியைச் சொல்லவும்.

சொல்லவேண்டியதையெல்லாம் சொல்லியாய்விட்டது. ஆனால் எல்லாம் செவிடன்காதில் சங்கூதியதுபோல் ஆயிற்று. 'கீதாசாரிய'னும், 'ஸ்ரீரங்கநாதபாதுகா'வும், 'கௌடியா'வும் அளித்த அறிவுரைகளும் பயனளிக்கவில்லை. ஆயினும், பொய்ப்பிரசாரம் நீண்டநாள் நீடிக்கமுடியாது. விரைவில் வேஷம் கலைந்தே தீரும். நாம் உண்மைப் பிரசாரத்தைவிடாமல் செய்துவரவேண்டும். "ஸத்யமேவ ஜயதி நாந்ருதம்"[உண்மையே வெல்லும், பொய் வெல்லாது] என்பது வேதவாக்கன்றோ. ஸுதர்சனர் பதிலுக்கு அனுபந்தமாக இணைக்கப்படும் 'அவைஷ்ணவ வைதிகர்களுக்கு அறிவுரை' எனும் தலையங்கத் தொடரிலும் இவர்களுக்குப் பல அறிவுரைகளை அளிப்போம்.

G. சேஷரத்தினம், பெங்களூர்-8.

68. "சிவன் சொத்து குலநாசம்" என்று சொல்லுகிறார்களே! இதற்கு விளக்கம் தரவும். அப்படியானால் பெருமான் சொத்தைச் சாப்பிடுகிறவர்களுக்கு தோஷம் ஒன்றும் கிடையாதா? இதற்கும் விளக்கம் தரவும்.

"ருத்,ரோ வை க்ரூர:" [யஜு 6-2] [உருத்திரன் மிகக் கொடியவன்] என்ற வேதவாக்கின்படி சிவன் தன் சொத்தை அபஹரிப்பவர்களுக்குக் கடுமையான தண்டனையை விதிக்கை

யாலே இப்பொதுஜனவழக்கு ஏற்பட்டிருக்கக்கூடும். "*ந ஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா। கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* ॥" [ரா-அ 1-11] [ராமபிரான் ஆத்மகுணங்களை உடையவராகையாலே, ஒருவன் நூறு பிழைகள் செய்தாலும் மறந்துவிடுவார். உபகாரம் என்று கணக்கிடக்கூடிய ஒரு செயலைச் செய்தாலும் அதனால் மிக உகப்பார்] என்று வால்மீகி ஈடுபட்டபடி எம்பெருமான் பரமகருணாமூர்த்தியாகையாலே சிவனுக்கு ஏற்பட்ட அந்தப் 'புகழ்' இவனுக்கு ஏற்படவில்லைபோலும்! ஆயினும் இரக்கமிழிய பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் முதலான வற்றைச் செய்பவர்களை எம்பெருமானும் தண்டிக்காமல் விடமாட்டான். "*தெய்வம் நின்று கொல்லும்*" என்ற பொது ஜன வழக்கு இதனாலேயே ஏற்பட்டிருக்கிறது.

ராமகோபாலன், ஆரியூர்.

*69. பரம்பொருள் 'இவன்' என்று யாவரும் எளிதில் அறியமுடியாதவாறு மறைத்து வடமறை கூறுவதால் பாமரரும் அறிவதற்காக, தெளிவாகக் காட்டத் தமிழ்மறை அவதரித்தது என்று ஆசார்யர்கள் கூறுகிறார்கள். அந்தத் தமிழ்மறையும் 'அரியை அயனை அரனை' 'முனியே நான்முகனே முக்கண்ணப்பா' போன்ற பல இடங்களில் மூவருமே பரம்பொருள் என்று சந்தேகிக்கும்படி கூறுவது ஏன்?*

"அரியை அயனை அரனை" என்று பாடிய நம்மாழ்வாரே "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்களிரண்டாய்" முதலானவிடங்களில் சேதனாசேதனப்பொருள்கள் அனைத்துமே திருமால்தான் என்று கூறுகிறார். இதனால் அவையெல்லாம் பரம்பொருள் என்று ஆகிவிடுமா? அவற்றையெல்லாம் படைத்து அளித்து அழித்து ஜீவர்களை முக்தியிலும் ஆட்கொள்பவன் திருமாலே என்று பலவிடங்களில் அந்த ஆழ்வாரே அருளிச் செய்திருப்பதற்கு முரண்படாமலேயன்றோ இந்த ஸ்ரீஸூக்திகளுக்குப் பொருள்கொள்ளவேண்டும். அதுபோலவே "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே, கபாலநன் மோக்கத்துக் கண்டுகொண்மின்" "பூவில் நான்முகனைப் படைத்த தேவனெம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையும்

தகுமே" "கண்ணனல்லால் தெய்வமில்லை" முதலான நூற்றுக் கணக்கான இடங்களில் அருளியிருப்பதற்கு முரணல்லாமலல்லவோ " முனியே நான்முகனே முக்கண்ணப்பா " முதலான பாசுரங்களுக்குப் பொருள்கொள்ளவேண்டும். முதல் திருவாய்மொழியிலேயே 'நாமவனிவன்' (4) என்று எல்லாப்பொருளும் திருமாலே என்று கூறிவிட்டு, இப்படிக் கூறுவதற்குக் காரணம் 'சரீராத்மபாவம்' என்பதை "உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்று மிகத் தெளிவாகக்கூறியிருக்கிறாரே ஆழ்வார். இவற்றை ஒன்றையும் காணாமல் ஒருசில பாசுரங்களைத் திருப்பித்திருப்பிச் சொல்லிக்கொண்டு பொருள் விளங்கவில்லை என்று புலப்புவதால் என்ன பயன்? பொருள் விளங்காதவர்கள் பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்களைக் கசடறக் கற்றுணர்ந்த பெரியோர்களிடம் கேட்டுப் பொருள் உணரப் பெறலாமே. வேதங்களுக்கு அவப்பொருள் கூறும் பற்பல மதங்கள் ஏற்பட்டதுபோல் ஆழ்வார்களின் அருளிச்செயலை இன்றும் எவராலும் கலக்கமுடியாமலிருப்பதிலிருந்தே வடமறையைக் காட்டிலும் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் மிகத் தெளிவானவை என்பது எவர்க்கும் விளங்கும். இதனாலேயே வேதாந்த தேசிகனும் " செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய ஓதி, தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே " என்று அருளிச்செய்தார்.

S. பார்த்தசாரதி, மேலக்காவேரி, கும்பகோணம்.

*70. அத்வைதிகள் கணபதி ஹோமம் நவக்ரஹஹோமம் முதலான ஹோமங்களைச் செய்வதுபோலே ஸ்ரீவைஷ்ணவர்கள் செய்யக்கூடிய ஹோமங்கள் உண்டா ?*

ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யநைமித்திக கர்மங்களில் வருகிற ஹோமங்களைத் தவிர வேறு எந்த ஹோமங்களும் செய்ய வேண்டியதில்லை. அத்வைதிகள் தங்கள் ஸித்₃தா₄ந்தத்துக்கு முரணாக ஏராளமான தெய்வங்களையும், அவற்றைக் குறித்த ஜபஹோமங்களையும் கைக்கொண்டு க்ஷுத்₃ர [தாழ்ந்த] பலன்களைப் பெற்றுப் போவதையே தங்கள் மதமாக்கிக்கொண்டு விட்டார்கள். நம்முடைய பூர்வாசார்யர்கள் 'ஒரு ப₂லத்தை உத்தேசித்து எம்பெருமானைக் குறித்துங்கூட ஒரு ப்ரத₃க்ஷிணமோ நமஸ்காரமோ செய்யக்கூடாது' என்று அறுதியிட்டிருக்கிறார்கள். அவ்வளவு பரிபக்குவமில்லாத சில ஸ்ரீவைஷ்

ணவர்கள் இக்காலத்தில் பீட₃ாபரிஹாரத்தின் பொருட்டு ஸுத₃ர்சன ஹோமம் செய்துகொள்வதைக் காண்கிறோம்.

*V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.*

***71. "சூத்திரன்" என்ற சொல்லுக்கு 'தா₃ஸீபுத்ரன்' என்று பொருள் என்று திராவிடக் கழகத்தினர் ஓயாது பிரசாரம் செய்துவருகின்றனர். இப்பொருள் நமது சாஸ்திரங்களில் எங்கேனும் கூறப்பட்டுள்ளதா ?***

ஓரிடத்திலும் கூறப்படவில்லை. '*ஶோசதி இதி ஶூத்₃ர:*'' [வருந்துகின்றவன் *ஶூத்₃ரன்*] என்பது *ஶூத்₃ரஶப்₃த₃*வ்யுத்பத்தி. மெய்வருந்த உழைப்பதன்மூலம் மற்ற அனைவர்க்கும் தொண்டுபுரிபவன் *ஶூத்₃ரன்* என்பதே *ஶூத்₃ரஶப்₃த₃*த்துக்கு நமது *ஶாஸ்த்ர*ங்களில் கூறப்பட்டிருக்கும் பொருளாகும். ப்₃ரஹ்மஸூத்ரத்தில் அபஶூத்₃ராதி₄கரணத்திலும் அதன் விஷயவாக்யமாக எடுக்கப்பட்டுள்ள உபநிஷத்₃வாக்யத்திலும் *ஶூத்₃ரஶப்₃த₃*த்துக்கு 'வருந்துகின்றவன்' என்ற பொருளே கூறப்பட்டுள்ளது. "*ஶுசம் த்₃ராவயதீதி ஶூத்₃ர:*" [(தன் உடலுழைப்பால்) அனைவர்க்கும் வருத்தத்தைப் போக்குகிறவன் *ஶூத்₃ரன்*] என்றும் பொருள்கொள்ளலாம். ஆகையால் திராவிடக்கழகத்தினர் கூறும் மட்டரகமான பொருள் அவர்களுடைய பொய்ப்பிரசாரங்களில் ஒன்றேயாகும்.

*P. G. மாணிக்கராமாநுஜதாஸர், சென்னை-1.*

***72. நம்மாழ்வார் முதல்திருவாய்மொழியிலேயே "ஆயிரத்திவைபத்தும்" என்று எப்படி அருளினார் ?***

ஆயிரம் பாசுரங்கள் பாடுவதாக ஸங்கல்பித்துக்கொண்டு இப்படி அருளினார் என்று கூறலாம். உண்மையில் 'யானும் தன்னைத்தான் பாடி" [திருவாய் 10-7-5] "என்சொல்லிசிற்பன் என்னின் னுயிரின்றொன்றாய், என்சொல்லால் யான்சொன்ன இன்கவியென்பித்து, தன்சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன், என் முன் சொல்லும் மூவுருவாம் முதல்வனே", "ஆமுதல்வன் இவனென்று தன்தேற்றி, என் நாமுதல் வந்து புகுந்து நல்லின்கவி, தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என், வாய்முதலப்பனை என்று மறப்பனோ" [திருவாய் 7-9-2,3] என்று எம்பெருமானே ஆழ்வாரைக்கொண்டு பாடுவித்தானகையாலே 'ஆயிரம்' என்னும் பதமும் எம்பெருமானுடைய தூண்டுதலால் ஆழ்வார் திருவாயில் பிறந்துவிட்டது என்று கொள்வதே சரியானதாகும்.

T. A. பாஷ்யம், சென்னை—(73, 74, 75, 76 கேள்விகள்)

*73 (27—2—83) மாசி மகத்தன்று சென்னை கடற்கரை I. G. ஆபீஸ் எதிரில் காமகோடி சிறிய பீடாதிபதி மழைக்காகக் கூட்டுப் பிரார்த்தனை செய்யும்போது எல்லா ஸன்னிதி உத்ஸவர்களையும் அங்கு கொண்டுவரவேண்டும் என்று இந்து அறநிலையத்துறை ஆணையிட்டது. அதன்படி ஸ்ரீபார்த்தசாரதி எம்பெருமானையும் வழக்கத்துக்குமுரணாக அங்கு எழுந்தருளப் பண்ண கோவில் நிர்வாகிகள் முயற்சி மேற்கொண்டனர். இதற்குப் பல முனைகளிலிருந்தும் எதிர்ப்புக்குரல் எழுந்ததால் இவ்வுத்தரவு மாற்றப்பட்டு வழக்கப்படி ஸ்ரீபார்த்தஸாரதி தீர்த்தவாரி நடந்தது. இத்தகைய சூழ்ச்சிகள் செய்வதால் மழைபெய்யுமா?*

ஒருநாளும் பெய்யாது. உள்ள மழையும் போய்விடும். இன்று நாட்டில் நிலவிவரும் பஞ்சத்துக்கு முக்கிய காரணம் அரசியல்வாதிகளாலும், வலிவுபெற்றுள்ள காமகோடி சிஷ்யர்களாலும் பல துறைகளிலும் வைணவத்துக்குப் பலவகையான தீமைகள் இழைக்கப்படுவதேயாகும். இக்கொடுமைகளை இனியாவது செய்யாமலிருக்கும் நல்லறிவை எம்பெருமான் இவர்களுக்கு அளிப்பானாக.

*74. 'ஞானபூமி' சங்கராசாரியாரின் தூண்டுதலால் முழுக்கமுழுக்க சைவ மதப்பத்திரிகையாகவே நடத்தப்படுவதால் அதை நாம் அலட்சியப்படுத்தி ஒதுக்கிவிடலாமே?*

'ஞானபூமி'யைப்பற்றி நாம் எழுதுவது ஞானபூமியின் நிர்வாகிகளான திரு. மணியனோ, பாஸ்கரமார்த்தாண்டனோ திருந்துவார்கள் என்னும் கருத்தினால் அல்ல. இவர்கள் திருந்தவே மாட்டார்கள் என்பது எப்போதுமே தெரியும். ஆயினும் இந்தப் பொய்ப்பிரசாரங்களைக்கண்டு ஞானபூமியைப் படிக்கும் சில வைஷ்ணவர்கள் மயங்கிவிடக்கூடாது என்று காட்டுவதற்காகவே பொய்ப்பிரசாரம் மிக வெளிப்படையாகச் செய்யப்படும்போது எடுத்துக்காட்டி வருகிறோம். இனியும் காட்டிவருவோம்.

*75. எம்பெருமான் கண்ணன் த்ரௌபதிக்காகப் படாத பாடுபட்டு பாரதயுத்தத்தையே நடத்தி பகவத்கீதையை உப*

*தேசித்திருக்கிறான். அப்படியிருக்க ஸ்ரீவைஷ்ணவர்கள் த்ரௌபதியை ஏன் வணங்கக்கூடாது? ஏன் த்ரௌபதியம்மனை தேவதாந்தர கோஷ்டியில் சேர்த்துள்ளனர்? ஸ்ரீரங்கத்தில் துலுக்க நாச்சியார், காஞ்சியில் மலையாளநாச்சியார் என சில நாச்சிமார்களைப்போல் த்ரௌபதியையும் நாம் ஏன் வழிபடக்கூடாது?*

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மறந்தும் புறந்தொழாமை முக்கியம். எம்பெருமான் ஒருவனே பரம்பொருள். ஆகையால் அவ்வொருவனே வணங்கத்தக்கவன். பிரமன் முதற்கொண்டு எல்லா ஸம்ஸாரி ஜீவர்களும் வணங்கத்தகாதவர்கள் என்பது இக்கொள்கையின் பொருள். இதற்கு ஒரு முக்கியமான விதிவிலக்குண்டு. ஸம்ஸாரி ஜீவர்களாயினும் எம்பெருமானையே பரமப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கொண்ட அவன் அடியார்கள் அவன் திருவுள்ளத்துக்கு மிகவும் உகந்தவர்களாகையாலே அவனைப்போலவே வணங்கத்தக்கவர்கள். ஆழ்வார்களும், ஆசார்யர்களும், துலுக்கநாச்சியார், மலையாள நாச்சியார் முதலானோர்களும் இந்த விதிவிலக்கின் கீழ்வருகிறார்கள். பிரமன், சிவன் முதலான தெய்வங்களும், த்ரௌபதி முதலான ஸம்ஸாரி ஜீவர்களும் எம்பெருமானுக்கு உகந்தவர்களாயினும், எம்பெருமானையே பரமப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கொள்ளாதவர்களாகையால் எம்பெருமானுக்கு ஆழ்வார்கள் முதலானரைப்போல மிக உகந்தவர்களல்லர். ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்களால் தொழத்தக்கவர்களுமல்லர்.

*76. ஆந்திர முதல் மந்திரி திருமலைதிருப்பதி தேவஸ்தானத்தைச் சேர்ந்த உபரிபணமான பலகோடி ரூபாய்களை அரசாங்க கஜானாவில் சேர்க்கும்படி உத்தரவிட்டிருப்பது சரியா?*

இதற்கு பாங்குகள் தருவதைவிட ஒரு சதவிகிதம் அதிகமாகவே வட்டி தருவதால் இதில் தவறென்றுமில்லை என்று பலர் நினைக்கிறார்கள். ஆனால் இதில் ஓர் அபாயமுள்ளது. இன்றுள்ள முதல்மந்திரி பக்தி உள்ளவராகையால் ஒழுங்காக வட்டி தரலாம். ஐந்து வருஷங்களுக்கு ஒருமுறை அரசு மாறும் நமது ஜனநாயக அமைப்பில் பிறிதொரு காலத்தில் நாஸ்திகர்கள் அரசாட்சிக்கு வருவதற்கு இடமுண்டு. அவர்கள் வட்டியும் அளிக்கமாட்டோம், அசலையும் திருப்பித்தரமாட்டோம் என்று

சொல்லுவதற்கு இடமுண்டு. ஆகவே ஆந்திர முதன்மந்திரி செய்தது மிகவும் ஆட்சேபிக்கத்தக்கதே. இதுபற்றித் தடை விதித்துள்ள உயர்நீதி மன்றம் நல்ல தீர்ப்பு வழங்கும்.

V. ஸ்ரீநிவாசன், ஸ்ரீரங்கம்.

*77. 12—3—83 'ஹிந்து' பத்திரிகையில் வெளிவந்துள்ள ஸ்ரீ T.S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகளின் உபந்யாஸத்தில் பின்வரும் விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன.—(1) ஹிந்து மதத்தில் எந்த தெய்வத்தை வேண்டுமானாலும் வழிபட உரிமைகொடுக்கப்பட்டுள்ளது. (2) கடவுளின் மனைவிக்கு (சக்திக்கு) பொய்' என்று பெயர். (3) ராமன் பல தெய்வங்களை வழிபட்டான். (4) லட்சுமணனால் நினைவுபடுத்தப்பட்டு வஸந்தநவராத்ரியோடு தொடர்புகொண்ட மந்திரங்களை ஓதினான் ராமன். இவை பற்றி விமர்சிக்கவேண்டுகிறேன்.*

(1) வேதசாஸ்திரங்களில் பல தெய்வங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவற்றிலேயே பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனை வழிபட்டால் மோக்ஷம் கிடைக்கும் என்றும், மற்ற தெய்வங்களை வழிபட்டால் அல்பமும் அஸ்திரமுமான (தாழ்ந்தவையும், நிலைநில்லாதவையுமான) பலன்களே கிடைக்குமென்றும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் எவரெவர்க்குத் தாழ்ந்த நிலைநில்லாப் பலன்கள் தேவையோ அவர்களுக்கு மற்ற தெய்வங்களை வணங்க உரிமைகொடுக்கப்பட்டுள்ளது. இதனால் சாஸ்த்ரிக்கு என்ன லாபம்? (2) சக்திக்கு 'பொய்' என்று பெயர்சூட்டும் பெருமை மிக அழகாயிருக்கிறது! ஒருவேளை 'மாயை' என்று ஸம்ஸ்க்ருதத்தில் உள்ள பெயரை 'பொய்' என்று மொழிபெயர்த்தவருடைய கைங்கர்யமாகவும் இது இருக்கலாம். 'மாயை' என்பதற்கு இங்கு 'பொய்' என்று பொருளல்ல. ஆச்சர்யமான சக்தி என்றே பொருள். இதனாலேயே 'காளி' விஷ்ணுமாயை (விஷ்ணுவின் ஆச்சர்யமான சக்திகளில் ஒன்று) என்று அழைக்கப்படுகிறாள். (3) நித்யநைமித்திக கர்மங்களில் "இந்த்ராய நம:, அக்னயே நம:" முதலான மந்த்ரங்களில் பல தெய்வங்களுக்கு நமஸ்காரம் சொல்லப்பட்டிருப்பதைக் கொண்டு ராமன் பல தெய்வங்களை வழிபட்டான் என்கிறார் சாஸ்த்ரி. இந்த இந்த்ரன் அக்னி முதலான் சப்தங்கள் அந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியான நாராயணனையே குறிக்குமென்பது சாஸ்த்ரங்களில் பல இடங்களில் சொல்லப்பட்டது.

சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமாக வால்மீகி திருமாலை முழங்கியிருக்கும்போது, அக்னி இந்த்ரன் முதலான தெய்வங்களை நித்யநைமித்திகாதி கர்மங்களில் ராமன் வழிபட்டான் என்று சொல்லுவதால் சாஸ்த்ரிக்கு என்ன பயன்? ராமன் அக்னி இந்த்ரன் முதலான தெய்வங்களைக் காட்டிலும் தாழ்ந்தவன் என்று வால்மீகி ராமாயணம் படித்தவன் எவனுவது கூறமுடியுமா? (4) வஸந்த நவராத்ரி முதலானவை அத்வைதிகளால் ஸமீபகாலத்தில் கற்பிக்கப்பட்ட கற்பனைகள். இவைபற்றி ஸ்ரீராமாயணத்தில் ப்ரஸ்தாவமே கிடையாது. உண்டாகுல் ச்லோகங்களை எவரும் எடுத்துக்காட்டலாம்.

R. நந்தகுமார், சென்னை-40.

*78. நீரோட்டம் பிப்ரவரி 3, 4 தேதியிட்ட இதழை அனுப்பியிருக்கிறேன். அதில் அதன் ஆசிரியரான அடியார் தங்களுடைய விமர்சனத்திலுள்ள பல விஷயங்களைப் பாராட்டியும், சில விஷயங்களை மறுத்தும் எழுதியிருப்பதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

இது பற்றி இம்மாத (25—3—83) தலையங்கத்தில் எழுதியிருக்கிறேன். அதை ஸுதர்சனர்பதில் 7-வது சதகத்துக்கு அனுபந்தமாகவும் இணைக்கிறேன்.

S. முரளி, அந்தணல்லூர்.

*79. 'இதயம் பத்திரிகையில் 'நிலாமுற்றம்'' என்னும் நாவலில் (83 மார்ச்சு 13—19 இதழில்) ''வைணவர்கள் சற்று இந்த ஆட்சியின்மீது அதிருப்திகொண்டிருந்தனர். அதைத் திருமழிசையாழ்வாரின் பெயரால் கணிகண்ணர் மிகைப்படுத்த முயன்றுகொண்டிருந்தார்'' என்று எழுதப்பட்டுள்ளது. ஸுதர்சனர் பதில் 6-வது சதகம் 92-வது பதிலில் (கீதாசார்யனில்) ஏற்கனவே இந்த நாவலில் இவர் இப்படி எழுதியிருப்பதற்கு எத்தகைய ஆதாரமும் இல்லை என்று தாங்கள் எழுதிய பிறகும் திரும்பவும் அதை எழுதுபவருடைய கருத்து என்ன?*

ஒரு பொய்யையே திருப்பித்திருப்பி எழுதினால் அது உண்மையாகிவிடும் என்ற கருத்தாலே இவர் எழுதுகிருர். வரலாற்று நூல்களில் ஒருவித ஆதாரமுமில்லாத விஷயத்தைக் கேவலம் ஒரு கற்பனைக் கதையில் எழுதியிருப்பதை மாத்திரம் கொண்டு பகுத்தறிவுள்ளவர்கள் நம்பிவிடமாட்டார்கள் என்பதை இவரும் 'இதயம்' ஆசிரியர் மணியனும் உணரவில்லையந்தோ!

*L. ஸ்ரீநிவாஸன், புதுடெல்லி-5.*

*80. டாக்டர் V வரதாச்சாரி "ஆகமங்களும் தென்னிந்திய வைஷ்ணவமும்" என்னும் தலைப்புள்ள தமது ஆங்கிலப் புத்தகத்தில் "பௌஷ்கரஸம்ஹிதையில் (30-59) 'உத்ஸவம் ஆரம்பிப்பதற்கு முன் தடைகள் நீங்கும் பொருட்டு கணேசரை ஆராதிக்கவேண்டும்' என்னும் பொருளுள்ள ஶ்லோகம் காணப்படுகிறது. இதிலிருந்து வைஷ்ணவர்களும் முற்காலத்தில் கணேசரை விஷ்ணுவின் பரிவாரதேவதையாக வழிபட்டுவந்திருக்கிறார்கள் என்று விளங்குகிறது" என்னும் பொருளுள்ள வாக்யத்தை எழுதியிருக்கிறார். இதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் '*ஶுக்லாம்ப₃ரத₄ரம்*' என்னும் *ஶ்லோகத்தை* அநுஸந்தி₄த்தவுடன் "*யஸ்ய த்₃விரத₃ வக்த்ராத்₃யா: பாரிஷத்₃யா: பரஶ்ஶதம் | விக்₄நம் நிக்₄நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாஶ்ரயே ||*" [எப்போதும் இடையூறுகளைப்போக்கும் க₃ஜானநர் முதலான நூற்றுக்கணக்கான தளபதிகளைக்கொண்ட சேனைத்தலைவரான விஷ்வக்ஸேனரை ஆஶ்ரயிக்கிறேன்.] என்னும் *ஶ்லோகத்தை* அநுஸந்தி₄த்து வருகிறோம். இதிலிருந்து விஷ்வக்ஸேனரின் த₃ளபதியான க₃ஜானநருக்கு இடையூறுகளை நீக்கும் தன்மை உள்ளதென்று விளங்குகிறது. இந்த க₃ஜானநர் திருமண்காப்புடன் பல கோவில்களில் எழுந்தருளியிருப்பதையும் காண்கிறோம். ப₄ட்டர் ஸ்ரீரங்க₃ராஜஸ்தவத்திலும் இவருடைய ப்ரஸ்தாவம் வந்துள்ளதை முன்னமே காட்டினோம். பௌஷ்கரஸம்ஹிதா வசனமும் இவரைப் பற்றியதாகவே இருக்கவேண்டும். விநாயகர் ஶைவத்தில் புகுந்தது ஏழாவது நூற்றாண்டுக்குப் பின்பே என்று பல ஆராய்ச்சியாளர்கள் அறுதியிட்டிருக்கிறார்கள். சங்க நூல்களிலும், சிலப்பதிகாரம் முதலான பழைய நூல்களிலும் முருகனைப் பற்றிய பாடல்களும் குறிப்புகளும் ஏராளமாக இருக்கும்போது, சிவபுத்திரரான விநாயகரைப்பற்றி ஒரு குறிப்பும் இல்லாமலிருப்பதிலிருந்து ஶைவர்கள் பிற்காலத்தில் நமது க₃ஜானநரை ஏற்றுக்கொண்டு அவரை ஶிவபுத்திரராக ஆக்கிவிட்டார்கள் என்று விளங்குகிறது. பௌஷ்கரஸம்ஹிதையில்

கணேசர் என்று உள்ளதேயொழிய அவரை சிவபுத்திரர் என்று குறிப்பிடவில்லை என்பது குறிக்கொள்ளத் தக்கது.

*T. A.* பாஷ்யம், சென்னை.

*81. 75-வது கேள்வியின் பதில் கண்டேன். திருமங்கை யாழ்வாரின் தர்மபத்னி என்னும் காரணத்தால் குமுதவல்லி நாச்சியாரைத் தொழுவதுபோல் பரமபாகவதனை அர்ஜுன னின் தர்மபத்னி என்னும் காரணத்தால் திரௌபதியைத் தொழலாமே? மடைப்பள்ளி நாச்சியாரைத் தொழுவதுபோல் இவளையும் தொழலாமே?*

குமுதவல்லி நாச்சியார் திருமங்கையாழ்வாரின் தர்மபத்னி யாவதற்கு முன்பே எம்பெருமானையே பரமப்ராப்ய ப்ராபகங் களாகக்கொண்டவள். திருமங்கையாழ்வாரையும் ததீயாராதனத்தில் ஈடுபடச்செய்து எம்பெருமான் அவரைக் கடாக்ஷிக் கும்படி செய்தவள். அர்ஜுனன் கண்ணனுக்கு அத்தை பிள்ளையாகையாலே மிக இனியவனாயினும் பரமபாகவத னல்லன். அவனைப் பரமபாகவதனுக்கக் கண்ணன் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. கீதை கேட்டுப் பல வருஷங் களுக்குப் பிறகு அதில் ஒரு வரிகூடத் தனக்கு நினைவில்லை என்று கண்ணனிடம் ஒப்புக்கொண்டு ''துர்மேதாஸ்யஸி பாண்டவ'' [அர்ஜுனா! நீ புல்லறிவாளன்] என்று கண்ணனால் நிந்திக்கப்பெற்றவன். அதனாலேயே அந்த ஜன்மத்தில் அவ னுக்கு மோக்ஷம் கிடைக்கவில்லை. த்ரௌபதி அர்ஜுனனை விட ஆயிரம் மடங்கு மேலானவளானாலும், கண்ணனால் தன் ஸஹோதரியைப்போலே அபிமானிக்கப் பெற்றவளானாலும், அவள் ஶரணமடைந்தது இவ்வுலகப் பலன்களுக்கேயாகும். எம்பெருமானையே பரமப்ராப்ய ப்ராபகங்களாகக்கொண்டு அவள் ஶரணாகதி செய்ததாக மஹாபாரதத்தில் இல்லை. அவளுக்கும் அந்த ஜன்மத்தில் மோக்ஷம் கிடைத்ததாகப் பிர மாணமில்லை ஆகையால் அர்ஜுனனையோ த்ரௌபதியையோ ஸ்ரீவைஷ்ணவர்கள் வணங்குவதற்கு இடமேயில்லை. திருமடைப் பள்ளி நாச்சியாரை த்ருஷ்டாந்தமாக எடுப்பதும் பொருந் தாது. அவளும் எம்பெருமானை எல்லாமாகக் கொண்டவளே. பரிவோடு அவனுக்கு ப்ரஸாதங்களை ஸித்தப்படுத்தும்

கைங்கர்யத்தில் ஈடுபட்டவள் இவள் என்பதே அவளுடைய பரமப்ராகவதத் தன்மையைக் காட்டுகிறது.

திருவாலி சே. ஸ்ரீநிவாஸன், விசாகப்பட்டிணம்-2.

*82. "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்" [திருவாய் 4-4-8] என்று ஆழ்வார் அருளியிருப்பதை இக்காலத்து "தமிழ்வேந்தர்கள்" இன்றுள்ள அரசியல் தலைவர்களுக்கும் பொருந்தும் என்று பேசுகிறார்களே. இது பொருந்துமா?*

"திருவுடை" என்று ஆழ்வார் மன்னருக்கு விசேஷணம் இட்டிருக்கிறார். இதிலிருந்து ஶாஸ்த்ரரீதியில் செங்கோல் செலுத்தும் மன்னர்களையே ஆழ்வார் குறிக்கிறார் என்று விளங்குகிறது. இக்காலத்து அரசியல் தலைவர் எவரும் இப்படிச் செங்கோல் செலுத்துமவர்களல்லராகையாலே, அவர்கள் எப்போதும் திருவுடைமன்னராகமாட்டார்கள். 'தமிழ்வேந்தர்கள்' தங்கள் காரியம் ஆகவேண்டும் என்பதற்காக அரசியல் தலைவர்களைப் புகழ்கின்றார்கள் என்றே கொள்ளவேண்டும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*83 ஏப்ரல் 1 மதுரை தினமணி 3-ம் பக்கத்தில் காமகோடி சிறிய சங்கராசாரியார் "ஹிந்துமதம் பிறமதங்களுக்கு எதிரானதல்ல" என்று பேசியிருப்பதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

கிறிஸ்தவமதம் "மறுபிறவி கிடையாது. புண்யபாபங்களாகிற கர்மம் கிடையாது" என்று கூறுகிறது இஸ்லாமிய மதமும் அப்படியே. "மறுபிறவியும், கர்மமும் உண்டு" என்பதை அடிப்படைக் கொள்கையாகக் கொண்ட வைதிகமதமாகிற 'ஹிந்து" மதம் இந்த மதங்களுக்கு எதிரானதல்ல என்று அறிவுடையார் எவராவது கூறுவார்களா? 'ஹிந்துமதம்' என்று அழைக்கப்படும் மதங்களுக்குள் அடங்கிய அத்வைத மதம் "உலகம் பொய்; ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்று; ஜீவன் ப்ரஹ்மமாவதே முக்தி" என்னும் அடிப்படைக் கொள்கைகளையுடையது. ஹிந்துமதத்தில் அடங்கிய விஶிஷ்டாத்வைத த்வைதமதங்கள் "உலகம் உண்மையானது, ஜீவனும்

ப்,ரஹ்மமும் வெவ்வேருனவர்கள். த,ாஸபூ,தஞன ஜீவன் ஸ்வாமியான நாராயணன் எனப்படும் பரப்,ரஹ்மத்தைப் பரம பத,த்தில் அடைந்து அனுப,விப்பதே மோக்ஷம்'' என்னும் கொள்கைகளையுடையவை. அத்,வைதம் இம்மதங்களோடு எதிரானதல்ல என்று அறிவுடையார் எவராவது சொல்லுவார்களா? சிறிய பீடாதிபதியின் அறிவு இவ்வளவு மட்டமானது என்று சொல்லுவதற்கில்லை. ஆகையால் எல்லா மதக்காரர்களிடமும் நல்ல பெயர்வாங்குவதற்காக அரசியல்வாதிகளைப்போலே பொய்கூறுகிருர் என்றே விளங்குகிறது.

*W. S. ராமாநுஜய்யங்கார், புதுவை.*

*84. 20—3—83விகடனில் பரணீதரன்—தக்ஷிணுமூர்த்தியே முதன்முதலில் ஜக,த்,கு,ருவாகத் திகழ்ந்தவர் என்றும், அடுத்த படியாக ப,க,வான் ஸ்ரீகிருஷ்ணன் என்றும், ஆதி,ஶங்கரரும் அவர் பரம்பரையில் வந்தவர்களும் பிற்கால ஜக,த்,கு,ருக்கள் என்றும் எழுதியிருக்கிருர். இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

த,க்ஷிணுமூர்த்தி சில முனிவர்களுக்குப் பரம்பொருளைப் பற்றி உபதே,சித்ததாகச் சில புராணங்கள் கூறுகின்றன. அவர் என்ன உபதே,சித்தார் என்னும் விஷயத்தில் அனைவருக்கும் ஒத்த கருத்து ஏற்பட இடமில்லை. அவர் நூல் எதுவும் எழுதவில்லையாகையால் இதை நிர்ணயிக்கவும் வழியில்லை. இப்படியிருக்கும்போது அவர் முதன்முதலில் ஜக,த்,கு,ருவென்று எழுதுவது அபி,மானத்திலேயேயாகும். "*ஆதி,கர்த்தா நாராயண:*'' என்று ஆதி,ஶங்கரரால் கீதாப,ாஷ்யத் தொடக்கத்தில் குறிக்கப்பெற்ற பிரத,மகு,ருவான நாராயணனிருக்க, அவனுடைய பேரஞன சிவனுடைய ஒரு வடிவத்தை முதன்முதலில் கு,ரு என்று எழுதுவது அப்பட்டமான பொய்யாகும். அந்த ப்ரத,மாசார்யஞன நாராயணன் கீ,தாசார்யஞக அவதரித்து, உலகமுய்ய கீ,தையை அருளியிருக்கிருன். அதை வைதி,கர்கள் அனைவரும் ப்ரஸ்த,ான த்ரயத்தில் ஒன்ருகக்கொண்டு ப,ாஷ்யமிட்டிருக்கிருர்கள். அத்தகைய கிருஷ்ணனை இரண்டாவதாக ஆக்குவது விஷ்ணு த்,வேஷத்தாலேயேயாகும். இவரது ஸித்,த,ாந்தப்படி ஜக,த் என்பது பொய். ஆகவே ஜக,த்,கு,ரு என்ருல் 'பொய்குரு' என்றே பொருள்படும். இந்தப் பெருமையைத் தங்களுக்கே இவர்கள் வைத்துக்கொள்ளட்டும். கிருஷ்ணனுக்கு இது தேவையில்லை.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*85. 4—5—83 தினமணியில் ஸ்ரீஹரிகோட்டா கோவில் கும்பாபிஷேகத்தைப் பற்றிய செய்தியில் காமகோடிச் சிறியவர் "ஸ்ரீஹரிகோட்டா என்றாலே அரைக்கோடி லிங்கங்கள் இருக்குமிடம் என்று பொருள். 'ஸ்ரீ' என்றால் 'லிங்கம்' என்று பொருள். 'ஹர' என்றால் 'அரைக்கோடி' என்று அர்த்தம். 'கோட்டா' என்றால் 'இடம்' என்று அர்த்தம்" என்று பேசியதாக வெளிவந்துள்ளது. இப்பொருள் சரியானதா?*

ஸ்ரீசப்தத்துக்குப் பிரஸித்த நிகண்டுக்களில் எதிலும் காணப்படாத விஷம் என்னும் பொருளைக் கூறி ஸ்ரீபாஷ்யத்தை விஷபாஷ்யமென்று விஷத்தைக் கக்கிய ஹரித்வேஷியான இவர் இப்போது ஸ்ரீசப்தத்துக்கு எந்த நிகண்டுவிலும் காணப்படாத 'லிங்கம்' என்னும் பொருளைக் கூறுகிறார். *"ஸம்பத்தி: ஸ்ரீஶ்ச லக்ஷ்மீஶ்ச"* [அமர 2-8-82] *"ஸம்பத் ஸம்பத்தி லக்ஷ்ம்யௌ ஸ்ரீ:"* [வைஜயந்தி] என்று நிகண்டுக்களில் ஸ்ரீசப்தத்துக்குச் செல்வம், லக்ஷ்மி என்னும் இரு பொருள்களே பிரஸித்தமாகக் கூறப்பட்டுள்ளது. *"ஸ்ரீர்வேஷரசநா ஶோபா பாரதீ ஸரளத்ருமே। லக்ஷ்ம்யாம் த்ரிவர்க்கஸம்பத்தௌ வேஷோபகரணே மதௌ ॥"* என்று விஶ்வமேதினீ கோசங்களில் படிக்கப்பட்ட அப்ரஸித்தமான பொருள்களிலும் லிங்கம் என்னும் பொருள் இல்லை. ஹரிசப்தத்தை ஹரசப்தமாக்கி, அதற்கு அரைக்கோடி என்று பொருள் உரைத்திருப்பதற்கும் எந்த நிகண்டுக்களிலும் ஆதாரமில்லை. *"ஹரா ருத்ராக்நி கர்தபா:"* [வைஜயந்தி] என்று ஹர சப்தத்துக்கும் ருத்ரன், அக்னி, கழுதை என்ற மூன்று பொருள்களே கூறப்பட்டிருப்பது காணத்தக்கது. 'ஸ்ரீஹரி' என்னும் சப்தத்துக்கு ஸ்ரீமந்நாராயணனே பொருள் என்பதைச் சிறுவரும் அறிவர். சிறிய பீடாதிபதிக்கும் இது தெரியாதிருக்க நியாயமில்லை. அப்படியிருக்கும்போது பிரஸித்தமான அப்பொருளைக் கூறாமல் எங்கும் காணாத "அரைக்கோடி லிங்கம்" என்னும் பொருளைக் கூறியிருப்பது வயிற்றில் ஊறியிருக்கும் விஷ்ணுத்வேஷத்தாலும், லிங்கத்தில் அபிமானத்தாலுமே ஆகவேண்டும்.

வரதராஜன், ஸ்ரீரங்கம்.

*86. 83' மே மாத மங்கையர் மலரில் "ஒரு தடவை அசுரர்களும் பூதகணங்களும் துர்யோதனனை அடித்துத் தரதர வென்று இழுத்துக்கொண்டு போனார்களாம்" என்று தொடங்கி— மஹாபாரதத்தில் 'வயம் பஞ்சோத்தரம் ஶதம்' (நாம் நூற்றைவர்) என்று தர்மபுத்ரர் சொன்னதாகவுள்ள பிரஸித்தமான சரித்திரத்தைக் காமகோடிச் சிறியவர் கூறியதாக உள்ளது. இது சரியா ?*

துர்யோதனனை இழுத்துச்சென்றது ஓர் கந்தர்வன் என்றே மஹாபாரதத்தில் கூறியிருக்கிறது. அசுரர்களும் பூதகணங்களும் இழுத்துச் சென்றதாகச் சிறியவர் கூறியிருப்பது தவறு. ஸுதர்சனர் பதிலில் (2-44, 3-19) ஸ்ரீராமாயணமே இவருக்குத் தெரியாது என்று நிரூபிக்கப்பட்டது. ஸுதர்சனர் பதில் (5-4)ல் இவருக்கு கீதை தெரியாதென்றும் நிரூபிக்கப்பட்டது. இப்போது இவருக்கு மஹாபாரத சரித்ரங்களும் தெரியாது என்று விளங்குகிறது. இவரை வழிகாட்டியாகக்கொண்ட லக்ஷக் கணக்கான பாமரமக்களின் நிலை மிகவும் பரிதாபத்துக்குரியது.

G. துவாரகாநாத், சென்னை.

*87. திருப்பாவை பாடும்போது ஆண்டாளுக்கு ஐந்து வயது என்று உங்களுடைய திருப்பாவை வ்யாக்யான வெளியீட்டில் எழுதியிருக்கிறீர்கள். ஏழு அல்லது எட்டு வயதுக்குமேல் விவாகம் செய்யாமல் இருப்பதும் வழக்கமில்லை. அப்படியிருக்கும் போது ஸ்ரீவேதாந்ததேசிகர் கோதாஸ்துதியில் "ஸ்தநபர நமிதாங்கீ" என்று ஆண்டாளை வர்ணித்திருப்பது எப்படிப் பொருந்தும் ?*

நாச்சியார்திருமொழியை அருளிச்செய்யும்போது ஆண்டாளுக்குப் பருவம் நிரம்பியதாகவே தெரிய வருகிறது. "கொங்கை தன்னைக் கிழங்கோடும்" [நாச்-திரு 13-8] "கொங்கை கிளர்ந்து" [நாச் திரு5-7] என்னும் பாசுரங்கள் இதை வலியுறுத்துகின்றன. ஆகவே தேசிகன் அருளியதில் பொருந்தாமையொன்றுமில்லை. "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே" [நாச்-திரு 1-5] என்று அருளிச்செய்த ஆண்டாள் விஷயத்தில் "ஏழு அல்லது எட்டு வயதுக்குமேல் விவாகம் செய்யாமலிருப்பதும் வழக்கமில்லை" என்ற வாதம் பொருந்தாது.

S. K. ராமராஜன், சென்னை-4.

88. *கீதாசார்யன் சித்திரை இதழில் பெரியநம்பிகளுக்கும். ஸ்ரீராமாநுஜர் தேவிகளுக்கும் நடந்த கிணற்றடிச் சண்டையை விவரிக்கும்போது ஸ்ரீசாண்டில்யன் தமது ஸ்ரீராமாநுஜர் வரலாற்றில் "பெரியநம்பி முன்குடுமிக்காரர் — சோழியர். அதனால் ராமாநுஜர் பத்னிக்கும், பெரியநம்பி பத்னிக்கும் கிணற்றில் நீர் இறைக்கும்பொழுது சண்டை உண்டாயிற்று" என்று தொடங்கி 'ஸ்ரீராமாநுஜபத்னி பெரியநம்பிதேவிகளைப் பார்த்து 'உங்கள் சோழியகுலம் மட்டமானது' என்று ஏசியதாகக் குறிப்பிட்டிருக்கிறார். இது சரியா? பூர்வசிகையுள்ளவர்களை முற்காலத்தில் மட்டமாகக் கருதினார்கள் என்பதற்கு ஏதேனும் ஆதாரமுண்டா?*

பெரியநம்பி அபரசிகையினரே (பின் குடுமியையுடையவரே); முன் குடுமிக்காரரல்ல. இன்றும் ஆங்காங்கு சேவை சாதிக்கும் பெரியநம்பி வம்சத்தவர்கள் பின்குடுமியுடையவர்களாய், பூர்வசிகையுள்ளவர்களோடு கொள்வினை கொடுப்பினையற்றவர்களாகவே வாழ்ந்து வருகின்றனர். ஸ்ரீராமாநுஜபத்னியின் வாதம் 'ஸ்ரீராமாநுஜருடைய வடமகுலத்தைக் காட்டிலும், பெரியநம்பியுடைய ப்ருஹச்சரணகுலம் தாழ்ந்தது' என்பதேயாகும். ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்திலும் பட்டர் விவாஹ ப்ரகரணத்தில் பெரியநம்பியின்குலம் ப்ருஹச்சரணம் (பெரியசரணம்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. பெரியதிருமுடியடைவிலும் ஸ்ரீராமாநுஜர் வடமகுலத்தைச் சேர்ந்தவர் என்றும், பெரியநம்பி ப்ருஹச்சரணகுலத்தைச் சேர்ந்தவரென்றும் கூறப்பட்டிருக்கிறது. முற்காலத்தில் காடாயிருந்த தென்னாட்டிற்கு ப்ராஹ்மணர்கள் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கூட்டமாக வடநாட்டிலிருந்து வந்து குடியேறினர். இவர்களில் முதலில் சோழதேசத்துக்குவந்து குடியேறிய பூர்வசிகையினர் அக்காரணத்தாலேயே 'சோழியர்' என்று அழைக்கப்படுகின்றனர். அதற்குப்பின் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கூட்டமாகத் தென்னாட்டிற்கு வந்த ப்ராஹ்மணர்கள் வடமம், ப்ருஹச்சரணம், அஷ்டஸஹஸ்ரம் என்னும் குலப்பெயர்களைக் கொண்டிருந்தனர். இந்த நாலு கூட்டத்தினரும் ஆசாரபேதம் காரணமாகத் தங்களுக்குள்ளேயே கொள்வினை கொடுப்பினைகள் நடத்திவந்தனர்.

அஜ்ஞானிகளாயிருப்பவர்கள் ஒருவர்க்கொருவர் ஏற்றத்தாழ்வைக் கற்பித்து ஏசி வந்தனர். இந்த ரீதியில் ஏற்பட்ட வடம ப்ருஹச்சரணச் சண்டையே மூற்கூறிய கிணற்றடிச் சண்டை. ஜ்ஞானிகள் என்றுமே இத்தகைய சண்டைகளில் ஈடுபடமாட்டார்கள் என்பது தெளிவு. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானத்திலும், அரும்பதவுரையிலும் "சோழியர் — ஸாமான்யர் சண்டை" என்று குறிப்பிடப்பட்ட சண்டையும் இத்தகையதேயாகும். இன்று கோயில்கள் விஷயமாகத் தென்கலை வடகலைச் சண்டை நடப்பதுபோலே அன்றும் சோழதேசத்துக்கு முதலில் வந்து கோவில்களில் முழு உரிமை பெற்றிருந்த சோழியர்களுக்கும் அவ்வுரிமைகளில் பங்கு பெற விரும்பிய மற்றவர்களுக்கும்ஏற்பட்ட சண்டையே இது. அக்காலத்தில் அபரசிகையினர் 'ஸாமான்யர்' என்று வழங்கப்பட்டார்கள் என்று தெரிகிறது. சோழியர்களை எவரும் அப்படி மட்டமாக வழங்கியதாகத் தெரியவில்லை. அந்தணர்களான ஆழ்வார்களின் தனியன்களில் பூர்வசிகை, அவர்களது சிறப்பைக் காட்டுவதாகவே எடுக்கப்பட்டது. வைஷ்ணவர்களிடையே அஜ்ஞானிகளாயிருந்தவர்களே இத்தகைய சண்டைகளில் ஈடுபட்டார்கள். பட்டர் விவாகத்தின்போதே வடமரான பட்டருக்கும், ப்ருஹச்சரணமான பெரியநம்பி குலத்துப் பெண்ணுக்கும் விவாகம் நடத்தலாமென்று நிர்ணயித்ததன் மூலம் வடமப்ருஹச்சரண வரம்பு தகர்க்கப்பட்டது. விரைவிலேயே அபரசிகையுடைய வைஷ்ணவர்களிடையே வடம ப்ருஹச்சரண அஷ்டஸஹஸ்ர பேதங்கள் அடியோடு தகர்க்கப்பெற்று, மறக்கப்பட்டும் விட்டன. ஸ்மார்த்தர்களிடையே இன்றும் இந்த பேதங்கள் நிலவுகின்றன. வைஷ்ணவர்களிடையேயும் பூர்வசிகை அபரசிகை என்னும் பேதம் மாத்திரம் சிகாபேதம் காரணமாக நிலவிவருகிறது. சில முக்குறும்பர்கள் பூர்வசிகையினரை இக்காலத்தில் தாழ்வாக நினைத்தும் பேசியும் வருகின்றனர். அதை அக்காலத்திற்கே ஆசிரியர் சாண்டில்யன் ஏறிட்டு விட்டார் என்று தெரிகிறது. இவ்விஷயங்களைச் சுருக்கமாக எழுதி கீதாசார்யனுக்கு அனுப்பியிருந்தோம். வைகாசி கீதாசார்யனில் வெளிவரவில்லை. ஆனி இதழில் வெளிவரக்கூடும். கீதாசார்யன் சித்திரை இதழில் ஸ்ரீராமாநுஜர் சித்திரத் தொடர் கதையில் பெரியநம்பி அபரசிகையோடேயே சித்திரம் தீட்டப்பட்டுள்ளதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

ரா. ராஜகோபாலாச்சாரி *M.A.*, காரைக்கால்.

*89. ஜூன் கலைமகள் விடையவன் பதிலில் "கம்பர் இராமனை மும்மூர்த்திகளின் திருஅவதாரம் என்று சொல்லுகிறார்" என எழுதப்பட்டுள்ளது. இதனை விமர்சித்தருள வேண்டுகிறேன்.*

கி. வா. ஜகந்நாதனைப்போன்ற ஒரு பெரும்புலவர் இப்படிப் பொய்யை எழுதிவருவது இந்நாட்டில் அத்வைதிகளிடையே நடுநிலைமையே செத்துவிட்டது என்பதைக் காட்டுகிறது. "கம்பன் சைவனே; அவன் ராமனை மும்மூர்த்திகளின் அவதாரமாகக் கூறுகிறான்" என்று ம. பொ. சி. எழுதியதற்கு 'கம்பனின் சமயம்' இரண்டாவது பாகத்தில் நாம் விரிவாக பதில் எழுதி வருகிறோம். விரைவில் நூல்வடிவிலும் வெளியிடுவோம். இங்கு சுருக்கமாகக் கூறுகிறோம்: திருஅவதாரப்படலத்தில் "இராவணனால் வரும் இடரைப் போக்கவேண்டும் என்று சிவன், பிரமன் முதலான எல்லா தேவர்களும் திருமாலை அடிதொழுது இறைஞ்சினார்கள்" என்றும், "தசரதன் மதலையாய் வருதும் தாரணி" [22] என்று திருமால் அப்யமளித்தான் என்றும் கூறுகிறான் கம்பன். அவதாரப்பாடலிலும் "ஒருபகலுலகெலாம் உதரத்துட்பொதிந்து, அருமறைக்குணர்வரும்அவனை அஞ்சனக் கருமுகில் கொழுந்து எழில்காட்டும் சோதியை, திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை" [102] என்று திருமாலே இராமனாகத் திருவவதரித்தான் என்று தெளிவாகக் காட்டுகிறான். காவியமுழுதிலும் இதை நூற்றுக்கணக்கான பாடல்களில் வலியுறுத்துகிறான். பிரமனும், சிவனும் ஜீவர்களே என்றும், திருமாலே அவர்களுக்கு அறிவளித்து, அவர்கள் மூலம் படைத்தல் தொழிலையும் அழித்தல் தொழிலையும் அவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து செய்கின்றான் என்றும் பல பாடல்களில் காட்டுகின்றான். திருமாலே சிவனுக்கும் பிரமனுக்கும் அந்தர்யாமியாகையால் அவர்களுடைய இருப்பிடங்களும் இவனுடைய இருப்பிடங்களே, அவர்களுடைய ஆயுதங்களும் இவனுடைய ஆயுதங்களே என்னும் கருத்திலே "மும்மைத்தாய காரணன் கையில் ஏந்தி சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்" [சுந்தர-பிணிவீட்டு படலம் 80] என்று கூறியிருக்கிறான் கம்பன். மும்மூர்த்திகளும் இராமனாக அவதரித்தனர் என்று கூறவேயில்லை.

இதற்கு முந்திய பாடலில் "பொதுநின்று முதலே என்ற வாரணம் காக்கவந்தான் அமரரைக் காக்கவந்தான்" என்று கஜேந்திரன் 'ஆதிமூலமே' என்று பொதுவாகக் கூப்பிட, பிரமன், சிவன் முதலான தேவர்கள் 'நான் ஆதிமூலமல்ல; நான் ஆதிமூலமல்ல' என்று கைவிரிக்க, அவனைக்காக்க ஓடி வந்த திருமாலே இராமன் என்று மிகத்தெளிவாகக் கூறி யிருக்கிறான். அப்படியிருக்க, இப்பாடலிலிருந்து இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் என்று எப்படித் தேறும்? ம. பொ. சி. போன்ற அரசியல் தலைவர்கள் இத்தகைய மோசடியில் ஈடுபடுவதை மன்னிக்கலாம். கி. வா. ஜவைப் போன்ற பெருப்புலவர்கள் எழுதுவதை எப்படி மன்னிப்பது?

*S. லக்ஷ்மீநாராயணன், திருச்சி-17.*

*90. ஆகஸ்ட் கலைமகளில் "நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை உலகமும் முகிழ்த்தன முறையே" என்னும் பாரதம்பாடிய பெருந்தேவனாருடைய சங்க இலக்கியக் கடவுள் வாழ்த்துப் பாடலில் 'சிவனிடமிருந்து உலகங்கள் தோன்றின' என்று கூறப்பட்டுள்ளதாக வெளி வந்துள்ளது. இப்பொருள் சரியானதா?*

இதே பெருந்தேவனார் நற்றிணைக்கடவுள் வாழ்த்தில் "இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய வேதமுதல்வன் என்ப தீதறவிளங்கிய திகிரியோனே" என்று சக்கரதாரியான திருமாலே அனைத்துலகையும் தன்னுள் அடக்கிய வேத முதல்வன் என்று பாடியிருக்கிறார். இவர் எங்குமே சிவனைப் பரம்பொருளாகக் கூறியதில்லை. ஆகையால், 'நீலமேனி ஒருவன்' 'வாலிழை பாகத்தொருவன்' என்று இரண்டு தொடர்களையும் ஒருவன் என்னும் சொல்லுக்கு விசேஷணமாகக்கொண்டு "நீலமேனியையும் திருவாபரணங்களையணிந்த திருமகளைத் தன் திருமார்பாகிற பகுதியிலும் கொண்ட ஒப்பற்றவனான திருமாலின் திருவடி நிழலின் கீழ் எல்லா உலகும் தோன்றின" என்று பொருள்கொள்வதே பொருந்தும். 'வாலிழை ஆகத்து' என்று பாடம் இருந்திருக்கக்கூடும். எப்படியிருந்தாலும் பாரதம் பாடிய பெருந்தேவனார் சங்ககாலத்துக்கு மிகவும் பிற்பட்டவர். "சங்ககாலத் தமிழர்கள் திருமாலையே பரம்பொருளாகக் கொண்டார்கள்" என்னும் நமது நிர்ணயத்தை இதுகொண்டு அசைக்க இயலாது.

கோ. ராதா, மன்னார்குடி.

*91. விடுதலை ஜூன் 11, 12 தேதிகளில் திராவிடர் கழக பொதுச்செயலாளர் திரு. கி. வீரமணி, M.A.B.L. அவர்கள் "சங்கராச்சாரி-யார்?" என்று ஆற்றிவரும் தொடர்சொற்பொழிவில் தாங்கள் வெளியிட்டுள்ள 'சங்கரரும் வைணவமும்' என்ற புத்தகத்தை மேற்கோள் காட்டியுள்ளார். காஞ்சீ காமகோடி பீடம் போலியான மடம் என்று பல்வேறு ஆதாரங்களையும் கோர்ட்டு தீர்ப்புக்களையும் காட்டி நிருபித்து வருகிறார். இது பற்றி தங்கள் மேலான கருத்தை அறிய ஆவலாயுள்ளேன்.*

ஒரு சில நூற்றாண்டுகளுக்குமுன் ஏற்பட்ட கும்பகோண மடத்தை ஆதிசங்கரர் ஸ்தாபித்த மடமாக ஆக்குவதற்காகக் காமகோடிப் பெரியவர் அரசியல் வாதிகளையும், பொதுஜனப் பத்திரிகைகளையும், பிரமுகர்கள் பலரையும் வசப்படுத்திக் கொண்டு ஓயாமல் பொய்ப்பிரசாரம் செய்வித்து வருகிறார். "பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே" என்ற பாடலின்படி பொதுமக்கள் பலர் இப்பொய்யை மெய்யாகவே நினைக்கின்றனர். இத்தகைய பொய்களை அம்பலப்படுத்த கி. வீரமணி ஒருவர் மாத்திரம் போதாது. அரசியல் தொடர்பற்ற நேர்மையாளர் பலர் முன்வர வேண்டும். இதுபற்றி ஸுதர்சனம் 429ல் நாம் எழுதியிருக்கும் தலையங்கமும் காணத்தக்கது. இத்தலையங்கம் இந்த சதகத்துக்கு அனுபந்தமாக இணைக்கப்பட்டுள்ளது.

*V.* ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம் (92, 93 கேள்விகள்)

*92. மட்டரகமான கதைகளை வெளியிடும் வாரப்பத்திரிகைகளோடு உறவை விலக்கிக்கொள்ளவேண்டும் என்று தாங்களும், காமகோடி பீடாதிபதிகளிடம் பெருமதிப்புள்ள துக்ளக் ஆசிரியர் சோவும் கேட்டுக்கொண்டதற்கு ஏதேனும் பயன் விளைந்ததா?*

ஒருபயனும் விளையவில்லை. இந்தப் பத்திரிகைகளின் பலத்தினாலேயே இப்பீடாதிபதிகள் 'நடமாடும் தெய்வங்கள்' என்னும் பெருமையைப் பெற்றார்கள். இவர்களுடைய புகைப்படமோ, எழுத்துக்களோ வெளிவராத இதழ்கள் இப்பத்திரிகைகளில் கிடையாது. பிரமாணங்களைக் காட்டி வெற்றிகொள்ள முடியாத வைணவத்தைப் பொய்ப்பிரசாரத்தாலே பலவீனப்படுத்துவதற்கும் பல வருஷங்களாக இப்பத்திரிகைகள் பேருதவி புரிகின்றன. இத்தகைய விளம்பர சாதனத்தை இழக்கப் பீடாதிபதிகள் இசையமாட்டார்கள் என்பது வெளிப்படை.

"ஸந்யாஸிகள் விளம்பரத்தை எதிர்பார்க்கக்கூடாது. காசு நோட்டு முதலியவைகளைக் கையாலும் தொடக்கூடாது" முதலான நெறிமுறைகளை நாம் இக்கலியுகத்தில் எதிர்பார்க்கமுடியா தன்றோ! ஸுதர்சனம் 429ல் "வாரப்பத்திரிகைகளும் 'நடமாடும் தெய்வங்'களும்" என்ற தலைப்பில் இதுபற்றி விரிவாக எழுதியுள்ளோம். இந்த சதகத்தின் அநுபந்தமாகவும் அதை அளித்திருக்கிறோம்.

93. '83ஆகஸ்ட்மாத ஸ்ரீரங்கநாதபாதுகாவில் மதுராந்தகம் ஸ்வாமி எழுதியுள்ள கட்டுரையில் "பரமபதித்த மஹாவித்வான் காஞ்சீ ப்ர. ப. அண்ணா ஸ்வாமி மைசூர் பரகாலமட ஸ்வாமியிடம் உபாயாநுஷ்டானம் செய்துகொண்டார்" என்று எழுதியிருக்கிறாரே; இது உண்மையா?

அண்ணா ஸ்வாமி மிகத் தீவிரமான தென்கலைத் தலைவர் என்பது உலகம் அறிந்தது. அவர் கடைசிவரையில் அவ்வண்ணமே வாழ்ந்துவந்தார் என்பதும் அனைவருக்கும் தெரியும். அவர் பரமபதித்த பின்பு, அவர் ஒரு வடகலை ஸந்யாஸியிடம் உபாயாநுஷ்டானம் பெற்றவர் என்று எழுதுவது எப்படி உண்மையாயிருக்கமுடியும்? அப்படி உண்மையாயிருந்தால் மறுக்கமுடியாத புகைப்படம்போன்ற ஆதாரங்களைப் பாதுகா வெளியிடவேண்டும். இயலாவிடில் ஆதாரமற்ற இச்செய்தியை வெளியிட்டதற்கு வருத்தம் தெரிவிக்கவேண்டும். இதுபற்றி ஸுதர்சனம் 429இல் உபதலையங்கத்தில் குறிப்பிட்டு இந்த சதகத்துக்கு அநுபந்தமாக இணைத்துள்ளோம்.

*K. A.* பார்த்தசாரதி, சென்னை-44.

94. *தொழில்திபர் திரு. நா. மகாலிங்கம் "திருப்பதி கோவிலைத் திருத்தி அமைக்கவேண்டும் என ஒரு திட்டத்தை வெளியிட்டு, "அந்த சம்பந்தப்பட்டவர்கள் பரிசீலிப்பார்களா?" என்று கேள்விக் குறியிட்டிருக்கிறார். இந்த விரிவாக்கிண்டித்து நான் எழுதிய கட்டுரையை 'ஞானபூமி' பிரசுரிக்கவில்லை. தங்கள் கருத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.*

கோயிலின் அமைப்பையே மாற்றவேண்டுமென்றும், புதிதாக ஒரு விமானத்தையே எழுப்பவேண்டும் என்றும் மனம் போனபடி திட்டத்தை வெளியிட்டிருக்கிறார் தொழிலதிபர். இது ஆகமங்களுக்கும் சிற்பசாஸ்த்ரத்துக்கும் மிகவும் முரணானது. மதத்தலைவர்களும் பொதுமக்களும் இதை விரும்பமாட்டார்கள்; ஆகையால் அதிகாரிகளும் இதைச் செயல்படுத்தமாட்டார்கள் என்றே நம்புகிறோம்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*95. 12—9—83 'ஹிந்து' பத்திரிகையின் கடைசிப் பக்கத்தில் வெளிவந்துள்ள உபந்யாஸச் சுருக்கத்தில் ப்ரஹ்மஸ்ரீ T. S. பாலசுப்பிரமணிய சாஸ்திரிகள் ''நமது சாஸ்திரங்கள் ஒவ்வொரு தெய்வத்தையும் மனிதகுலத்துக்கு நன்மையளிப்பவையாகப் பேசுகின்றன. பல கடவுளர் உள்ளனர். மனிதன் எவரை வேண்டுமானாலும் வழிபடலாம். எல்லாக் கடவுளுமே பக்தர்களை ரக்ஷிப்பதால் கடவுளர்க்குள் ஏற்றத்தாழ்வு கிடையாது. எந்த தெய்வத்திடம் பக்திபண்ணினாலும் பிறவித்துன்பம் நீங்கிவிடும். ஆனால் ராமன் எல்லா வகுப்பினராலும் வழிபடப்படுபவன், பரம் பொருளாக ஏற்கப்பட்டவன் என்பதை எவராலும் மறுக்க முடியாது'' என்று பொருள்படப் பேசியிருக்கிறார். இதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

உபநிஷத்துக்கள் ''எல்லா தெய்வங்களுக்கும் மேலே ஒரு தெய்வம் இருக்கிறது. அந்த தெய்வமே மற்ற எல்லா தெய்வங்களையும் உலகனைத்தையும் படைத்தது. அனைவரையும் ஸம்ஸாரத்தில் கட்டிவைத்திருப்பது அந்த தெய்வமே. ஸம்ஸார பந்த ஹேதுவான அவனை உபாஸித்தால்தான் அல்லது சரணமடைந்தால்தான் ஸம்ஸாரக்கட்டு நீங்கும். பிறவித்துன்பம் அடியோடு ஒழியும். ஸம்ஸாரத்தில் நம்மோடு கட்டுண்டு கிடக்கும் மற்ற தெய்வங்களை உபாஸித்தால் இவ்வுலகப் பலன்கள் கிட்டுமேயொழிய, பிறவித் துயரம் நீங்கி மோக்ஷப் பேரின்பம் கிட்டாது'' என்று தெளிவாக முழங்குகின்றன. ஸ்ரீராமாயணம், மஹாபாரதம் எனும் இதிஹாஸங்களும், மனு முதலான ஸ்ம்ருதிகளும், விஷ்ணுபுராணம் பாகவதம் முதலான ஸாத்விகபுராணங்களும் எல்லாச்சொற்களாலும் சொல்லப்படும் அந்தப் பரம்பொருள் நாராயணனெனப்படும் தேவதேவனே எனத் தெளிவாக முழங்குகின்றன. பாலகிருஷ்ணசாஸ்த்ரிகள் போன்றவர்களுக்கு உபந்யாஸங்கள்மூலம் பிழைக்க வழி காட்டியிருப்பவை இந்த சாஸ்த்ரங்களேயாகும். அப்படியிருக்க, கறுப்பு, காட்டேரி, குழுமாயி, கமுகாண்டி, ஐயப்பன் முதலான எந்த தெய்வத்தை வழிபட்டாலும் மோக்ஷம் கிடைக்கும் என்று சாஸ்த்ரி கூறுவது இந்த சாஸ்த்திரங்களுக்குச் செய்யும் துரோகமேயாகும். குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கையாலே ''ராமனே அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு வழிபடப்படும் பரம்பொருள்'' என்று சாஸ்திரி கூறியிருப்பதிலிருந்து அறிவாளிகள் உண்மையை உணர்ந்துகொள்ளவேண்டும்.

S. லக்ஷ்மீநாராயணன், திருச்சி-17.

*96. விகடனில் பரணீதரனும், கல்கியில் ஆனந்தியும், இதயத்தில் பாஸ்கரமார்த்தாண்டனும் எழுதிவரும் தலபுராணக் கதைகளின் பயன் என்ன?*

தேரழுந்தூர் முதலான பல ஊர்களின் தலபுராணங்களை எழுதிவரும்போது சிவன் பார்வதியைப் பசுவாகப்போகும்படி சபித்துவிட்டாரென்றும், பசுவாயிருந்த பார்வதியை மேய்த்ததால் திருமால் ஆமருவியப்பன் என்று பெயர்பெற்றாரென்றும், அந்தப் பசு தங்கிய இடங்களில் ஒன்று கோமகால் எனும் 'கோமல்' என்னும் ஊரே என்றும் எழுதுகிறார் பரணீதரன். இதுபோன்ற பொய்யான தலபுராணக் கதைகளை இம்மூன்று பத்திரிகைகளிலும் விடாமல் எழுதிவரப்படுகிறது. இதனால் நம் தெய்வங்களுக்கு இழிவு ஏற்படுகிறதேயொழியப் பெருமை சேர்வதில்லை. 'சிவன் தன் மனைவிக்குச் சாபம்கொடுத்தான்; அதனால் அவள் பசுவானாள்' என்று எழுதுவது சிவனுக்கோ பார்வதிக்கோ பெருமையாகுமா? விஞ்ஞான உண்மைகளும், பகுத்தறிவு வாதங்களும் வளர்ந்துவரும் இவ்விருபதாம் நூற்றாண்டின் இறுதியில் இத்தகைய அபத்தக் கதைகளை நூற்றுக்கணக்கில் வெளியிட்டு இவற்றையே இந்துமதமாக்கி வேதாந்த ரஹஸ்யங்கள் நிறைந்த வைதிகமதத்தை இப்பத்திரிகைகள் சாகவடித்து வருவதைக்கண்டு அழுவதா, சிரிப்பதா என நமக்கு விளங்கவில்லை.

N. ஸ்ரீநிவாஸய்யங்கார், திருக்குறுங்குடி.

*97. கீதையில் "ஸேனைத்தலைவர்களில் கந்தன் நானே" என்று சொன்னதுபோலே "விநாயகன் நானே" என்று சொல்லாததிலிருந்து முழுமுதல்வன் விநாயகனே என்று விளங்குகிறது என்று சைவர்கள் கூறுகிறார்கள். இதற்குத் தக்க பதில் கூறவேண்டுகிறேன்.*

இந்தச் சைவர்கள் கீதையைப் பிரமாணமாக ஒப்புக்கொள்கிறார்கள் என விளங்குகிறது. அதில் கண்ணன் பலவிடங்களில் தன்னையே முழுமுதல்வனாகக் கூறியிருப்பதை இவர்கள் ஏன் காணவில்லை? ருத்ரனையும், கந்தனையும் தன் விபூதியாகக் கூறுகிறபடியால் அவர்கள் முழுமுதல்வர் அல்லர் என்று இவர்கள் ஒப்புக்கொள்கிறார்களா? இவர்கள் கூறும் வாதத்தை ஒப்புக்கொண்டால் கண்ணன் தன் விபூதியாகக் கூறாத மற்றும் பல தெய்வங்களையும் முழுமுதல்வர்களாக ஏற்க

வேண்டிவருமே. இதை இவர்கள் ஏற்கிறார்களா? இது போன்ற கேள்விகளை இவர்களைக் கேட்டால் இவர்கள் 'திரு திரு' என்று விழிப்பதை நீங்கள் கண்டு களிக்கலாம்.

G. சேஷரத்தினம், பங்களூர்.

*98. 10—9—83 காலை 8-30—9-30மணியளவில் பங்களூர் வானொலியில் "கண்ணனுக்கு ஸ்யமந்தகமணியைத் திருடியதாக அபவாதம் ஏற்பட்டது விநாயக சதுர்த்தியன்று நாலாம் பிறைச் சந்திரனைப் பார்த்ததாலேயே" என்று ஒலிபரப்பப் பட்டது. இதற்கு ஸ்யமந்தகமணி விருத்தாந்தத்தைக்கூறும் நூல்களில் ஏதேனும் ஆதாரமுண்டோ?*

பழைய நூல்களில் எந்த ஆதாரமும் கிடையாது. ஸுப்ர ஸித்தமான புராணக்கதைகளோடே சேர்த்து, சிறு தெய்வங் களுக்குப் பெருமை சொல்லிக்கொள்வது சைவர்களின் வழக்கம். அந்த வழக்கப்படி கற்பிக்கப்பட்ட பொய்க் கதைகளில் ஒன்றே இது.

K. A. தேவராஜன், திருநெல்வேலி. (99, 100 கேள்விகள்)

*99. திருவாரூர்ச் சிவன் விஷ்ணுவால் வழிபடப்பட்டவன் என்று இதயத்தில் எழுதியிருப்பதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிகாச புராணங்களைக்கொண்டு சிவ பரத்வத்தை நிலைநாட்ட முடியாத சிலர் ஒரு சில நூற்றாண்டு களுக்குள் சிவன் கோவில் ஸ்தலபுராணங்களில் சிவலிங்கத்தை ராமன் பிரதிஷ்டை செய்தான் என்றும், விஷ்ணு வழிபட்டார் என்றும் எழுதிவைத்துக்கொண்டார்கள். வேதங்கள் முழு முதல்வனாகத் திருமாலைக் கூறியிருப்பதற்கு முரணாகையாலே இவற்றை அவைதிகர்களின் பிதற்றல்கள் எனக் கொண்டு நாம் பொருட்படுத்தாமலிருப்பதே நல்லது.

*100. வைஷ்ணவம் முன்னேறுவதற்கு வழிகளைத் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன்.*

மற்ற எல்லா மதங்களும்போலே வைஷ்ணவமும் வரவர நலிவடைந்து வருவதைக் கண்டுவருகிறோம். அடுத்த தலை முறையில் வைஷ்ணவம் மிகவும் நலிவடைந்துவிடுமோ என்று அஞ்சவேண்டியுள்ளது. இன்று இளைஞர்களாயிருப்பவர்களே அடுத்த தலைமுறையில் வைஷ்ணவத்தை நடத்திச் செல்ல வேண்டியவர்கள். அத்தகைய இளைஞர்கள் ஒவ்வொரு

திவ்யதேசத்திலும் நகரத்திலும் சுயநலமில்லாமல் தினந்தோறும் சிறிது நேரமாவது தங்களுக்குத் தெரிந்தவர்களிடம் வைஷ்ணவ ப்ரசாரம் செய்ய முன்வரவேண்டும். நமது 'ஸுதர்சனர் பதில்', 'சங்ககாலத் தமிழர் சமயம்' முதலான நூல்களை நூற்றுக் கணக்கான இளைஞர்கள் ஆங்காங்குப் படித்துப் பாராட்டி வருவதை நாம் காண்கிறோம். இவர்கள் தங்களுக்குத் தெரிந்தவர்களிடமும் இவ்விஷயங்களைக் கூறி தினந்தோறும் பிரசாரம் செய்தால் நூற்றுக்கணக்கான இவர்களும் ஆயிரக் கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் லக்ஷக்கணக்காகவும் வளர இடமுண்டு. "ஸங்கே ஶக்தி: கலௌ யுகே" [கலியுகத்தில் கூட்டம் சேர்வதாலேயே பலம் உண்டாகிறது] என்னும் வசனப்படி சுயநலமில்லாமல் பல்லாயிரக்கணக்கான இளைஞர்கள் மதப்ரசாரத்துக்குத் தங்களுடைய நேரத்தைச் சிறிதாவது செலவிட முன்வருவதாலேயே வைஷ்ணவம் முன்னேற முடியும்.

திருவாலி சே. ஸ்ரீநிவாஸன், விசாகபட்டிணம். (101, 102 கேள்விகள்)

*101. "எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து" [திருவாய் 2-8-9] எனக் கிருஷ்ணாவதாரத்தைப் பற்றி ந்ருஸிம்ஹாவதாரகாலத்திலேயே பிரகலாதன் வாய்மூலம் நம்மாழ்வார் அருளியிருப்பது எங்ஙனம் பொருந்தும்?*

இங்கு 'கண்ணன்' என்றது மூலமூர்த்தியான நாராயணனையே. '(அழகிய) கண்ணையுடையவன்' என்னும் பொருளில் திருமாலைக் குறிக்கும். கண் என்றால் இடம். எல்லாவிடத்திலும் வியாபித்திருப்பவன் என்ற பொருளிலும் இது திருமாலைக் குறிக்கும்.

*102. ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்தைப் பிறர்கேட்குமாறு பாராயணம் செய்வது, அல்லது தனக்கே கேட்குமாறு பாராயணம் செய்வது, அல்லது வாய் மற்றும் உதடு அசையாமல் மனத்திற்குள் தியானம் செய்வது—இம்மூன்றில் பெரியோர்கள் உசிதமாக அனுஷ்டிப்பது எம்முறை?*

பிறர் கேட்குமாறு பாராயணம் செய்வதையே பெரியோர்கள் அநுஷ்டிக்கிறார்கள். ஏனெனில்; அப்படிப் பாராயணம் செய்வதால் பாராயணம் செய்யும் தமக்கு மாத்திரமல்லாமல் கேட்கும் பிறர்க்கும் க்ஷேமம் விளைகிறதன்றோ.

ஏழாவது சதகம் நிறைவுற்றது.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-35] [ஒளி-6

# ஸ்ரீமதழகியசிங்கரும், 'கல்கி'யும்

[ஸுதர்சனம் ஆசிரியர்]

11—4—82 'கல்கி' இதழில் ஸ்ரீமதழகியசிங்கரின் பேட்டியை வெளியிட்டிருப்பது பற்றி ஸுதர்சனர் பதில் ஐந்தாவது சதகத்தின் முன்னுரையில் நாம் பாராட்டியிருந்தோம். 25—4—82 கல்கி இதழில்—ஸ்ரீமதழகியசிங்கரின் கருத்துக்களுக்கு 'கல்கி' வாசகர்கள் ஏராளமானவர்கள் கண்டனம் தெரிவித்திருப்பதாகவும், "அக்கருத்துக்களை வெளியிட்டிருக்கக்கூடாது; அழகியசிங்கரின் உருவப்படத்தை அச்சிட்டிருக்கக் கூடாது" என்று பலர் எழுதியிருப்பதாகவும் வெளிவந்துள்ளது. "மாற்றுக்கருத்துக்களை அமுக்கிவிடக்கூடாது; அவற்றை வெளியிட்டு விமர்சிப்பதே நியாயம். வீரமணி, இந்திராகாந்தி முதலானவர்களுடைய கருத்துக்களையே நாம் வெளியிடும்போது அஹோபிலமடம் ஜீயர் ஸ்வாமியின் கருத்தை வெளியிட்டதில் தவறில்லை; ஹிட்லரின் உருவப்படத்தையே 'கல்கி'யில் வெளியிட்டிருக்கும்போது ஜீயரின் படத்தை வெளியிட்டதும் தவறல்ல"—என்று பொருள்பட 'கல்கி' ஆசிரியர் பதில் எழுதியிருப்பது நேர்மையானது. 9—5—82 'கல்கி' இதழில் "மீண்டும் ஜீயர்" என்னும் தலைப்பில் கல்கி ஆசிரியர் எழுதியிருக்கும் தலையங்கமும் நேர்மையானது.

தாம் கடைப்பிடிக்கும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்தின் கொள்கைகளை அந்த மதத் தலைவர்களில் ஒருவரான ஸ்ரீமதழகியசிங்கர் வெளியிட்டதற்கு, பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக வைஷ்ணவமதம் வீறுபெற்று விளங்கிவரும் இத்தமிழ்நாட்டில் இத்தனை எதிர்ப்பு ஏற்படுவதற்குக் காரணமென்ன? என்பதை விமர்சிக்க வேண்டிய கடமை அனைவருக்கும் உண்டு. 'கல்கி'க்கும் உண்டு. ஆனால் 'கல்கி' இக்கடமையை நிறைவேற்றுது. கசப்பான உண்மை

களைச் சொல்லுவதையே தலைப்பொறுப்பாகக் கொண்ட நாமே அடுத்த பாராக்களில் அந்தக் கடமையை நிறைவேற்றுகிறோம்.

இந்தத் தமிழ்நாட்டில் ஆயிரம் வருஷங்களுக்கு மேலாக வைஷ்ணவம், சைவம், அத்₃வைதம் என்னும் மூன்று மதங்களும் லக்ஷக்கணக்கான மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன என்பதை எவரும் மறுக்க இயலாது. சங்கநூல்களை நடுநிலைநின்று ஆராயும் போது, திருமால் ஒருவனே பரம்பொருளாக அவற்றில் பாடப்பட்டிருப்பதையும், சிவன், சக்தி, முருகன் முதலான வேறெந்த தெய்வமும் அனைத்துலகுக்கும் காரணமான முழு முதல்வராகக் குறிக்கப்படவில்லை என்பதையும் தெளிவாகக் காண்கிறோம். "உலகம் பொய்; பரம்பொருளுக்கு உருவமில்லை; கு₃ணமில்லை; மோக்ஷலோகமில்லை" என்று, கூறும் அத்₃வைதமதமும் எங்கும் குறிக்கப்படவில்லை—என்றும் காண்கிறோம். இவற்றிலிருந்து "சங்ககாலத்தில் வைஷ்ணவமதம் ஒன்றே வைதிக மதமாகக் கொள்ளப்பட்டிருந்தது, சைவம், சாக்தம் அத்வைதம் முதலான மதங்கள் சங்ககாலத்தில் இல்லை" என்று மிகத் தெளிவாக விளங்குகிறது. நாயன்மார்கள் காலத்திலிருந்து சைவமும், ஆதிசங்கரர் காலத்திலிருந்து அத்வைதமும் தலையெடுத்தன என்று பிற்கால நூல்களிலிருந்து அறிகிறோம். இவர்களுடைய காலம் ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்குட்பட்டது என்பது ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் இசைந்தது. ஆதிசங்கரருக்குச் சற்று முன்னும் பின்னும் தோன்றியவர்களாக ஆராய்ச்சியாளர்களால் கூறப்படும் ஆழ்வார்கள் தம் நூல்களில் சங்ககாலத் தமிழர் சமயமான விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்தை நிலைநாட்டினார்கள். அவர்களை அடியொற்றிய நாதமுனிகள், யாமுனமுனி (ஆளவந்தார்), ஸ்ரீராமாநுஜராகிற யதிராஜர் முதலான நூற்றுக்கணக்கான பூர்வாசார்யர்களும் (இன்றும் அச்சிடப்பெற்றிருக்கும்) ஆயிரக்கணக்கான க்ரந்தங்களில் "அத்வைதமும் சைவமும் வேதம் முதலான ப்ரமாணங்களுக்கு ஒத்தவையல்ல" என்று நிலைநாட்டி, விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்தை பாரத தேசமெங்கும் பரப்பினர். இதனால் அத்வைதிகளுக்கும் சைவர்களுக்கும் வைஷ்ணவர்களிடம்கடுமையான விரோதம் ஏற்பட்டது. 'கிருமிகண்டன்' என்று பெயர் பெற்ற குலோத்துங்கசோழன் பல விஷ்ணுகோயில்களை இடித்தான், திருச்சித்ரகூடம், காஞ்சியில் கள்வர், நிலாத்திங்கள்துண்டத்தான் சன்னிதிகள் முதலானவை சிவன்கோயில்களுக்கு உட்படுத்தப்பட்டன. கூரத்தாழ்வான் கண்ணிழந்தார். பெரிய நம்பி உயிரிழந்தார். எம்பெருமானார் கிருமிகண்டனுடைய உபத்ரவம் தாங்காமல் மேல்கோட்டை திருநாராயணபுரம் எழுந்தருளினார். இது தவிர, இளங்கோவடிகளாலேயே சிலப்பதிகாரத்தில் விஷ்ணுகோயி

ஸாகப் பாடப்பெற்றிருக்கும் திருமலையையும் சைவர்கள் சிவன்கோயிலாக்க முயன்று ஸ்ரீராமாநுஜர் தலையிட்டதனாலே தோல்வியுற்றனர். பெரும்பாலும் வைஷ்ணவர்களாக இருந்த அத்வைதிகளும் ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றில் விசிஷ்டாத்வைத ஆசார்யர்கள் அத்வைதத்தைத் தலையெடுக்கமுடியாதபடி கண்டித்திருப்பதைக் கண்டு கொதிப்புற்று, அவர்களைப் பழிவாங்கவேண்டும் என்னும் கருத்தாலே, விசிஷ்டாத்வைதிகளுக்கு உயிர்நாடியான விஷ்ணுபரத்வத்தை மறுப்பதற்கும் மறைப்பதற்குமான பல காரியங்களைச் செய்யத்தொடங்கினார்கள். இம்முயற்சியில் அத்வைத மதஸ்தாபகரும் 'விஷ்ணுவே ஸகுணப்ரஹ்மம்' என்று தமது பாஷ்யங்களில் பல இடங்களில் நிலைநாட்டியிருப்பவருமான ஆதிசங்கரர் கருத்துக்கு முரணான சைவசாக்த மதக்கருத்துக்களைக் கூறும் 'சிவாநந்தலஹரி' 'ஸௌந்தர்யலஹரி' முதலான துதிநூல்களை இயற்றி, அவற்றை ஆதிசங்கரர் பேரில் ஏற்றிட்டனர். அத்வைத மதஸ்தாபகரான அவரை ஷண்மதஸ்தாபகராக்கி, அவர் கனவிலும் கருதாத சாக்தம், சைவம், காணபத்யம், கௌமாரம் முதலான மதங்களை அவர் ஸ்தாபித்தார் என்று பெரும் பொய்யைப் பிற்கால நூல்களில் எழுதிவைத்தார்கள்.

இந்த விரோதமனப்பான்மை அத்வைத சைவ மஹாஜனங்களிடையே இந்த நூற்றாண்டிலும் தொடர்ந்தது. பெரும்பாலான சைவர்களும், அத்வைதிகளும் 'சர்வசமய சமரசமதம்' என்னும் அரசியல் மதத்தைத் தழுவி, வைஷ்ணவர்களையும் வைஷ்ணவமதத்தையும் இழிவுபடுத்துவதையே போதுபோக்காகக்கொண்டனர். இந்தப் பிரசாரத்தில் சைவாத்வைதிகளால் நடத்தப்பெறும் கல்கி, கலைமகள், விகடன், இதயம், அமுதசுரபி முதலான பத்திரிகைகளும் கடந்த ஐம்பது வருஷங்களாகப் பெரும்பங்கு வகிக்கின்றன. சுமார் நாற்பது வருஷங்களுக்குமுன் திரு. டி.கே.சி. "விழுமியது சொற்றனை" [கம்பராமாயணம் ஆரண்ய.அகத்தியப்படலம் 25] என்னும் பாடலில் "முழுமுதல்வன்" என்னும் தொடருக்கு 'கல்கி'யில் 'சிவன்' என்று பொருள் எழுதியபோது, கல்லூரியில் படித்துவந்த நாம் 'அத்தொடர் விஷ்ணுவையே குறிக்கும்' என்று ஆதாரத்தோடு எழுதினோம். அக்கடிதம் 'கல்கி'யிலும் பிரசுரிக்கப்பட்டது. நம்மாழ்வாரையும் முதலாழ்வார்கள் மூவரையும்— மீ.பா. சோமுவின் துணைகொண்டு, திரு. ராஜாஜி அவர்கள் 'கல்கி'யில் எழுதிய உரையில் சமரசவாதிகளாகச் சித்திரித்தபோது, தக்கஆதாரங்களுடன் நாம் ஸுதர்சனத்தில் மறுப்பு எழுதினோம். 'கல்கி'க்கு அந்த மறுப்புக்களை வெளியிடும் நேர்மையில்லை. திரு. ராஜாஜி மாத்திரம் மத விஷயங்கள் தமக்கு அவ்வளவாகத் தெரியாது என்று நமக்குக் கடிதம் எழுதினர். அதை ஸுதர்சனத்திலும் வெளியிட்டோம். 'கல்கி' திரு.

ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தம் நாவலொன்றில் ஆழ்வார்க்கடியான் என்னும் ஒரு வைஷ்ணவரைப் பாத்திரமாகத் தீட்டி வைஷ்ணவத்தைக் கேலிசெய்திருந்ததும், கவிஞர் கண்ணதாசன் 'கல்கி'யில் குலசேக ராழ்வாரை ஓர் ஆதாரமுமில்லாமல் சைவராகச் சித்திரித்து நாவல் வெளியிட்டதும் உலகறிந்த விஷயம். இத்தகைய செயல்கள் கடந்த ஐம்பது வருஷங்களாக, 'கல்கி' 'கலைமகள்' 'விகடன்' முதலான பத்திரிகைகளில் இடைவிடாமல் செய்யப்பட்டு, தமிழ்நாட்டில் பெரும்பான்மை மக்களான சைவாத்வைதிகளிடையே வைஷ்ணவ விரோத மனப்பான்மை உருவாக்கப்பட்டுள்ளது. ஸுதர்சனத்தில் பல கட்டுரைகளிலும், ஸுதர்சனர் பதில்களிலும் இவ்வடாதசெயல்களை நாம் கடந்த முப்பது வருடங்களாக இடைவிடாமல் சுட்டிக்காட்டிவந்தோம். அவற்றை வெளியிடும் நேர்மையோ, விமர்சிக்கும் நடுநிலைமையோ இப்பத்திரிகைகளுக்கு என்றும் இருந்ததில்லை. இவ்வண்ணமாக— வைஷ்ணவக் கொள்கைகளைத் தமிழ்நாட்டுப் பொதுமக்கள் காணமுடியாதபடி இப்பத்திரிகைகள் இரும்புத்திரையை இறக்கி விட்டன. 'கல்கி' அழகியசிங்கரின் பேட்டியை வெளியிட்டதன்மூலம் இந்த இரும்புத்திரை ஒருமூலையில் கிழிக்கப்பட்டிருக்கிறது. அதனாலேயே பலருக்குக் கடுமையான ஆத்திரம் ஏற்பட்டிருக்கிறது. இந்த இரும்புத்திரை பிளக்கப்பட்டு வைஷ்ணவத்தை உள்ளபடி மக்கள் புரிந்துகொள்ளவேண்டுமானால், ஸ்ரீமதழகியசிங்கர்போன்ற மற்ற பல வைஷ்ணவ மதத்தலைவர்களின் கருத்துக்களை பேட்டிகள்மூலம் தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் வெளியிடவேண்டும். குறிப்பாக, தற்சமயம் சென்னையில் எழுந்தருளி, மிக அழகாக மதவிளக்கங்களைச் செய்துவரும் ஸ்ரீமத்பரமஹம்ஸ வானமாமலை ஜீயர் ஸ்வாமியின் பேட்டி 'கல்கி' முதலிய பத்திரிகைகளில் வெளிவரவேண்டும். அவசியமானால் வைஷ்ணவம், சைவம், அத்வைதம் என்னும் முப்பெரும் மதங்களைப் பற்றிய கருத்தரங்குகளை நடத்தி, அவற்றின் சுருக்கத்தையும் 'கல்கி' போன்ற பத்திரிகைகள் வெளியிடவேண்டும். இதைச் செய்தால்தான் ஹிந்து மதத்தைச் சேர்ந்த இம்மூன்று மதங்களையும் மக்கள் உள்ளபடி புரிந்துகொள்வதற்கும், இம்மதங்களைச் சேர்ந்தவர்கள் சகிப்புத் தன்மையுடன் ஒற்றுமையாக வாழ்வதற்கும் வழியுண்டாகும். வைணவ மத இருட்டடிப்பு மனப்பான்மையைச் சிறிது தளர்த்தி, இரும்புத்திரையை ஒருமூலையில் கிழித்த 'கல்கி' இதை உடைத்து இந்துக்களிடையே உண்மையான மத ஒற்றுமை ஏற்படுவதற்கு வழிவகுக்குமா, மற்ற தமிழ்ப் பத்திரிகைகளும் இந்த அறவழியைப் பின்பற்றுமா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

# அகில உலக இந்து மகாநாடு

(ஸுதர்சனம் ஆசிரியர்)

1982 ஏப்ரல் கடைசியில் இந்த மகாநாடு இலங்கையில் நடைபெற்றது. இலங்கையில் பௌத்தமும் சைவமும் பொது மக்களின் மதமாக உள்ளது. ஆகையால் 'இந்துமதம்' என்னும் பெயரில் சைவப்ரசாரமே நடக்கும் என்பது எதிர்பார்க்கக்கூடியதே. கலந்துகொண்டவர்களில் பெரும்பாலானவர்கள் சைவர்களும், அத்வைதிகளுமே. வைணவ மதத்திற்கும் இடங்கொடுப்பதாகப் பிரசாரம் செய்யப்பட்டமையால், நாமும் கலந்துகொண்டு "சங்ககாலத்தில் வேதம்" என்னும் தலைப்பில் பேசுவதாக எழுதினேம். ஆனல், பேசுவதற்கு நமக்கு அழைப்பு அனுப்பப்படவில்லை. 'மலருக்குக் கட்டுரை அனுப்பலாம்' என்று ஓர் கடிதம் வந்தது. நமது 'சங்ககாலத் தமிழர் சமய'த்தை அனுப்பி. மலரில் வெளியிடும்படி எழுதினேம். கசப்பான உண்மையை நிரூபிக்கும் அந்நூலை வெளியிடுவார்களா என்பது சந்தேகமே. நிற்க.

இதில் பேசியவர்கள் மனம்போனபடியெல்லாம் பேசி 'இந்து மதம்' என்பது ஒரு மதமல்ல என்பதையும் நிரூபித்தார்கள். மதுரை - காமராஜ் பல்கலைக்கழகத் துணைவேந்தர் வ. சுப. மாணிக்கனர் ஓர் ஆச்சரியமான (!) ஆலோசனையை இந்த மாநாட்டில் தெரிவித்தார். அதாவது:— (1) கீதை, தேவாரம் முதலான இந்துமத நூல்களிலிருந்து குறிப்பிட்ட பகுதிகளைச் சேர்த்து இந்துமதத்திற்கு ஒரு வேதத்தை உருவாக்கவேண்டும். (2) இந்துமதக் கடவுளர்களின் (கை, கால், ஆயுதம் முதலிய) ஒவ்வொரு பகுதிகளையும் இணைத்து, புதிதாக ஓர் பரம்பொருளைப் படைக்கவேண்டும்.

துணைவேந்தரின் இக்கருத்து நகைப்பிற்குரியதாயுள்ளது. சிலர் சேர்ந்து இப்படிப் புதிதாக ஓர் வேதத்தையும், கடவுள் பொம்மையையும் உருவாக்கிவிட்டால் அது ஓர் வேதமாகவோ, பரம்பொருளாகவோ ஆகிவிடுமா, அனைவரும் இவற்றை ஒப்புக் கொள்வார்களா என்பதைக்கூட ஆராயாமல் இப்படி ஓர் ஆலோசனையைத் தெரிவித்த துணைவேந்தரின் மேதாவிலாஸத்தை (!) என்னென்பது! இந்த ஆலோசனைகளை "உருப்படியான யோசனைகள்" என்று வர்ணித்த தினமணி நிருபரின் மேதாவிலாஸத்தையும் அவசியம் பாராட்டவேண்டியதே! ஆக, 'இந்துமதம்' என்று வழங்கப்படும் மதம் புதிதாக

உருவாக்கப்பட வேண்டிய ஒன்றே என்று இவர்களே ஒப்பு தல் வாக்குமூலம் அளிக்கிறார்கள் என இதைக் கொள்ளலாம்.

இத்தகைய குழப்பப் பேச்சுகளுக்கிடையே ஒருவர் தெளிவான பேச்சைப் பேசியதாகவும் 24—4—82 இந்தியன் எக்ஸ்பிரஸ்ஸில் ஓர் செய்தி வந்தது. பல பட்டங்கள் வாங்கிய டேவிட் ஷேர்மான் எனும் கிறிஸ்தவர் தாம் ஓர் வைஷ்ணவராகவும் இருப்பதாகவும், "வைஷ்ணவத்தின் கொள்கைகளே மஹாயானபுத்தமதம், இஸ்லாம், கிறிஸ்தவமதம், ஜூடாமதம் முதலான (பரமாத்மாவை ஒப்புக்கொள்ளும்) எல்லா மதங்களுடைய கொள்கைகளுக்கும் அடிப்படையானவை'' என்றும், "இதைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது வைஷ்ணவத்தை 'உலகமனைத்துக்கும் பொதுவான ஒரே மதம் எனக் குறிப்பிடலாம்'' என்றும் அழுத்தமாகக் கூறியதாக அச்செய்தி கூறுகிறது.

நம் நாட்டில் மிகப் பழையனவான சங்ககால நூல்களைப் பார்த்தாலும், வைஷ்ணவ மதமே அக்காலத்தில் வைதிக மதமாகக் கொள்ளப்பட்டு வந்தது என்று தெளிவாக விளங்குகிறது. பிற்கால நூல்களைப் பார்த்தால், சைவம், சாக்தம் முதலான சேய்மதங்கள் வைஷ்ணவமாகிற தாய்மதத்திலிருந்து உருவாயின எனவும் விளங்குகிறது. இப்படி உலகனைத்துக்கும் பொதுமதமாக விளங்கக்கூடிய தகுதிபெற்ற ஒரே மதமான வைஷ்ணவத்தின் மீது இன்று தமிழ்நாட்டில் எல்லாத் துறையிலும் பொழியப்படும் துவேஷம் நீங்கி, சகிப்புத்தன்மையுடன் வைஷ்ணவர்களிடையே வைஷ்ணவமும், சைவர்களிடையே சைவமும் வளர்க்கப்பட்டால்தான் 'இந்து மதம்' என்று அழைக்கப்படும் மதஸமூஹம் வளரும் என்னும் உண்மையை அனைவரும் உணரும்படி செய்யவேண்டும் என்று ஆதிபரம்பொருளாம் நாரணனைப் பிரார்த்திப்போம். கீழ்க்கண்ட பாடலில் நம்மாழ்வாரும் இதுபோலவே பிரார்த்தித்தார். [திருவாய்மொழி 3-1-4]

''மாட்டாதேயாகிலும் இம்மலர்தலைமாஞாலம் நின்
மாட்டாய மலர்புரையும் திருவுருவம் மனம்வைக்க
மாட்டாத பலசமய மதிகொடுத்தாய் மலர்த்துழாய்
மாட்டே நீ மனம்வைத்தாய்! மாஞாலம் வருந்தாதே?''



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-35] [ஒளி-8

# இந்து மதத்தை ஒன்ருக்க முடியுமா?

—❋—

## [ ஸுதர்சனம் ஆசிரியர் ]

''ஞானபூமி'' ஜூலை '82 இதழில் ''இந்து எனும் போதினிலே'' என்னும் தலைப்பில் ஆசிரியர் மணியன்—இந்து மதத்தைச்சேர்ந்த அனைத்துப் பண்டிதர்களிடமிருந்தும், மகான்களிடமிருந்தும் ஒரு விஷயம் குறித்துக் கருத்துரைகள் எதிர்பார்க்கப்படுவதாக எழுதப் பட்டுள்ளது. அந்த விஷயம் என்னவென்ருல்:— '' இந்துக்களிடையே ஒற்றுமையை விளைப்பதற்காக பொதுவான ஒரு மந்திரத்தை நாம் ஒழுங்குபடுத்தி அமைக்கவேண்டும். நமக்கென்று ஒரு பொது இந்து மதநூலை அல்லது சில நூல்களை ஏற்றுக்கொண்டு அவற்றை இந்துக்கள் அனைவருக்கும் பொதுவான புனிதமதநூலாக (பைபிள் மாதிரி, குர்ஆன் மாதிரி) கொள்ளவேண்டும்'' என்னும் ஆலோசனையைக் காமகோடிப் பெரியவர் மணியனிடம் தெரிவித்து, '' இது விஷயமாக நீ முயற்சி எடுத்துப் பல்வேறு மகான்களையும் பண்டிதர்களையும் கலந்து, நம் இந்து மதத்துக்குப் பொதுவான ஒரு மந்திரத்தை Codify செய்யவும்—மத அறநூலை நிர்ணயிக்கவும் முயற்சி எடுத்துக்கொள்'' என்று கட்டளையிட்டதாக மணியன் எழுதியிருப்பதேயாகும்.

கடந்த முப்பத்தைந்து வருடங்களாக 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' என்னும் மாதப்பத்திரிகையை நடத்தி வருவதோடு பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் கொண்ட பற்பல வைஷ்ணவ மதநூல்களை எழுதியும், அச்சிட்டும் வருபவன் என்னும் முறையிலும், இரு கலைகளிலுமுள்ள எல்லா மடாதிபதிகளோடும், ஆசார்யபுருஷர்களோடும், வைஷ்ணவத்தைக் கசடறக் கற்ற பண்டிதர்களோடும் நெருங்கிப் பழகி அவர்களுடைய திருவுள்ளக்கருத்தை அறிந்தவன் என்னும் முறையிலும் நாம் இதுபற்றி வைஷ்ணவப் பெரியோர்களின் திருவுள்ளக்கருத்தை இங்கு தெரிவிக்கிறேம்.

இந்து மதத்துக்குள் அடங்கிய த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதவைஷ்ணவம், சைவசித்தாந்தம் முதலான மதங்களனைத்துக்குமே வேதம் பொதுநூலாயிருக்கிறது. கிறிஸ்தவர்கள் பைபிளைப் போலவும், இஸ்லாமியர்கள் குர்ஆனைப் போலவும், இந்துக்கள் அனைவரும் 'ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம்' என்னும் நான்கு வேதங்களையும் பொதுவான மூலமதநூலாக ஏற்கனவே கொண்டிருக்கிறார்கள். ஆகையால் நமக்கென்று ஒரு பொது இந்துமத நூலைப் புதிதாகக் கண்டுபிடிக்கவேண்டிய அவசியமே இல்லை. அந்த வேதத்தை விளக்கும் சில பொது நூல்களையும் த்ரிமதஸ்த ஆசார்யர்கள் தம் பாஷ்யங்களில் கையாண்டிருக்கிறார்கள். அவற்றில் மிகப் பழைய இதிஹாஸங்களான ஸ்ரீராமாயண மஹாபாரதங்களையும், ஸ்ரீவிஷ்ணுபுராணத்தையும், நீண்டகாலமாக அனைவராலும் கையாளப்பெற்ற கீதை, ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம், மனுஸ்ம்ருதி ஆகியவற்றையும் பொதுநூல்களாகக் கொள்ளலாம். ஆனால் சைவர்கள் இதை ஏற்கமாட்டார்கள். தமிழ் நூல்களில் சங்கநூல்களையும், திருக்குறளையும் பொதுநூல்களாகக் கொள்ளலாம்.

பொதுவான ஒரு மந்திரத்தை அமைப்பது இயலாத காரியமாகும். வைணவ மதாசார்யர்கள் அனைவரும் "ரஹஸ்யத்ரய மந்திரங்களையே வைணவன் ஒவ்வொருவனும் தினந்தோறும் அர்த்தத்துடன் அநுஸந்திக்கவேண்டும்; வேறு மந்திரம் எதுவும் நமக்குக் கூடாது" என்று கட்டளையிட்டிருக்கிறார்கள். இதை வைணவர் எவரும், இக்காலத்தில் இருக்கும் எவர் சொன்னாலும் மாற்றிக்கொள்ள முடியாது. இதுபோலவே உண்மையான சைவர்களும் "சிவபஞ்சாக்ஷரம்" முதலான மந்திரங்களைவிட்டு வேறு மந்திரங்களைக் கைக்கொள்ள ஒரு நாளும் இசையமாட்டார்கள். அத்வைதிகளிலேயே சிருங்கேரி பீடாதிபதியும் இவ்வாலோசனையை ஏற்கமாட்டாரென்றே நாம் கருதுகிறோம். சைவர்கள் 'சிவஸம்பந்தமான மந்திரமும், நூல்களுமே வேண்டும்' என்பார்கள். வைஷ்ணவர்கள் 'விஷ்ணுஸம்பந்தமான மந்திரமும், நூல்களுமே வேண்டும்' என்பார்கள். இதில் காமகோடி பீடாதிபதிகள் போன்ற அத்வைதிகள் புகுந்து மத்யஸ்தம் செய்வது பூனைகளுக்கிடையே குரங்கு மத்யஸ்தம் செய்த கதையாகவே கருதப்படும் என்பதே வைணவர்கள் சார்பில் நாம் தெரிவிக்கும் கருத்தாகும்.

அவரவர் தத்தம் மதங்களை உறுதியாகப் பின்பற்றிக்கொண்டு பிறமதங்களிடம் சகிப்புத்தன்மையுடன் இருப்பதொன்றே மதங்களிடையே ஒற்றுமையேற்பட ஒரேவழி. வேதங்களையே மூலப்ரமாணமாகக் கொண்ட இந்துக்களின் மதங்களிடையேயும் இதுவே ஒற்றுமைக்கு வழியாகும். வேறுவழிகளைக் கண்டுபிடிக்க முயல்வது வேற்றுமைகளையே வளர்க்கும்.

# ஞானபூமியைக் குறித்துச் சில கேள்விகள்

ஞானபூமி ஜூலை '82 இதழ் நமக்கு அதன் ஆசிரியரால் அனுப்பப்பெற்றது. நம் ஸுதர்சனம் இதழ்களையும் அவருக்கு அனுப்பி, நமது விமரிசனங்களை ''நகுதற் பொருட்டன்று நட்பு'' என்னும் குறள் வழியிலே கொள்ளவேண்டும் என்று கடிதமும் எழுதினோம். 'ஞானபூமி'யின் இவ்விதழை வாசித்துப்பார்க்கும்போது, ''லக்ஷக்கணக்கான ரூபாய்கள் செலவழித்து, பல்லாயிரக்கணக்கான வாசகர்களுக்காக நடத்தப்படும் பத்திரிகை ஏராளமான பொருட் பிழைகளைக் கொண்டிருப்பது கண்டு நமக்கு மிகவும் வருத்தம் ஏற் பட்டது. அப்பிழைகளில் சிலவற்றைச் சுட்டிக்காட்டி, கீழே சில கேள்விகளை அச்சிடுகிறோம், ''ஞானபூமி'' அடுத்த இதழொன்றில் இக்கேள்விகளை அச்சிட்டு, இவை பிழையல்லவெனில் அதற்கான ஆதாரத்தைத் தெரிவிக்கவேண்டுமென்றும், இவை பிழையெனில் அதை வாசகர்களுக்கு அறிவிக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறோம்.

1. முதல் பக்கத்தில் ஹயக்ரீவரைப்பற்றி எழுதும்போது ''அவதாரகாலங்கள் முடிந்து கலி ஆரம்பமாகும் முன், மகாவிஷ்ணுவின் கட்டளையினால் பிரம்மதேவன் வேதங்களைப் படைக்கும் பணியில் ஈடுபட்டான்'' என்று எழுதப்பட்டுள்ளது. இது மிகவும் தவறானது. ''மத்ஸ்யாவதாரத்தை ஒட்டி ஏற்பட்ட ஹயக்ரீவாவதாரம் ஆதி ஸ்ருஷ்டி காலத்தில் கிருதயுகத்தில் எடுக்கப்பட்ட முதல் அவதாரங்களில் ஒன்று'' என்று இதிஹாஸ புராணங்கள் பேசுகின்றன. மகாபாரதம் சாந்திபர்வத்தில் 357-ம் அத்யாயத்தில் ஸ்ருஷ்டிகாலத்தின் தொடக்கத்திலேயே ஹயக்ரீவாவதாரம் எடுக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. வேதம் நித்யமானது. 'பிரமன்' அதைப்படைத்தான் என்று கூறுவது தவறு. 'நித்யமான வேதத்தைத் திருமாலிடமிருந்து பிரமன் உபதேசம் பெறுகிறான்' என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. அந்த வேதங்களை நான்கு அழகிய குழந்தைகளாகப் பிரமன் ஆக்கினானென்றும், அவற்றை மதுகைடபர்கள் அபஹரித்தார்கள் என்றும் மகாபாரதம் கூறுகிறது. இப்படியிருக்க, 'கலி ஆரம்பமாகுமுன் பிரம்மதேவன் வேதங்களைப் படைக்கும் பணியில் ஈடுபட்டார்' என்று கூறுவதற்கு ஆதாரம் என்ன?

2. ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியோடு பேட்டியில் ''நாம் செய்கின்ற பாபங்கள் இருவகை. 'சஞ்ஜிதம்' என்பது ஒருவகை. இது இப்பிறவியில் நாம் செய்யும் பாவகாரியங்களால் நாமே சம்பாதித்துக் கொள்வது. 'பிராரப்தம்' என்பது இன்னொருவகை. இது நாம் முற்பிறவியில் செய்த கர்மவினைகளின்படி வந்து சேருவது'' என்று ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி சாதித்ததாக உள்ளது. இது தவறு. ஸஞ்சிதம், ப்ராரப்தம் எனும் இரண்டுகர்மங்களுமே முற்பிறவிகளில் செய்தவையே. ஸஞ்சிதம் என்பது பலம் கொடுக்கத் தொடங்காதது. ப்ராரப்தம் என்பது பலம் கொடுக்கத் தொடங்கியது. ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளிடமிருந்து ஸ்ரீமுகம்பெற்று இதில் உண்மையான விளக்

கத்தை வாசகர்களுக்கு அறிவிக்கவேண்டிய கடமையை 'ஞானபூமி' நிறைவேற்றுமா?

3. 'கேள்வி பதில்' பகுதியில் "மகாவிஷ்ணுவின் நாபியிலுள்ள தாமரையில் பிரம்மா அமர்ந்திருப்பது போன்ற படங்களைப் பார்த்திருக்கிறோம். இதன் விளக்கம் என்ன?" என்பது கடைசிக் கேள்வி. இதற்கு "மகாவிஷ்ணு என்பது நம்முடைய ஆத்மசரீரம்......நாபியிலிருந்து புத்தி என்னும் பிரம்மா தோன்றியிருக்கிறார் என்று இந்து மதம் விளக்குகிறது." என்னும் பதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படி எந்த சாஸ்த்ர நூலிலும் இல்லை. வேதங்கள் முதலான எல்லா சாஸ்த்ரங்களிலும் படைப்புக் கடவுளான பிரமனையும் தன் உந்தித் தாமரையில் படைத்த திருமாலே முத்தொழிலும் செய்யும் முழுமுதல்வன் என்னும் விளக்கமே கொடுக்கப்பட்டுள்ளது. ஞான பூமியில் விளக்கம் எழுதியுள்ள 'சுவாமி இறையன்பன்' என்பவரிடமிருந்து 'அவர் எழுதினதுக்கு ஆதாரம் என்ன?' என்று கேட்டுப் பெற்று வாசகர்களுக்கு வெளியிடமுடியுமா?

4. 42-ம் பக்கத்தில் காமகோடி சிறிய பீடாதிபதியின் அருள் மொழியில் "நமது சாஸ்த்ரங்கள் 'கடவுளைக் கும்பிடு' என்று சொல்லவில்லை. 'கடவுளை மறவாதே' என்றுதான் சொல்லியிருக்கிறது" என்று கூறியிருக்கிறார். "மாம் நமஸ்குரு" [கீதை 18 65] [என்னைக் கும்பிடு] என்று கீதையில் கண்ணனே அருளியுள்ளான். சாஸ்த்ரங்களில் மற்றும் பல இடங்களில் 'கடவுளைக் கும்பிடு' என்று கூறியிருக்கிறது. அதற்கு முரணாகப் பீடாதிபதி கூறியிருப்பது எப்படிப் பொருந்தும்?

5. ஹிந்துஸ்தானம், ஹிந்து என்னும் பெயர்கள் மிகச் சமீப காலத்தில் வெளிநாட்டவர்களால் நம்நாட்டுக்கும், நமக்கும் சூட்டப்பட்ட பெயர்கள். அப்படியிருக்க, ப்ருஹஸ்பதி ஆகமம், மேருதந்திரம், கலிகாபுராணம் முதலியவற்றில் இப்பதங்கள் காணப்படுவதாக (பக்கம் 43ல்) சுலோகங்களை அச்சிட்டிருக்கிறீர்கள். இந்த நூல்கள் எந்தப் பதிப்பகத்தில் அச்சிடப்பட்டுள்ளன? இந்த ச்லோகங்கள் காணப்படும் அத்தியாயங்கள் யாவை? என்று வெளியிடமுடியுமா? அப்படி வெளியிட முடியாவிடில் இவை பொய்யான ச்லோகங்களே என்று ஒப்புக்கொள்ளும் நேர்மை ஞானபூமிக்கு உண்டா?

இதுவரை வெளிவந்துள்ள ஞானபூமி இதழ்களில் மேலும் பல பல பொருட்பிழைகளும் ஆதாரமற்ற விளக்கங்களும் உள்ளன. 'ஒருபானை சோற்றுக்கு ஒருசோறு பதம்' என்னும் முறையிலே நம்மால் எடுத்துக் காட்டப்பட்ட முற்கூறிய ஐந்து கேள்விகளுக்கும் 'ஞானபூமி' பதில் அளிக்கிறதா, எத்தகைய பதிலை அளிக்கிறது என்பதைக்கொண்டு வாசகர்கள் ஞானபூமியின் தரத்தை முடிவு கட்டிக் கொள்ளலாம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:


# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-35] [ஒளி-11


## மகராஜன்குழு அறிக்கையின் விதண்டாவாதங்கள் — விஷ்ணு கோயில்களுக்கு அடியோடு பொருந்தாது

### [ஸுதர்சனம் ஆசிரியர்]

இக்குழுவின் அறிக்கை முழுவதையும் பார்வையிட்டோம். சிவ விஷ்ணுகோயில்களில் குறிப்பிட்ட அந்தணப் பிரிவுகளே ஆராதனம் செய்யவேண்டும் என்று முறையே சைவ வைஷ்ணவ ஆகமங்களில் விதிக்கப்பட்டுள்ளன என இவ்வறிக்கையில் தெளிவாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. சிவாகமங்களில் நான்காம் வருணத்தவர்களான சூத்ரர்களே கோயிலுக்குள் வரக்கூடாதென்றும், கோயிலுக்கு வெளியிலிருந்து தான் வழிபடவேண்டும் என்றும் விதிக்கப்பட்டுள்ளது என்றும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. மடாதிபதிகள், மதத்தலைவர்களில் குன்றக்குடி தவிர மற்ற அனைவரும் உள்ள நடைமுறையை மாற்றலாகாது என்று கூறியதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதற்குமேல் இவ்வறிக்கை செய்யும் விதண்டாவாதங்களாவன:—(1) இந்த ஆகம வசனங்கள் இடைச்செருகல்களாகவே இருக்கவேண்டும். சமீபகாலத்திலிருந்த சில ஆராய்ச்சியாளர்கள் "முதலில் ஆகமங்கள் தமிழில் தான் இருந்தன. அவற்றை வடமொழியில் மொழிபெயர்த்தபின் தமிழ் ஆகமங்கள் ஒழிந்துவிட்டன" எனக் கூறுகிறார்கள். [இவர்கள் சைவர்களாகையால், இவர்களுடைய தான்தோன்றித்தனமான கருத்தும் சைவாகமங்களைப் பற்றியதாகவேயிருக்கவேண்டும் — ஸுதர்சனர்.] (2) (இவ்வடமொழி ஆகம வசனங்கள் உண்மையாயிருந்தாலும்) இதில் பல மாறுதல்கள் காலக்ரமத்தில் நிகழ்ந்துவிட்டன. ஆகையால் இப்போது அனைத்துச் சாதியினரையும் அர்ச்சகராகப் பயிற்சிகொடுத்து, அவர்களுக்கு வேதங்களையும், ஆகமங்களையும் ஓதுவித்து அர்ச்சகர்களாக நியமிக்கலாம். (3) ஏற்கனவே சிவன், சக்தி, முருகன், விநாயகர், பிடாரி, மாரியம்மன் முதலான பல சைவக்கோயில்களில் அந்தணரல்லாதவர்கள் பூசகர்களாயிருக்கின்றனர். (4) ஆகையால் காலத்தின் தேவையை அநுசரித்து இப்போது அனைத்துச்சாதியினரையும் பயிற்சி கொடுத்து சிவ விஷ்ணுகோயில்களிலும் அர்ச்சகராக்கலாம்.

இந்த விதண்டாவாதங்கள் விஷ்ணுகோயில்களுக்கு அடியோடு பொருந்தமாட்டா. பரிபாடல் முதலான சங்க இலக்கியங்களில் திருமாலே வேதங்களில் பரம்பொருளாகக் கொள்ளப்பட்டுள்ளான் என்றும், அந்தணர்கள் அருமறைகொண்டு ஆலயங்களில் திருமாலை வழிபட்டு வந்தனர் என்றும் கூறியிருக்கும் உண்மையை இவ்வறிக்கை மறைத்துவிட்டது. வைஷ்ணவாகமங்களில் புருஷ ஸூக்தம் முதலிய வேதமந்திரங்களைக்கொண்டு வேதமோதிய அந்த ணர்களே கோயில் அர்ச்சகர்களாயிருந்து வழிபாடு செய்யவேண்டும் என்று பல்லாயிரக்கணக்கான இடங்களில் முழங்கப்பட்டிருப்பதை இவ் வறிக்கை கருத்தில் கொள்ளவேயில்லை. திருமால் கோயில்களில் இரண் டிலேயே ஆகமத்திற்கு முரணான அர்ச்சகர்கள் உள்ளனர் என இவ் வறிக்கையே ஒப்புக்கொள்கிறது. அவற்றில் ஒன்று (திருச்சிஜில்லா கல்லக் குறிச்சி கலியபெருமாள்கோயில்) சென்ற நூற்றாண்டில் ஏற்பட்டது; மற்றொன்று (காஞ்சியில் கள்வர்கோயில்) சைவர்களால் ஆக்ரமிக்கப் பட்டது. "ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீரங்கம் முதலானவிடங்களில் வைகாநஸ முறையைப் பாஞ்சராத்ரமாக மாற்றினார். திருநாராயணபுரத்தில் திருக் குலத்தாரைத் தம் விருப்பப்படி எவ்விதத் தடையுமில்லாமல் கோயிலுக் குள் சென்று வழிபாடு செய்ய அநுமதித்தார்." முதலான பொய்ச் செய்திகள் இவ்வறிக்கையில் காணப்படுகின்றன. சைவர் ஒருவரைத் தலைவராகக்கொண்டதும், சைவர்களைப் பெரும்பான்மையாகக் கொண் டதுமான இக்குழு வைணவத்தைப்பற்றித் தெரிவித்துள்ள மற்றும் பல விதண்டாவாதக் கருத்துகள் வைணவ சாஸ்திரங்களுக்கும், நூல்க ளுக்கும் முரண்பட்டவை. ஆகையால் விஷ்ணுகோயில்களுக்கு இக் குழுவின் அறிக்கை அடியோடு பொருந்தாது. விஷ்ணுகோயில்களில் உள்ள நடைமுறைகளை மாற்றுவது வைஷ்ணவ ஆகமங்களுக்கும், மற்றுமுள்ள ஸ்ருதிஸ்ம்ருதிகளுக்கும், வைணவநூல்களுக்கும் அநாதி காலப் பழக்கவழக்கங்களுக்கும், வைணவ மதத்தலைவர்கள் அனைவரது கருத்துக்கும், பெரும்பாலான வைணவப் பொதுமக்கள் கருத்துக்கும் முரணானது. ஆகையால், பலவகையாயிருக்கும் சிவன்கோயில்களில் நடைமுறையை மாற்றினாலும், இவ்விஷயத்தில் பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக ஒரே நடைமுறையைக்கொண்ட விஷ்ணுகோயில் பூஜைமுறையை — சைவர்களைப் பெரும்பான்மையினராகக்கொண்ட இந்தக் குழுவிற்கு மாற்றும்படி சிபாரிசு செய்ய எந்தத் தகுதியும் கிடையாது. இதை வைணவசமூகமக்களும், மதத்தலைவர்களும் மத்திய மாநில அரசுகளுக்கு எடுத்துக்காட்டவேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். 'விடுதலை' ஏட்டிற்கு நாம் எழுதிய மறுப்புக்கு இன்றுவரை எவரிடமிருந்தும் யாதொரு பதிலும் இல்லாததிலிருந்து, நாம் எழுதிவருவது உண்மையே என வெள்ளிடைமலையாக விளங்கு கிறது. "கீதாசார்யன்" "ராமாநுஜவாணி" முதலான ஸ்ரீவைஷ்ணவ பத்திரிகைகளும் இதே கருத்தைத் தெரிவித்துள்ளது குறிப்பிடத் தக்கது. "உண்மையே வெல்லும்" என்பது வேதவாக்கு.

# ஞானபூமியா பொய்பூமியா?

சென்னை கௌடிய மடத்தில் தலைவராயிருக்கும் ஸ்ரீபக்தி ப்ரஜ்ஞாந யதிமகராஜ் அவர்களின் பேட்டி அக்டோபர் '82 ஞானபூமியில் வெளிவந்துள்ளது. இந்தச் சைதன்ய மதத்தலைவர் பல வருஷங்களாக நமது நண்பர். இவர் விஷ்ணுபரத்வஜ்ஞானத்தைப் பரிபூர்ணமாக உடையவர். "சிவன் முதலிய எல்லா தேவர்களைக் காட்டிலும் உயர்ந்த பரம்பொருள் விஷ்ணுவே" எனும் உண்மையைப் பல நூல்களில் நிலைநாட்டி எழுதியிருப்பவர். இவருடைய பெயரை வடமொழியறிவற்றவர்கள் நடத்தும் ஞானபூமி பலவிடங்களில் "யத்தி மகராஜ்" என்றே அச்சிட்டுள்ளது. 'யதி' எனும் வடமொழிச் சொல்லையும் அறியாதவர்கள் மதப்பத்திரிகை நடத்துவது நம் நாட்டிற்குச் சாபக்கேடு. இது சிறுவிஷயம். இக்கட்டுரையில் ஞானபூமி பெரும்பொய்களையும் அள்ளிவீசியிருக்கிறது. இது மன்னிக்கமுடியாத குற்றம். இதை விளக்குகிறோம். ஸ்ரீபக்தி ப்ரஜ்ஞாந யதிமகராஜ் அவர்களின் பேட்டியில் "சைவம்-வைஷ்ணவம் இரண்டில் எது உயர்ந்தது" என்று திரிபுரசுந்தரி என்பவர் கேள்வி கேட்டதாகவும், அதற்கு யதிமகராஜ்—

"சைவம்—வைஷ்ணவம் இரண்டில் எது உயர்ந்தது? என்று கேட்கிறீர்கள்; அப்படி லேசில் தீர்மானித்துவிட முடியாது. இந்து மதத்தின் இந்த இரண்டு முக்கியமான பிரிவுகளுமே சிறந்தவை. ஆனால், இவை புராண காலங்களில் ஏற்பட்டவைதான். அதற்குமுன் உபநிடத காலத்தில் இறைவனைக் கண்கூடாகத் தரிசித்த ரிஷிகள், இப்படிப் பிரித்துக் கூறவில்லை. எல்லாவற்றுக்கும் மேலான பரப்பிரும்மத்தையே கண்டார்கள். அதிலிருந்து பிறகு பல்வேறு இறை உருவங்கள் வந்தன. அந்தத் தெய்வங்களுக்கான வழிபாடுகளும் ஏற்பட்டன. நாயன்மார்களும், ஆழ்வார்களும் இதற்கான துதிப் பாடல்களை உருவாக்கினார்கள். ஆனால், இவர்களும் சைவம்—வைஷ்ணவம் இவற்றில் ஏற்றத்தாழ்வுகளைக் கற்பிக்கவில்லை. வடஇந்தியாவில் பல இடங்களில் கோயில்களில் நாராயணன், சிவன் இருவருமே பூஜிக்கப்படுகிறார்கள். சிவனை அறியாதவர் நாராயணனை அணுக முடியாது என்று தத்துவமே இருக்கிறது. ஆகையால் இப்படிப் பிரிப்பதோ, உயர்வு—தாழ்வு கற்பிப்பதோ முறையல்ல. இதனால் நம்முடைய மதத்தின் பலமே பிளவுபட்டுப்போகும்"

என்று பதிலளித்ததாகவும் ஞானபூமியில் உள்ளது. இதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து யதிமகராஜுக்கு அனுப்பினோம். கல்கத்தா சென்றிருந்த அவர் 11—10—82ல் நமக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். அதில் உள்ள சில பகுதிகளாவன:—

I am extremely sorry and actually my blood boils when I find from your letter that 'Jnana Bhumi' has jeopardized the very mission of my life...... you Know,

we do not Know Tamil.......Will you Kindly give an english rendering of the same article touching all the points? I shall write to the Editor for publishing a true translation of my interview. I should not leave the matter. you also make a strong protest; and if you send to me an english copy of the same, I shall publish it in the Goudiya. At any rate, I cannot tolerate it. I know these people are dangerous. So I was not ready to give any interview to them. Only on a request of a devotee I agreed and that too I told him to look into the matter before it goes to the press. But such unfortunate thing happened!"

### இதன் தமிழ் மொழிபெயர்ப்பு பின்வருமாறு:—

"நான் மிகவும் வருந்துகிறேன். உங்களது கடிதத்திலிருந்து 'ஞானபூமி' எனது வாழ்க்கைக் குறிக்கோளையே தாறுமாறுக்கிவிட்டது என உணரும்போது, உண்மையிலேயே எனது ரத்தம் கொதிக்கிறது. எனக்குத் தமிழ் தெரியாது என்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் அந்தக் கட்டுரை முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அனுப்பினால், எனது பேட்டியின் **உண்மையான** மொழிபெயர்ப்பை வெளியிடும்படி நான் 'ஞானபூமி' ஆசிரியருக்கு எழுதுகிறேன். நான் இதை லேசில் விடமாட்டேன். நீங்களும் கடுமையான மறுப்பை எழுதவும். அதன் ஆங்கில மொழிபெயர்ப்பை அனுப்பினால் நான் 'கௌடியா' ஆங்கிலபத்திரிகையில் வெளியிடுகிறேன். எவ்விதத்திலும் நான் இவ்வக்ரமத்தைப் பொறுக்கமாட்டேன். இந்தப் பேர்வழிகள் மிகவும் அபாயகரமானவர்கள் என நான் அறிவேன். அதனாலேயே நான் இவர்களுக்கு பேட்டி கொடுக்கத் தயங்கினேன். ஒரு பக்தர் வேண்டிக்கொண்டதால் பேட்டி கொடுத்தேன். வெளியிடுமுன் எல்லாம் சரியாயிருக்கிறதா என்று பார்க்கும்படி அந்த பக்தரைக் கேட்டுக்கொண்டேன். இவ்வளவு செய்தும் துரதிருஷ்டவசமான காரியம் நடந்துவிட்டது!"

இக்கடிதத்தில் தாம் நவம்பர் முடிய வடநாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு, டிசம்பரில் ஊர் திரும்பியதும் கடுமையான மறுப்பை எழுதுவதாகக் கூறியிருக்கிறார் யதிமகராஜ். அதற்குமுன் 'ஞானபூமி' உண்மையை வெளியிடப்போகிறதா, அல்லது வழக்கம்போல் பேசாமலிருந்து 'பொய்பூமி' என்று பெயரெடுக்கப் போகிறதா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம். இப்படிப் பொய்க்கட்டுரைகளைக் கொண்டே பத்திரிகையை நிரப்பி வெளியிடுவது நமது மதத்திற்குத் தொண்டாகுமா என்பதை நடுநிலையாளர்கள் சிந்திக்கட்டும்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-35] [ஒளி-12

# சிருங்கேரி பீடாதிபதியைக் குறித்துச் சில கேள்விகள்

[ஸுதர்சனம் ஆசிரியர்]

"சிருங்கேரி பீடாதிபதி சாஸ்த்ர வாஸனையுள்ளவர். நியாயத்திற்குப் புறம்பாகப் பேசமாட்டார்" என்று நாம் பலமுறை எழுதியிருக்கிறோம். சென்றமாதம் வெளிவந்த ஸுதர்சனர்பதில் (ஏழாவது சதகம்) 38-வது கேள்வியின் பதிலிலும் இதைக் காணலாம். "கலைமகள்" நவம்பர் '82 இதழில் "பக்தியே எளிய ஸாதனம்" என்னும் தலைப்பில் சிருங்கேரி மடாதிபதி எழுதியுள்ள சில வாக்கியங்கள் நமது கருத்துக்கு முரணாயிருக்கின்றனவாகையால் அவை குறித்துச் சில கேள்விகளை இத்தலையங்கத்தில் வெளியிடுகிறோம். சிருங்கேரி பீடாதிபதியின் சிஷ்யர்களும் கோபதாபப்படாமல் இக்கேள்விகளுக்குப் பதில் இறுத்து, தமது ஆசார்யரின் கொள்கையை நிலைநிறுத்திக் கொள்ளலாம். சிருங்கேரி பீடாதிபதி இக்கட்டுரையில் எழுதியவற்றில் சில வாக்கியங்கள் மிகவும் நியாயமானவை. உதாஹரணமாக "அனைவரும் அத்வைத தத்துவத்தையே ஒப்புக்கொள்வர் என்று எதிர்பார்ப்பதோ, அல்லது அனைவரும் விசிஷ்டாத்வைதத்தை ஒப்புக்கொள்வர் என்று எதிர்பார்ப்பதோ நடைமுறையில் சாத்தியமில்லாதது" என்று எழுதியிருப்பதை எவரும் மறுப்பதற்கில்லை. மற்றும் சில வாக்கியங்களைக் குறித்தே நாம் இங்கு கேள்விகளை எழுப்புகிறோம். அவற்றுக்கு நடுநிலைநின்று பதில் உரைக்க வல்லார் உளரேல் அந்த பதில்களைச் சுருக்கமாக ஸுதர்சனத்தில் வெளியிட்டு நமது விமர்சனத்துடன் நடுநிலையாளர்களின் தீர்ப்புக்கு விட ஸித்தமாயிருக்கிறோம். அடுத்த தலையங்கத்தையும் இத்தலையங்கத்தின் தொடர்ச்சியாகவே கொள்க.

## கேள்விகள்

1. "சில தீவிரவாதிகள் மதவிஷயத்தில் தாம் கொண்ட கருத்துக்களைத் தவிர மற்றவர் கருத்துக்களை எல்லாம் முட்டாள்தன மானவை என்று கூறுவார்கள்" என்று தொடங்கிச் சில வாக்கியங்கள் எழுதியிருக்கிறீர். இவை ஆதிசங்கரரையே தாக்காதா? ஆதிசங்கரர் தம் பா₄ஷ்யத்தில் பு₃த்₃த₄ர் முதலானருடைய கருத்துக்கள் "மிகவும் தவறானவை" என்று கடுமையாகக் கண்டித்திருக்கிறாரே. அதை ஒப்புக்கொண்டு பிரசாரம் செய்ய அத்வைதிகளுக்குத் தகுதியிருக்கும் போது "உலகம் பொய், ஜீவனும் ப்₃ரஹ்மமும் ஒன்றே" என்று கூறும் அத்₃வைத மதத்தைத் தவறானது என்று ஸ்ரீராமாநுஜர் முதலான பூர்வாசார்யர்கள் நிரூபித்திருப்பதை ஒப்புக்கொண்டு விசிஷ்டாத்வைத மதத்தைப் பிரசாரம் செய்ய விசிஷ்டாத்₃வைதி களுக்குத் தகுதியில்லை என்று நீர் எப்படிக் கூறமுடியும்? இது போலவே எவரும் தாம் அல்லது தம் பூர்வாசார்யர்கள் உண்மை என்று கண்ட மதத்தைப் பிரசாரம்செய்யும்போது, மற்ற கருத்துக்கள் தவறானவை என்று சொல்லித் தீரவேண்டிய இடங்களில் அப்படிச் சொல்லிப் பிரசாரம் செய்வதால் ஒன்றும் குடிமுழுகிப்போய்விடாது என்பதை உம்மால் மறுக்கமுடியுமா?

2. "விஷ்ணு உயர்ந்தவரா, சிவன் உயர்ந்த இறைவனா" என்று தொடங்கி சிவன் அல்லது விஷ்ணுவுக்குப் பரத்துவம் கூறுகிறவர்களைச் சாடியிருக்கிறீர். "அக்₃நிரவமோ தே₃வதாநாம் விஷ்ணு: பரம:" [தைத்திரீய ஸம்ஹிதை 5-5] [அக்₃நியானவன் தேவர்களுக்குள் மிக மிகத் தாழ்ந்தவன்; விஷ்ணு தே₃வர்களுக்குள் மிக மிக உயர்ந்தவன்] என்று வேத₃மே சொல்லியிருக்கும்போது அதை வைஷ்ணவர்கள் பிரசாரம் செய்வதில் என்ன தவறு? ஆதி சங்கரர் தம் பா₄ஷ்யங்களில் பல இடங்களில் "நாராயணனே பிரமன் சிவன் முதலான எல்லா தெய்வங்களைக் காட்டிலும் உயர்ந்த பரம்பொருள். அவனை உபாஸித்தால்தான் மோக்ஷமடையமுடியும்" என்று உத்₃கோ₄ஷித்திருக்கிறாரே. உமது வாக்கியம் அவரையும் தாக்காதா? குறிப்பாக, ப்₃ரஹ்மஸூத்ரபா₄ஷ்யத்தில் [2-2] பாஞ்ச ராத்ராதி₄கரணத்தில் "நாராயண: பரோऽவ்யக்தாத் ப்ரஸித்₃த₄: பரமாத்மா ஸர்வாத்மா இதி தந்ந நிராக்ரியதே" ['நாராயணன் அவ்யக்தத்தைக் காட்டிலும் மேற்பட்டவனாக ப்ரஸித்₃தி₄பெற்றவன்; பரமாத்மாவாகவும் ஸர்வாத்மாவாகவும் இருப்பவன்' என்று பாஞ்ச ராத்ரிகள் சொல்லுவதை நாம் நிராகரிக்கவில்லை] என்று எழுதி யிருப்பதையும், கீ₃தாபா₄ஷ்யத்தில் "நாராயண: பரோऽவ்யக்தாத்" என்று தொடங்கும் மங்க₃ள ச்லோகத்தை இட்டிருப்பதையும், அவ

தாரிகையில் "ஆதி₃கர்த்தா நாராயணுக்₂யோ விஷ்ணு:" என்று தொடங்கியிருப்பதையும், கீ₃தை [9-23, 24, 25] ப₄ாஷ்யத்தில் "தேவவ்ரதா: தே₃வாந் யாந்தி......மத்₃யஜநஶீலா: வைஷ்ணவா: மா மேவ யாந்தி। ஸமாநேऽபி ஆயாஸே மா மேவ ந ப₄ஜந்தே அஜ்ஞாநாத்। தேந தே அல்பப₂லப₄ாஜ: ப₄வந்தி இத்யர்த்த₂." [தே₃வபூஜகர்கள் தே₃வர்களை அடைகிறார்கள். என்னைப் பூஜிக்கும் வைஷ்ணவர்கள் என்னையே அடைகிறார்கள். என்னைப் பூஜிப்பவர்களுக்கும் மற்ற தெய்வங்களைப் பூஜிப்பவர்களுக்கும் பூஜிக்கும் சிரமம் ஒன்றாயிருந்த போதிலும், நானே ஸகலயஜ்ஞங்களுக்கும் ஸ்வாமி என்பதை அறியாமையாலே அவர்கள் என்னை அடைவதில்லை. அதனால் அவர்கள் அல்பப₂லனைப் பெறுகிறார்கள் என்று கருத்து] என்று முழங்கியிருப்பதையும், கீ₃தை [7-23] ப₄ாஷ்யத்திலும் இதையே உத்₃கோ₄ஷித்திருப்பதையும், சாங்கர ப₄ாஷ்யங்களில் மற்றும் பல இடங்களிலும் விஷ்ணுபரத்வத்தை நிலைநாட்டியிருப்பதையும், சிவன் முதலான தேவதைகளுக்கு ஆதி₃சங்கரர் ப₄ாஷ்யங்களில் எவ்விடத்திலும் பரத்துவம் சொல்லவில்லை என்பதையும் உம்மால் மறுக்க முடியுமா? இந்த து₃ரவஸ்தை₂யைத் தவிர்த்துக் கொள்வதற்காக—பல நூற்றாண்டுகளுக்குப் பின் சைவஶாக்தர்களாகிவிட்ட பிற்கால அத்₃வைதிகளால் ஆதி₃சங்கரர் மேல் ஏறிடப்பெற்ற சிவாநந்த₃லஹரி, ஸௌந்த₃ர்யலஹரி முதலான ஸ்தோத்ரங்களைத் தொடாமல், ப₄ாஷ்யங்களைக்கொண்டு பார்த்தால் ஆதி₃சங்கரர் நாராயணன் ஒருவனையே அநந்த ப₂லமளிக்கவல்ல ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொண்டிருக்கிறார் என்பதை உம்மால் மறுக்கமுடியுமா?

3. "எவன் எந்த உயிரையும் வெறுப்பதில்லையோ" என்று தொடங்கும் கீ₃தாச்லோகத்தை சிவவிஷ்ணுபரத்துவ வாத₃ம் செய்பவர்கள் மறந்து விடுகின்றனர் என்று எழுதுகிறீர். சாஸ்த்ரங்களைக் கொண்டு "ஜக₃த்காரணமாய் முமுக்ஷூபாஸ்யமான பரதத்வம் எது" என்று நிர்ணயிப்பதால் மற்ற தெய்வங்களை வெறுப்பதாக எப்படித்தேறும்? "அந்தவத்து ப₂லம் தேஷாம் தத்₃ப₄வத்யல்ப மேத₄ஸாம்" [கீ₃தை 7-23] [மற்ற தெய்வங்களை உபாஸிக்கும் புல்லறிவாளர்களுக்கு அல்பாஸ்தி₂ர ப₂லன்களே கிடைக்கும்] "யஜந்த்யவிதி₄ பூர்வகம்" [9-23] [மற்ற தெய்வங்களை ஆராதி₄ப்பவர்கள் நானே எல்லா யஜ்ஞங்களுக்கும் ஸ்வாமி என்பதை அறியாமல் ஆராதி₄க்கிறார்கள்.] என்னும் கீ₃தாச்லோகங்களை நீரல்லவோ மறந்துவிட்டுப் பேசுகிறீர். இதற்கு என்ன பதில்?

இம்மூன்று கேள்விகளுக்கும் நடுநிலைநின்று பதில் இறுக்க வல்லார் உளரேல் அவர்களை வரவேற்கிறோம்.

# — வைதிக மதத்தின் பழைய நிலையும், — இப்பொழுது ஒற்றுமைக்கு வழியும்

உலகைப் படைத்தளிக்கும் ஒரே கடவுளை ஒப்புக்கொள்வதால் கிறிஸ்தவமும், இஸ்லாமும் உறுதியாகப் பின்பற்றப்பட்டு வளர்ந்தோங்கி வருவதையும், அல்பப₂லன்களுக்காக வரம்பில்லாத தெய்வங்களைத் தொழுதுகொண்டு, ஜக₃த் காரண தெய்வம் எது என்று தெளிவில்லாமல் இருக்கையால் மோக்ஷத்தைப்பற்றிச் சிந்தனையே இல்லாமல் இருக்கும் இந்து சமூக மக்கள் மதத்தில் பிடிப்பில்லாமல் லோகாயதர்களாகவும், நாஸ்திகர்களாகவும், கிறிஸ்தவ, இஸ்லாம் மதங்களைத் தழுவுகிறவர்களாகவும் மாறி வருவதையும் தடுக்க வழி என்ன? பழங்காலத்தில் ஹிந்து சமூகம் தற்காலம் போலில்லாமல் ஒரே மதத்தைப் பின்பற்றியிருந்ததா? என்பதை ஒவ்வொரு ஹிந்துவும் ஆராயவேண்டிய கடமை உள்ளது.

இப்படி ஆராய்ந்தால், பழைய நூல்களான ஸ்ரீராமாயணம், மஹாப₄ாரதம், மநு முதலான ஸ்ம்ருதிகள் ஆகிய வடமொழி நூல்களிலும், ஆதிசங்கரர் முதலான மதாசார்யர்களின் ப₄ாஷ்யங்களிலும், சங்கநூல்களிலும் நாரணன் ஒருவனே ஜக₃த்காரணனுகவும் முமுக்ஷூபாஸ்யனுகவும் முழங்கப் பட்டுள்ளான் என்பதைத் தெளிவாகக் காண்கிறோம். நமது விஷ்ணுசித்தவிஜயம், சங்கரரும் வைணவமும், சங்ககாலத தமிழர் சமயம் முதலிய நூல்களில் இவ்வுண்மையை அசைக்க முடியாதபடி நிலைநாட்டியுள்ளோம். ஆக, பழங்காலத்தில் வைதி₃கமதம் வைஷ்ணவ மதமாகவேயிருந்தது எனத் தேறுகிறது. மநஸ்ஸாக்ஷியுள்ளவர்களாயிருந்து, ஹிந்து மக்கள் அனைவரும் இவ்வுண்மையை ஒப்புக்கொண்டால் வைதி₃கமதமும் ப₃லப்படும்.

பெரும்பான்மையினரான சைவ சாக்தர்கள் 'சைவம், சாக்தம்' முதலானவற்றை எங்களால் கைவிடமுடியாது' என்று பிடிவாதம் பிடித்தால், உண்மையான வைதி₃கமதமான வைஷ்ணவத்தைப் பொய்ப் பிரசாரங்களைச்செய்து நசுக்க முயலாமல், சகிப்புத் தன்மையுடன் வாழவிடவேண்டும். இன்று தமிழ்நாட்டில் பெரும்பான்மையினராயிருந்துகொண்டு அரசு ஸ்தாபனங்களையும், பத்திரிகைகளையும் ஆக்ரமித்து நிற்கும் சைவ சாக்தர்களும்,அத்வைதிகளும் இதை உணர்ந்து, மநஸ்ஸாக்ஷிக்கு பயந்து செயல்பட்டாலொழிய ஹிந்துக்களிடையே ஒற்றுமை விளையாது. வைதிகமதம்தழைக்காது.

# தமிழுக்கு வைணவர் சேவை

[அ. தி. மு. க. பத்திரிகையான 'நீரோட்டத்'தில் அதன் ஆசிரியர் 'அடியார்' (22, 23—12—82 இதழில்) எழுதிய தலையங்கம் தமிழுக்கு வைணவர் சேவையை நன்கு எடுத்துக் காட்டுகிறது. சங்கராசார்ய சிஷ்யர்கள் நடத்தும் பத்திரிகைகளில், அவரைப்பற்றி ஓயாமல் செய்யப்படும் (*Hero - Worship*) புகழ்பாடுதலின் பொய்ம்மையும் இதில் நிலைநாட்டப்பட்டது. உண்மையை மதிப்பவர்களுக்குப் பெருவிருந்து இக்கட்டுரைப் பகுதி — **ஸுதர்சனம் ஆசிரியர்**]

"தமிழ் - தாய்மொழி ; சம்ஸ்கிருதம் - தந்தைமொழி" என்று சங்கராச்சாரியார் கூறியதாக செய்திகள் வந்துள்ளன.......

**சங்கராச்சாரியார் பிராமணர் அனைவரின் தலைவர் இல்லை !**

சங்கராச்சாரியார் பிராமணர் அனைவருக்கும் தலைவர் என்று பலர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அது தவறு!

**அத்வைதம் — இறைவனும் நானும் ஒன்று அகம்பிரம்மம் — என்ற திமிர் வாதத்தின் பிரதிநிதியே சங்கராச்சாரி !**

**நாமம் தரிக்கும் வைணவர்களுக்குத் தலைவர் சங்கராச்சாரியார் இல்லை! ஜீயர்களே !**

அவர்களுடைய தத்துவம் என்ன? கடவுள் வேறு; நாம் வேறு; பக்தியால் பகவானைச் சரண் அடைவது அவர்களுடைய கொள்கை.

அதுபோன்றே மத்வாச்சாரியார் வழியைப் பின்பற்றுவோரும் சங்கராச்சாரியார்களை ஒப்புக்கொள்ளமாட்டார்கள்!

**தமிழ்நாட்டைச் சார்ந்த சைவ சித்தாந்தமும் சங்கராச்சாரியாரைத் தலைவராக ஒப்புக்கொள்ளாது!**

ஆகவே.........

சங்கராச்சாரியார்கள் சைவருமல்லர் ! வைணவருமல்லர் ! மத்வர்களுமல்லர் !

அகம்பிரம்மம் என்ற அகங்காரத்தின் பிரதிநிதிகள்!

வரலாற்றுக் காலத்தை எடுத்துக்கொண்டால் இந்த சங்கராச்சாரிகளால் ஒரு நற்பயனும் விளையவில்லை !

முஸ்லிம் மதப்புயலுக்கு எதிராகத் துணிந்து நின்றவர்கள் — விஜய நகர சாம்ராஜ்யத்தை அமைத்தவர்கள்—வைணவச் சாமியார்களே!

திருமலைநாயக்கன் காலத்திலும்—கிறிஸ்துவ மதப்புயலை எதிர்த்தவர்கள் வைணவர்களே !

**இலக்கியத்திலும் கம்ப இராமாயணம் போன்ற தமிழ்ப்பனுவல்களைத் தந்தது வைணவர்களே !**

## தமிழ்ப்பற்றுள்ள வைணவர் சிறப்பு !

1. வேதத்திற்கு நிகராக திராவிடவேதம் என்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைப் பெருமைப்படுத்தினர் !

2. தமிழிலும் கடவுளைத் தொழலாம் என்று நிலைநாட்டினர் !

3. தலைசிறந்த ஆழ்வார் நம்மாழ்வார் எனும் தமிழரே !

4. திருப்பாணாழ்வார் என்ற தாழ்த்தப்பட்டவரை பிராமணர் தோளில் ஏற்றி திருவரங்கத்தினுள் கொண்டு சென்றனர் !

5. ஊர்ப்பெயர், கோவில் பெயர் தூயதமிழில் இருக்கச்செய்தனர் !

6. தமிழில் நல்ல பல காவியங்கள் ஆக்கிட வாய்ப்புத் தந்தனர் !

ஆனால்—சங்கராச்சாரியரின் அத்வைத மதப்பிரிவு ஏதும் செய்யவில்லை!

தேவாரம், திருவாசகம் போன்றவற்றைத் தந்தது சைவ சித்தாந்திகளே !

சங்கரர் மடத்தில் ஒரு தமிழ் நூல்—தமிழ்க்காப்பியம் உருவாக்கப் பட்டதாக வரலாறே இல்லை!

## தமிழின் -தமிழரின் விரோதிகள் சங்கராச்சாரிகள் !

மடம், சொத்து, வைரநகை, வைடூரியக்கிரீடம், வயல், தோப்பு, பல்லக்கு என்று ஏராளமான செல்வங்களை வைத்துக்கொண்டு, " துறவி " என்று ஏய்த்துத்திரியும் இந்தச் சங்கராச்சாரியார்களின் "பெரியவாளின்" பழைய கதை இங்கு நினைவு கொள்ளத்தக்கது!

"ஆண்டாளின்" திருப்பாசுரத்தில் "தீக்குறளை(ச்) சென்றோதோம்" என்ற ஒரு பாடல் வரி வருகிறது.

அதற்குப் பொருள் கூறவந்த "பெரியவாள்" என்ற திமிர்வாதி— "தீக்குறள் என்பது திருக்குறள் தான்" என்று கூறினார்!

தமிழகமே கொதித்து எழுந்தது. காஞ்சிகாமகோடி பீடாதி பதியை ஓட ஓட விரட்டியது. முப்பது ஆண்டுகள் அந்த மனிதர் மடத்தின் மூலையில் முடங்கிக் கிடந்தார் !

இப்போதிருக்கும் "சின்னவாளும்" சம்ஸ்கிருதம் நமது தந்தை மொழி என்று 'வால்' நீட்டுகிறார் !

இந்த "சின்னவாள்"தான் சத்துணவுத் திட்டத்துக்கு மடங்கள் நிதி கொடுக்கக்கூடாது என்று கூறிய சுக்ராச்சாரி !

பாடல் ஒன்றுதான் நமது நினைவுக்கு வருகிறது; "இந்தத் திண்ணைப் பேச்சு வீரரிடம் ஒரு கண்ணாயிருக்கணும்—அண்ணாச்சி".

---



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-36] [ஒளி-2

# அரசியல்வாதிகளுக்கு அறிவுரை

சென்றமாதம் நமது பத்திரிகை முடிவடையும் தருவாயில் நமது சென்னை அன்பர் ஒருவர் சென்னையிலிருந்து வெளிவரும் 'நீரோட்டம்' என்னும் அ. தி. மு. க. பத்திரிகையில் அதன் ஆசிரியர் "சங்கராச் சாரியாருக்கு சில வினாக்கள்" என்னும் தலைப்பில் எழுதியிருந்த தலையங்கத்தை அனுப்பியிருந்தார். அக்கட்டுரையில் வைணவர்கள் தமிழுக்குச் செய்த ஸேவையைப் பற்றிய பல உண்மைகளும், சங்க ராசாரியர்களைப் பற்றிப் பொதுஜனப்பத்திரிகைளில் ஓயாமல் செய்யப் படும் புகழ்பாடுதலின் பொய்ம்மையும் தெளிவாக விளக்கப்பெற்றி ருந்தன. இதை வைணவ உலகம் அறியவேண்டியது மிக அவசிய மாகையால் இதை உடனே அச்சிட்டு சென்ற இதழில் முகப்பில் இணைத்து வெளியிட்டோம். இதைக் கண்ட ஏராளமான அன்பர்கள் உண்மையைத் துணிவுடன் வெளியிட்டதற்குப் பாராட்டைத் தெரி வித்திருக்கிறார்கள். ஒரு சில அன்பர்கள் அந்த நீரோட்டக்கட்டுரை யிலும், கலைஞர் கருணாநிதி முதலான மற்றும் பல அரசியல்வாதிக ளாலும் ஸம்ஸ்கிருத மொழியின்மேல் வாய்க்குவந்தபடியெல்லாம் நிந்தைகள் பொழியப்படுவதை எடுத்துக்காட்டி அவற்றுக்குப் பதி லுரைத்து உண்மையை உலகுக்கு வெளிப்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதன்படி இத்தலையங்கம் எழுதப் படுகிறது.

ஒருமொழியைப் புகழ்ந்தோ இகழ்ந்தோ பேசுகிறவர்கள் அம் மொழியை நன்கு கற்றிருக்கவேண்டும். கருணாநிதி, அடியார் போன்ற அரசியல்வாதிகள் ஸம்ஸ்கிருதத்தைச் சிறிதும் கற்காத வர்கள். இவர்களுக்கு வடமொழியை நிந்திப்பதற்குத் தகுதியே யில்லை. "'பிராகிருதம்' என்றால் 'முன்பு' செய்யப்பட்டது. 'சமஸ் கிருதம்' என்றால் பின்பு செய்யப்பட்டது என்பதே பொருள். மேலும் ஆரியமும் பிராகிருதமும் கலந்ததே வேதமொழி. வேதம் பாடியவர்கள் முதலில் பாடியது சமஸ்கிருதத்தில் இல்லை" என்று எழுதுகிறார் அடியார். ஸம்ஸ்கிருதத்தையும் வேதத்தையும் கற்றவர்

களுக்கு இக்கூற்றுகள் மிகத் தவறானவை என எளிதில் விளங்கும். ஒவ்வொரு பாஷையிலும் நாகரீகமொழி, கொச்சைமொழி என இரண்டுண்டு. இதைத் தமிழிலும் காண்கிறோம். ஸம்ஸ்கிருதத்திலும் நாகரீகமொழி 'ஸம்ஸ்கிருதம்' என்றும், கொச்சைமொழி 'ப்ராக்ருதம்' என்றும் வழங்கப்படுகிறது. இது ஸம்ஸ்க்ருத நாடகங்களைக்கற்றவர்கள் அனைவரும் அறிந்தது. வேதம் ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்ததேயொழிய ப்ராக்ருதத்தில் அமைந்ததல்ல என்பது வேதத்தைக் கற்றவர்களுக்கு நன்கு தெரியும். ஆக, வடமொழியைக் கற்காமல் அதை நிந்திக்கப்புகுந்தது முறையற்ற செயல் என்பது நடுநிலைநிற்கும் நல்லோர்களுக்கு நன்கு விளங்கும். தமிழில் மிகப் பழைய நூல்களான சங்கநூல்களில் பரிபாடல் ஒன்றாகும். அதில் பற்பல இடங்களில் அந்தணர் ஓதும் அருமறைகள் மனமாரப் பாராட்டப்பட்டுள்ளன. நமது ஸுதர்சனர் பதிலில் ஏழாவது சதகத்தில் 37.வது கேள்வியின் பதிலில்—'' விடுதலை ''யில் நம்மைக் குறிப்பிட்டுத் தலையங்கம் எழுதியிருந்த வீரமணிக்கு அப்பரிபாடல் பகுதிகளையெல்லாம் எடுத்துக்காட்டி '' வசைபாடாமல் நேர்மையுடன் இவ்விஷயங்களுக்குப் பதிலுரைக்கும் வல்லமை விடுதலைக்கு இருந்தால் அதை வரவேற்கிறோம்'' என்று எழுதியிருந்தோம். நாலு மாதமாகியும் இன்றுவரை விடுதலையில் யாதொரு பதிலுமில்லை. அப்பகுதியையும், இவ்விஷயத்தை விரிவாக நிலைநாட்டும் நமது '' சங்ககாலத் தமிழர் சமயம் '' என்னும் நூலையும் அடியாருக்கும் அனுப்பியிருக்கிறோம். சங்ககாலச் சான்றோர்கள் வடமொழியின் மீதும், வேதத்தின்மீதும் ஒப்பற்ற மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதை மறுத்து எழுதமுடியுமானால் அதைச் செய்யலாம். சங்ககாலம் தொடங்கி இன்றளவும் ஆயிரக்கணக்கான தமிழ்ச்சான்றோர்கள் வடமொழியின்மீது மிகுந்த மதிப்பைக்காட்டியிருக்கும்போது, இக்கால அரசியல்வாதிகள் அம்மொழியின் மீது த்வேஷம் பாராட்டுவது மிகவும் முறையற்றது. கங்கை காவிரி முதலான நதிகளில் நீராடமாட்டேன் என்று சொன்னால் அது அவனுக்கு நஷ்டமேயொழிய அந்த நதிகளுக்கு இழப்பன்று. அதுபோலவே தமிழையோ வடமொழியையோ இகழ்ந்து ஏற்க மறுப்பது மறுப்பவர்களுக்கு நஷ்டமேயொழிய அம்மொழிகளுக்கு நஷ்டமில்லை. இதனாலேயே வைஷ்ணவர்கள் தொன்றுதொட்டு இவ்விரு மொழிகளையும் இரண்டு கண்களாகப்போற்றி உபயவேதாந்திகள் என்று தங்களை அழைத்துக் கொள்வதில் பெருமை கொள்கின்றனர். தமிழுக்கு வைணவர்செய்த ஸேவையை மனமாரப் பாராட்டிய அடியார்போன்ற அரசியல்வாதிகள் இவை அனைத்தையும் நடுநிலைநின்று ஆராய்ந்து வடமொழியின் மீதுள்ள வெறுப்பைக் கைவிடவேண்டும் என்று கேட்டுக் கொள்கின்றோம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்
சோதி-36] [ஒளி-3

# அவைஷ்ணவ வைதிகர்களுக்கு அறிவுரை—(1)

[ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
"ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.]

வேதத்தைப் ப்ரமாணமாக ஒப்புக்கொண்டபோதிலும், விஷ்ணுவைப் பரம்பொருளாக ஒப்புக்கொள்ளாத அனைவருக்கும் இவ்வறிவுரை அளிக்கப்படுகிறது.

மிகப்பழங்காலத்தில் வைதிகமதத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் "விஷ்ணுவே ஜகத்காரணன், வீடு பேறளிப்பவன்" முதலான ஒரே மதக்கொள்கையினையுடையவர்களாயிருந்தோம். மிகப் பழைய வடமொழிநூல்களான மநுஸ்ம்ருதி முதலான ப்ராசீன ஸ்ம்ருதிகளிலும், ஸ்ரீராமாயணம், மஹாபாரதம் என்னும் இதிஹாஸங்களிலும், தமிழ் நாட்டில் மிகப் பழைய நூல்களான சங்க இலக்கியங்களிலும், வைதிகர்களான த்ரிமத ஆசார்யர்களின் — குறிப்பாக அவர்களில் முந்தியவரான ஆதிசங்கரரின் பாஷ்யங்களிலும், இவ்விஷயம் மிகத்தெளிவாக விளங்குகிறது.' 'விஷ்ணுசித்தவிஜயம்', 'சங்கரரும் வைணவமும்', 'சங்ககாலத் தமிழர் சமயம்' முதலான நூல்களில் நாம் இதை நிலைநாட்டியிருக்கிறோம். இன்றளவும் இந்நூல்களை எவராலும் மறுக்க இயலவில்லை. "வைஷ்ணவர்களே அநந்த ஸ்திரபலமான மோக்ஷத்தைப் பெறுகிறார்கள். மற்ற தேவதைகளின் பக்தர்கள் அல்பாஸ்திரபலங்களையே பெறுகிறார்கள்" என்று ஆதிசங்கரர் கீதா பாஷ்யத்தில் தெளிவாக எழுதியிருக்கிறார். "மோக்ஷமிச்சேத் ஜநார்த்தநாத்" [மோக்ஷத்தை விஷ்ணுவிடமிருந்தே பெற விரும்பவேண்டும்] என்பது வைதிகர்கள் அனைவரும் அறிந்த ப்ரமாணமாகும். இன்று சைவர்களாகவும், சாக்தர்களாகவும் ஆகிவிட்ட அத்வைதிகளின் அனுஷ்டானங்களில் 'விஷ்ணுவே பரம்பொருள்' என்பதைக் காட்டும்

பல அம்சங்கள் இன்றும் காணப்படுகின்றன. அத்₃வைத பீட₂ாதி₄பதிகள் இன்றும் 'நாராயணஸ்ம்ருதி' என்றே கையெழுத்திடுகின்றார்கள். நமது வேத₃ங்களில் ஒரு தெய்வம் மற்ற எல்லா தெய்வங்களைக் காட்டிலும் சிறந்ததாகவும், அங்க₃ங்களான அவற்றுக்கு ஆத்மாவாகவும் இருப்பதாக மிகத் தெளிவாக ஓதப்பட்டுள்ளது. **''அக்₃நிரவமோ தே₃வதாநாம் விஷ்ணு: பரம:''** என்னும் வேத₃ வாக்யம் தே₃வதைகளில் மேலெல்லையில் நிற்கும் இப்பரதெய்வம் விஷ்ணுவே என்று மிகத் தெளிவாகக் காட்டுகிறது. **''பரோ மா யஸ்மாத் ஸ: பரம:''** [எவனுக்கு மேல் ஒருவனுமில்லையோ அவன் பரமன்] என்பது பரமஶப்₃த₃த்தின் பொருள்.

**ஸகலஶப்₃த₃ங்களும்** எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியான இப்பரதெய்வத்தின் பெயர்களே என்னும் கருத்துடைய **''ஏகம் ஸத்₃விப்ரா ப₃ஹுதா₄ வத₃ந்தி''** [பரம்பொருள் ஒன்றே; வேதமறிந்த அந்தணர் அதைப் பல பெயர்களால் குறிக்கின்றனர்] என்னும் வேத₃வாக்யமும் இப்பரம்பொருளுக்கு ஆகாஶம், வாயு, அக்₃நி, ஶிவன், ருத்₃ரன், ஹிரண்யக₃ர்ப்ப₄ன், ஹரி, அநந்தன், நாராயணன், விஷ்ணு முதலான பல பெயர்கள் உண்டென்று கூறிற்றேயொழிய, இப்பெயர்களால் ப்ரஸித்₃தி₄பெற்ற சேதநாசேதநப்பொருள்களெல்லாம் பரம்பொருள் என்று கூறவில்லை. இப்படியிருக்கும்போது இவ்வாக்யம் ஒன்றையே பற்றிக்கொண்டு ''எல்லா தெய்வங்களும் ஒன்று'' என்று இவ்வாக்யம் நிலைநாட்டுவதாக அத்₃வைதிகள்கூறும் வாத₃ம் எப்படிப் பொருந்தும்? இவற்றை நடுநிலைநின்று ஆராய்ந்தால் 'நாராயணன்' என்னும் தனிப்பெரும் பெயருடைய விஷ்ணுவே ஜக₃த்காரணமாய், முமுக்ஷுக்களால் ப₄க்தி செலுத்தத்தக்க பரம்பொருள் என்று தெளிவாகத் தேறும்.

**''ப்₃ரஹ்மா நாராயண: ஶிவஶ்ச நாராயண:'', ''ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்₃ர:''** என்று மும்மூர்த்திகளையும் வேதங்கள் ஒன்றாகவே கூறுகின்றனவேயெனில், **''ஶக்ரஶ்ச நாராயண:... தி₃ஶஶ்ச நாராயண: விதி₃ஶஶ்ச நாராயண:'' ''ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம''** என்று அருகிலேயே சேதநாசேதனங்கள் எல்லாமே பரம்பொருள்தான் என்றல்லவோ உபநிஷத்துக்கள் முழங்குகின்றன. **''தஜ்ஜலாந்''** முதலான பல இடங்களில் அனைத்தும் பரம்பொருளே என்று கூறுவதற்குக் காரணம் — பரம்பொருள் காரணமாகவும் மற்றவை கார்யங்களாகவும், பரம்பொருள் ஆத்மாவாகவும் மற்றவை அதற்கு ஶரீரமாகவும் இருப்பதே என்று மிகத் தெளிவாகக் காட்டுகையால் இந்த வாத₃ம் விலைசெல்லாது.

---

# அடியாரின் நேர்மை

ஸுதர்சனம் 422 (துந்துபி தை) தலையங்கம் குறித்து '83 பிப்ரவரி 3, 4 தேதி நீரோட்டத்தில் அடியார் எழுதியிருக்கும் பதில் சமீபத்தில் நமது அன்பர் ஒருவரால் அனுப்பப்பட்டு நமது பார்வைக்கு வந்தது. " **தமிழை 'நீசபாஷை' என்று ஒதுக்கியபோது கடவுளின் 'நேசபாஷை' ஆக்கியது வைணவமே!** " என்னும் அக் கட்டுரையின் தலைப்பு உண்மையை உணர்த்துவதாயுள்ளது. " **பழந்தமிழ் சங்ககால மதத்தின் புத்துருவம்தான் வைணவம்** " என்னும் உபதலைப்பும் மிகவும் நேர்மையானது. நமது 'சங்ககாலத்தமிழர் சமயம்' 'சாதிமத ஆராய்ச்சி' என்னும் நூல்களில் இதை அசைக்க முடியாதபடி நிலைநாட்டி, இரண்டு உலகத்தமிழ் மகா நாடுகளின் போதும் ஆயிரக்கணக்கான தமிழறிஞர்களுக்கு வழங்கினோம். கருணாநிதி, வீரமணி போன்ற அரசியல்வாதிகளுக்கும் அளித்தோம். அவர்களில் எவர்க்கும் இவ்வுண்மையை ஒப்புக்கொள்ளும் நேர்மை யில்லை. அடியார் இவ்விஷயத்தில் நேர்மையைக் காட்டியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. 'வடமொழியை நிந்திக்கிறோமா' என்னும் தலைப்பில்,

"வடமொழியை நிந்திக்கலாமா? வடமொழி வெறுப்பை அடியார் கைவிடவேண்டும் என்று அன்போடு 'வைஷ்ணவ சுதர்சனம்' கேட்கிறது. சமஸ்கிருதம் தமிழர்களுக்குத் தந்தை என்று 'சங்கராச்சாரியார்' கூறியதால் எழுந்த வேகத்தில் எழுந்த சாட்டையடியே தவிர...வேறில்லை! தமிழுக்கு நிகராக சமஸ்கிருதம் உலகிலேயே மிகச் சிறந்த PRIMARY CLASSICAL LANGUAGE உயர் தனிச் செம்மொழி என்பதை ஒப்புக்கொள்வோம். *தமிழுக்கு நிகராக அறிவார்ந்த கருவூலங்களும் மணியும் - முத்தும் - பவளமும் புதைந்து கிடக்கும் ஒரு புதையல்காடு—சமஸ்கிருதம்! வெறும் பக்திப்பாடல்கள் மட்டு மல்லாது நாத்திகம் உள்பட...காமசாஸ்திரம் உள்பட...அறிவியல்துறை அனைத்துக்குமான வேர்க்கருத்துக்கள் உள்பட நிறைந்து குலுங்கும் தங்கக் கனிதந்தவனம் சமஸ்கிருதம் என்பதை இமயத்தின் உச்சி ஏறியும் நாம் பறைசாற்றுவோம்!"* என்று அடியார் எழுதியிருப்பதும் அவரது நேர்மையைக் காட்டுகிறது. சம்ஸ்கிருதத்தைத் தான் 'சிறிதுகற்றவனே' என்று அடியார் கூறுகிறார். நன்கு கற்றால் தாம் இக்கட்டுரையில் வடமொழி பற்றி எழுதியிருக்கும் பல கருத்துக்களை மாற்றிக்கொள்ள வேண்டி யிருக்கும் என்பது எமது முடிவு. சம்ஸ்கிருதத்தைக் குறைத்துப் பேசவேண்டும் என்னும் எண்ணத்துடன் மேல்நாட்டு ஆராய்ச்சி யாளர் சிலரும், இந்நாட்டு ஆராய்ச்சியாளர் சிலரும் எழுதியிருப்ப தையும், சைவர்கள் சிலர் எழுதியிருப்பதையும், சமீபகாலத்தில் வாழ்ந்த கிறிஸ்தவரான மனோன்மணீய ஆசிரியர் எழுதியிருப்பதையும் அடியார் எடுத்துக் காட்டுகிறார். 'வடமொழியாளன் மீது நக்கீரன் சாபம்' என்னும் தலைப்பில் 'சுவாகா' என்னும் வடமொழிச் சொல்லுடன் முடியும் இருபாடல்களை எழுதியிருக்கிறார் அடியார். இப்பாடல்களின் நடையைப் பார்த்தாலே, சங்ககாலப் புலவரான நக்கீரர் பாடிய

லையல்ல இவை என்பதை எவரும் எளிதில் உணரலாம். வடமொழி வெறுப்புடைய எவரோ சமீபகாலத்தில் பொய்க்கதையைப் புனைந்து எழுதிய பாடல்களே இவை என்பது தெளிவு. சங்ககாலம்முதல் இன்றளவும் ஆயிரக்கணக்கான தமிழ் அறிஞர்களும், சைவர்களும், வைணவர்களும் நூற்றுக்கணக்கான மேல்நாட்டு ஆராய்ச்சியாளர் களும், இந்நாட்டு ஆராய்ச்சியாளர்களும் வடமொழியை நன்கு கற்றுணர்ந்து அதை மனமாரப்பாராட்டியிருப்பது அனைவரும் அறிந்தது. இவர்களைப் பின்பற்றுவது நியாயமா? வெறுப்பினாலே வடமொழியை நிந்தித்த ஒரு சிலரைப் பின்பற்றுவது நியாயமா? என்று முடிவுசெய்வதை அடியாரின் மனச்சாட்சிக்கே விட்டுவிடுகிறோம். அடியார் தன் கட்டுரையின் முடிவுப்பகுதியில் கீழ்க்கண்ட வாக்கியங் களின்மூலம் தமிழுக்கு ஒப்பற்ற தொண்டுசெய்திருக்கும் வைணவர்களை மனமாரப்பாராட்டி நன்றி கூறியிருக்கும் நேர்மையைப் பாராட்டி நன்றி கூறி இத்தலையங்கத்தை நிறைவுசெய்கிறோம்.

## அடியார் கட்டுரையின் முடிவுப்பகுதி

ஒரு கருத்தை ஏற்கலாம். தமிழ்—வடமொழி இரண்டுக்கு மான மோதலைத் தவிர்க்கும் "நல்லிசைத் தூதுவர்"களாய் விளங் கியவர்கள்—வைணவர்களே! என்பதுதான் அந்தக் கருத்து. அந்த "உபய வேதாந்திகளாம்" வைணவர்களின் வரலாற்றுப் பணி தமிழையும் — சமஸ்கிருதத்தையும் செழுமைப்படுத்தி யதை ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும். *மறைத்து வைக்கப் பட்ட வேதத்தை, திருக்கோட்டியூர் மதில்மீது நின்று உரக்க மொழிந்த இருபது நூற்றுண்டுகளின் இணையற்ற புரட்சிவீரன் இராமாநுசனின் வாரிசுகளை*.....படைகொண்ட மன்னரின் மிரட்டலுக்கு அஞ்சாது—கொள்கையைக் கூறிக் கண்களை இழந்த மாவீரன் கூரத்தாழ்வானின் பரம்பரையை.....*சங்கத் தமிழ் மதக்கொள்கைகளுக்கு உயிரூட்டி—புதுக்கி—புது மெய்ப் பொருள் கூறிய ஞானிகளை*..."தமிழ்—நீசமொழி" என்று அகங் காரத்தோடு கூறியதை மறுத்து தெய்வத்தின் நேசமொழி எனக் கூறி அந்த மொழியைக் கோவிலுக்குள் கொண்டு சென்ற தமிழ்க் காதலர்களை...திருவரங்கன் திருப்படிமை காண ஏங்கி நின்ற திருப்பாணாழ்வார் என்ற தாழ்த்தப்பட்ட குலத்தவனை... திருவரங்கக்கோவில் அர்ச்சகரின் தோளில் ஏற்றி, கோவிலுக்குள் கொண்டுசென்ற உத்தமர்களை......வைணவர்களை......தமிழே உலகின் முதல்மொழி என்றும், தமிழர்களே உலகின் முதல் குடிமக்கள் என்றும் ஆதாரங்களால் நிலைநாட்டிய பி. டி. சீனிவாச அய்யங்கார் என்ற வைணவரின் வழி வழி வந்த தமிழ் நேசர்களை...*தமிழ்கூறும் நல்லுலகம் தலைவணக்கம் செய்து மலையோரத்துப் பூக்களினால் மாலைசெய்து அணிவித்துப் பெருமைப் படுத்தல்வேண்டும்! அப்படிச் செய்யாவிடில்...இந்தத் தமிழகம் நன்றிகொன்ற தமிழகமாய் போய்விடும்!*



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-36] [ஒளி-5

# அவைஷ்ணவ வைதிகர்களுக்கு அறிவுரை — (2)

[ ஸுதர்சனம் ஆசிரியர் ]

ஆதிசங்கரர் "ஜீவனும் ப்3ரஹ்மமும் ஒன்றே; ப்3ரஹ்மம் எந்த கு3ணமுமற்றது; உலகம் முழுவதும் பொய்த்தோற்றம்" என்னும் கொள்கைகளையுடைய அத்3வைதமதத்தை வேதத்தின் கருத்தாகத் தமது நூல்களில் கூறினார். ஆனால் இந்தப் பொய்த்தோற்றமான உலகில் சேதனாசேதனங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து அழிப்பவனாய், ஸகல கல்யாணகு3ணங்களும் உடையவனாய் விளங்கும் ஸகு3ண ப்3ரஹ்மம் நாராயணனே என்பதையும் தமது பா4ஷ்யங்களில் மிகத் தெளிவாகக் காட்டியிருக்கிறார். ப்3ரஹ்மஸூத்ர பா4ஷ்யத்தில் பாஞ்சராத்ரத்தைப்பற்றிய அதி4கரணத்தில் "நாராயணனே பரமாத்மாவாகவும், ஸர்வாத்மாவாகவும் இருக்கின்றான்" என்று அவர் முழங்கியிருக்கிறார். கீ3தாபா4ஷ்யத்தைத் தொடங்கும்போதே "நாராயணன் அவ்யக்தம் என்னும் மூலப்ரக்ருதியைக்காட்டிலும் மேற்பட்டவன்; மூலப்ரக்ருதியிலிருந்து வ்யக்தமான இவ்வுலகம் உண்டாகிறது; இவ்வுலகத்தின் ஒரு பகுதியான அண்ட3த்தினுள் பூ4மி முதலான எல்லாவுலகங்களும் அமைந்திருக்கின்றன" என்னும் பொருள் உள்ள ஶ்லோகத்தையிட்டு, "ஆதி3கர்த்தாவான நாராயணன் வேத3த்தையும், வேத3மோதும் அந்தணர்களையும் ரக்ஷிப்பதற்காகக் கிருஷ்ணனாக அவதரித்தான்" என்னும் பொருளுள்ள வாக்யத்தையும் கூறியிருக்கிறார். கீ3தாபா4ஷ்யத்தில் பல இடங்களில் "நாராயணன், வாஸுதே3வன், விஷ்ணு" என்று பெயர்பெற்ற தே3வர்தலைவனே எல்லா தே3வர்களையும், எல்லா உலகங்களையும் படைத்தளித்தழிக்கும் முழுமுதல்வன்! அவன் ஒருவனாலேயே மோக்ஷமளிக்கமுடியும்; மற்ற தெய்வங்கள் அல்பாஸ்தி3ரப3லன்களையே அளிக்கமுடியும்" என்றும் முழங்கியிருக்கிறார். உபநிஷத்3பா4ஷ்யத்திலும், ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமபா4ஷ்யத்திலும் இந்நிலையே காணப்

# வைஷ்ணவர்களுடைய கடமை

இந்த இருபதாம் நூற்றுண்டில், குறிப்பாக கடந்த ஐம்பது வருடங்களாக ஸ்மார்த்தர்களால் நடத்தப்படும் விகடன், கல்கி, கலைமகள், இதயம் முதலான பொதுஜனப் பத்திரிகைகளில் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷப் பிரசாரங்களும், வைஷ்ணவத்தைத் திரித்துக் கூறுவதும் இடைவிடாமல் செய்யப்படுகின்றன. இதனுல் வைஷ்ணவர்களில் பலர் தங்கள் மதத்தைத் தவருக அறியும் நிலையும் ஏற்பட்டுள்ளது. இந்நிலையில் வைஷ்ணவர்களுக்கு உண்மையை எடுத்துக்கூறுவதற்காகவே நமது ஸுதர்சனம் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் தொடங்கப்பெற்றது. அண்மையில் தொடங்கப்பெற்ற கீதாசார்யன் இவ்விஷயத்தில் நமக்கு உதவிபுரிந்து வருகிறது. ஆனல் நம்முடைய பத்திரிகைகள் விஷயத்தின் கௌரவத்தாலே சில ஆயிரம் பிரதிகளே அச்சிடப்படுகின்றன. விகடன் முதலானவையோ லக்ஷக்கணக்கான பிரதிகள் அச்சிடப்படுகின்றன. இதற்கு முக்கிய காரணம் அப்பத்திரிகைகளில் மட்டரகமான கதைகளும், சினிமாச் செய்திகளும், அரைநிர்வாணப் படங்களும் வெளியிடப்படுவதே யாகும். உயர்ந்த ஒழுக்கத்துக்கு மதிப்பளிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அத்தகைய பத்திரிகைகளை நடத்துவது இயலாத காரியமாயிருக்கிறது. இதனுல் சங்ககாலத்திலிருந்து பல கோடிக்கணக்கான சான்றேர்களால் பரம்பொருளாகக் குலாவப்பட்டுவரும் திருமால் பொதுமக்களின் பெரும்பான்மையினரால் கண்டகண்ட தெய்வங்களை விடத் தாழ்ந்தவகை நினைக்கப்படும் நிலைமை தோன்றிவிட்டது. சமரசப் போர்வையில் இந்த துஷ்ப்பிரசாரம் பொதுஜனப்பத்திரிகைகளில் செய்யப்படுவதால் வைஷ்ணவர்களில் பலர் "எம்மதமும் ஸம்மதம்", "எல்லா தெய்வங்களும் ஒன்று" என்னும் சந்தர்ப்பவாதக் கொள்கைகளைத் தழுவத் தொடங்கிவிட்டனர். விஷ்ணுகோவில்களில் சைவர்கள், ஸ்மார்த்தர்களுடைய பலவகையான ஆக்ரமிப்புக்களைத் தடுக்க இயலாததாகிவிட்டது ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம். இந்நிலையில் இந்த துஷ்ப்பிரசாரங்களையும்; ஆக்ரமிப்புகளையும் இடைவிடாமல் செய்தும், தூண்டிவிட்டும் வருகின்ற காமகோடிபீடாதிபதிகள் அண்மையில் 'ஞானபூமி' என்னும் மதப்பத்திரிகையைத் தொடங்கச்செய்து அதைக்கொண்டு விஷ்ணு வைஷ்ணவ த்வேஷப் பிரசாரத்தையும், போலிச் சமரசப் பிரசாரத்தையும் பெரிய அளவில் நடத்தும்படி செய்து வருகிருர்கள். இப்படி பெரிய அளவில் செய்யப்படும் பரமாத்ம த்ரோஹமே நம்நாடு சமீபகாலத்தில் அடைந்துள்ள பலவகையான இன்னல்களுக்கு மூலகாரணமென்பது வெளிப்படை.

இந்த துஷ்ப்பிரசாரங்களை முறியடிக்க நாம் செய்யவேண்டுவது என்ன? என்று உண்மையான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒவ்வொருவரும் ஆராய்ந்து அதன்படி விரைவில் செயல்படவேண்டியது அவசியமாகிறது. பொதுஜனப் பத்திரிகைகள் எதுவும் நமக்கு அனுகூலமாயில்லாத சூழ்நிலையில் நாம் வாய்மூலமான பிரசாரத்தையே செய்யவேண்டியுள்ளது. உண்மையான ஸ்ரீவைஷ்ணவர் ஒவ்வொருவரும் தமக்குத் தெரிந்த ஸ்ரீவைஷ்ணவர்களிடம் வைஷ்ணவத்தை அழிப்பதற்குப் பிறர்செய்யும் முயற்சிகளை எடுத்துக்காட்டி ஜாக்கிரதையாயிருக்கும்படி செய்யவேண்டும். ஞானபூமி போன்ற வைஷ்ணவ விரோதப் பத்திரிகைகளை வாங்காமலிருக்கும்படி வற்புறுத்தவேண்டும். பொதுஜனப் பத்திரிகைகளில் உள்ள ஒரு சில நேர்மையாளர்களிடம் அப்பத்திரிகைகளில் செய்யப்படும் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ பிரசாரங்களை நிறுத்துவதற்கு ஆவனசெய்யும்படி கேட்டுக்கொள்ள

படுகிறது. பிற்காலத்தில் விஶிஷ்டாத்₃வைதிகளோடும், த்₃வைதிகளோடும் கடுமையான விரோத₄ம் ஏற்பட்ட காரணத்தாலே பெரும்பாலும் ஶைவர்களாகவும், ஶாக்தர்களாகவும் மாறிவிட்ட அத்₃வைதஸமூஹம் கண்டகண்ட தெய்வங்களுக்கெல்லாம் பரத்வம் கூறும் துதிநூல்களை இயற்றி அவற்றை ஆதி₃ஶங்கரரின் தலையிலே சுமத்திவிட்டது. அவர் கனவிலும் கருதாத ஶைவம், ஶாக்தம், கா₃ணபத்யம், கௌமாரம், ஸௌரம் என்னும் மதங்களை அவர் ஸ்தா₂பித்ததாக அபாண்டப் பொய்யைக் கட்டுப்பாடாக ஓயாமல் ப்ரசாரம் செய்து, வைஷ்ணவ அத்₃வைதமத ஸ்தா₂பகரான அவரை ஷண்மத ஸ்தா₂பகராக ஆக்கிவிட்டது. இத்தகைய ஆசார்ய த்₃ரோஹம் உலகில் வேறெந்த ஸமூஹத்தினராலும் செய்யப்படவில்லை என்பது நடுநிலையாளர்களால் குறிக்கொள்ளத்தக்கது.

"தான் கெட்டதோடல்லாமல் சந்த்₃ரபுஷ்கரிணியையும் கெடுத்தான்" என்று பொதுஜனவழக்கு ஒன்றுண்டு. அதுபோலே—தாங்கள் தங்கள் மதத்தை மாற்றிக்கொண்டு ஆசார்யத்₃ரோஹிகளானதுபோலே, வைஷ்ணவர்களும் தங்கள் மதத்தை மாற்றிக்கொண்டு, தங்களுடைய ஆழ்வார்கள் ஆசார்யர்களுக்கு த்₃ரோஹிகளாகவேண்டும் என்று தங்கள் வசத்திலுள்ள பொதுஜனப் பத்திரிகைகளில் ஓயாமல் பொய்ப்பிரசாரம் செய்து வருகிறார்கள் இக்கால அத்₃வைதிகள். ஆழ்வார்கள், ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளை அங்கொன்றும், இங்கொன்றுமாக எடுத்து அவற்றுக்கு அவப்பொருள் கூறி, அவர்களை சமரஸ வாதி₃களாகச் சித்திரிக்க முயலுகின்றார்கள். "இது அவர்களுடைய மற்ற ஸ்ரீஸூக்திகளுக்கு முரணாயிருக்கிறதே" என்று நாம் எடுத்துக்காட்டினாலும், தங்களுடைய பத்திரிகை ப₃லத்திமிராலே அவற்றுக்குப் பதல் சொல்லுவதில்லை; மேலும் தவறு செய்கிறார்கள். இது நேர்மையோ, நியாயமோ ஆகுமா? என்பதை அத்₃வைதிகளில் உள்ள நல்லவர்கள் சிந்தித்து, மற்றவர்களைத் திருத்தவேண்டும். "பொய்யின் அடிப்படையில் ஒற்றுமை உண்டாகாது. வைஷ்ணவம், ஶைவம், அத்₃வைதம் ஆகிய மூன்று மதங்களுமே அவரவர் குழுக்களிலே உறுதியாகப் பின்பற்றப்படவேண்டும். பொதுமேடைகளில் எந்த மதத்தையும் அழிக்கமுயலாமல், உள்ளபடி பிரசாரம் செய்யவேண்டும். இதுவே ஒற்றுமைக்கு நல்வழி" என்னும் நல்லறிவு அத்₃வைதிகளுக்கு ஏற்படவேண்டும். இது விரைவில் ஏற்படாவிட்டால் ஶைவம், வைஷ்ணவம், அத்₃வைதம் ஆகிய மூன்று மதங்களும் அழிந்து, அடுத்த நூற்றாண்டில் நமது பழம்பெரும் பா₄ரததே₃ஶம் கிறிஸ்தவர்களும், இஸ்லாமியர்களும் மலிந்ததோர் நாடாகிவிடும். இந்த அபாயத்தை உணர்ந்து, அவ்வபாயத்தைப் போக்கிக்கொள்ளத் தக்கவாறு அத்₃வைதிகள் நடந்துகொள்வார்களா?

வேண்டும். இவ்விஷயத்தில் திரு. தீபம் நா. பார்த்தசாரதி ஒருவரே நேர்மையாகச் செயல்படுவதைக் காண்கிறோம். தினமணிக்கதிரில் ஆசிரியராயிருக்கும்போது அவர் ஸுதர்சனத்தை நேர்மையான பத்திரிகை என்று பாராட்டினார். திருக்குறுங்குடிக்கோவிலில் சிவனுக்கு இடம் அளிக்கப்பட்டிருப்பது சிவ விஷ்ணு ஸாம்யத்தைக் காட்டுகிறது என்று அவர் எழுதியபோது, அதன் தவறை நாம் எடுத்துக்காட்டினோம். உடனே தவறை ஒப்புக்கொண்டார். இப்போது அவர் கதைக்கதிரில் ஆசிரியராயிருந்து வருகிறார். ஏப்ரல் '83 கதைக்கதிரில் மணிவண்ணன்பதிலில் '' இன்றைய பத்திரிகை உலகில் கவலையில்லாத மனிதர் யார்? '' என்னும் கேள்விக்கு ''திருச்சி ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம் ஆசிரியர் புத்தூர் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார். அவரிடம் பயம் இல்லை. அதனால் கவலையுமில்லை'' என்று பதில் உரைத்திருக்கிறார். பொதுஜனப் பத்திரிகைகளிலுள்ள மற்றும் பல நேர்மையாளர்களும் இப்படி உண்மையைச் சொல்ல முன் வரவேண்டும் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டுக்கொள்ளவேண்டும்.

## ஆழிமழைக்கண்ணா !
## வாழ உலகினில் பெய்திடாய்

நம் தமிழ்நாடு இப்போது கடுமையான தண்ணீர்ப்பஞ்சத்தில் சிக்கி அவதியுறுகின்றது. விரைவில் மழை பொழியாவிடில் மக்களுக்கு மிகுந்த துயரம் ஏற்படும். இதற்குக் காரணம் எல்லாத் துறைகளிலும், குறிப்பாக மக்களை நல்வழிப்படுத்தவேண்டிய மதத் துறையில், இந்நாட்டில் பொய்ம்மையும், நேர்மையின்மையும் தலைவிரித்தாடுவதும், பரமாத்மத்₃ரோஹம் இடைவிடாமல் செய்யப்படுவதுமேயாகும். ''மேகோ₄ த₃ய:.........விஷ்ணோர் விசித்ரா: ப்ரப₄வந்து மாயா:'' என்று ரிஷிகள் அருளியபடியே, மேக₄ம் தோன்றி மழை பொழிவது விஷ்ணுவின் ஸங்கல்பத்தாலேயேயாகும். அந்த விஷ்ணுவுக்கு த்₃ரோஹம் இழைத்துக்கொண்டேயிருப்பவர்கள் எத்தனை ப்ரார்த்தித்தாலும் மழை பொழியாது. அவர்கள் விளம்பரம் செய்துகொண்டு கூட்டம்கூடிப் பிரார்த்தித்தது பயனற்றுப் போனதைக் கண்கூடாகக் காண்கிறோம். கடல்சூழ்ந்த மண்ணுலகம் வாழவேண்டுமென்று திருவாராதனத்தில் தினந்தோறும் பிரார்த்தித்து வரும் ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் இதன்பொருட்டு எம்பெருமானைப் பிரார்த்தித்தால் நிச்சயம பலன் கிடைக்கும். ஆனால் நமக்குப் பத்திரிகைகளில் விளம்பரம் கிடைக்காது. விளம்பரத்தை நாம் எதிர்பார்க்கவும் கூடாது. நமது அன்னையான பூ₄மித்தாய் இங்கு ஆண்டாளாக அவதரித்து ''ஆழிமழைக்கண்ணா!''என்று தொடங்கும் பாசுரத்தில் ''வாழ உலகினில் பெய்திடாய்'' என்று வருணனை நியமித்திருக்கிறாள். திருவாராதனத்தில் ''இன்னமொரு நூற்றாண்டிரும்'' என்று வாழித்திருநாமம் சொல்லி முடித்தவுடன் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் ''ஆழிமழைக்கண்ணா!'' என்று தொடங்கும் திருப்பாவை நாலாம் பாசுரத்தை அனுஸந்திப்பதன்மூலம் மழைபொழியப் பிரார்த்திக்கவேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்கள் உள்ளம் உருகிப் பிரார்த்தித்தால் அதற்கு விரைவிலேயே பலன் கிட்டும். மழை பொழிந்து நாட்டில் தண்ணீர்ப்பஞ்சம் நீங்கும்வரை இப்பாசுரத்தைத் திருவாராதனத்தின் இறுதியில் அநுஸந்தித்து எம்பெருமானைப் பிரார்த்திக்கும்படி ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரையும் இறைஞ்சுகிறோம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-36] [ஒளி-6

# துக்ளக் துர்வாசரின் கட்டுரைகள்—ஓர் ஆலோசனை

—○—

[S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A B L., அட்வகேட்,
'ஸுதர்சனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.]

ஏப்ரல் 1, 15. மே 1 துக்ளக் இதழ்களில் "தமிழன் என்று சொல்லடா தலைகுனிந்து நில்லடா" என்னும் தலைப்பில் துர்வாசர் என்னும் புனைபெயருடையவரால் கட்டுரைகள் எழுதப்பட்டுள்ளன. குமுதம், விகடன், இதயம், கல்கி, சாவி, குங்குமம், தாய் முதலான வாரப்பத்திரிகைகளில் சோரம் போகும் கதைகளும், நிர்வாணப் படங்களும், மட்டரகமான சினிமாச்செய்திகளும் வெளிவருவதைப் படிக்கும் தமிழர்களின் ஒழுக்கம் மிகவும் குலைந்துவருகிறது என்பதை எடுத்துக்காட்டி, "இப்பத்திரிகைகளால் தமிழகமே தலை குனிந்து நிற்கவேண்டியிருக்கிறது" என்று துர்வாசர் வருத்தத்துடன் எழுதுகிறார். அவரால் தாக்கப்பட்ட ஓர் எழுத்தாளர் எழுதிய கடிதத்துக்கும் துக்ளக்கில் துர்வாசரால் விரிவாகப் பதில் கூறப்பட்டிருக்கிறது. துர்வாசரால் தாக்கப்படும் சில பத்திரிகைகளில், குறிப்பாக 28—4—83 குமுதம் அரசு பதிலில், துர்வாசரின் கட்டுரைகள் கிண்டல் செய்யப்பட்டுள்ளன. "துக்ளக்கில் துர்வாசர் எழுதுவது எல்லாப்பத்திரிகைகளிலும் உள்ள எல்லா மட்டரகமான விஷயங்களையும் திரட்டிக்கொடுப்பதாக இருக்கின்றது. ஆகையால், துக்ளக்கில் கவர்ச்சியை மிகுதியாக்கி வாசகர்களை ஈர்ப்பதற்காகச் செய்யப்படும் ஸ்டண்ட் வேலையே துர்வாசரின் கட்டுரைகள்" என்பது இப்பத்திரிகைகளின் வாதம். இந்த வாதத்தை உடைப்பதற்கும், சில பத்திரிகைகளையாவது திருந்தச்செய்வதற்கும் ஓர் ஆலோசனை கூற இத்தலையங்கம் எழுதப்படுகிறது.

''பாரதி நூற்றுண்டுவிழா கொண்டாடும் இப்பத்திரிகைகள் எழுதும் மட்டரகமான கதைகளையும் கட்டுரைகளையும் பாரதி இன்று உயிருடனிருந்து பார்த்திருந்தால் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு செத்திருப்பார்'' என்று பொருள்பட துர்வாசர் எழுதுகிருர். ''பாரதி இல்லாவிட்டாலும், இப்பத்திரிகைகளைத் திருத்தவேண்டிய பொறுப்புள்ளவர்களும், இப்பத்திரிகைகள் பலவற்றுல் மிகக்கொண்டாடப்படுகிறவர்களும், இப்பத்திரிகைகள் சிலவற்றில் மதஸம்பந்தமான கட்டுரைகளை வெளியிடும்படி நேரில் உத்ஸாஹப்படுத்தி வருகிறவர்களுமான காமகோடி பீடாதிபதிகள் இருவரும் இருக்கிருர்களே. இவர்கள் அந்தச் சில பத்திரிகைகளையாவது மட்டரகமான கதை கட்டுரைகளை வெளியிடாதபடி செய்யலாமே'' என்பது நமது ஆலோசனை. துர்வாசர் எவ்வளவு எழுதினுலும் மட்டரகமான எழுத்தைக்கொண்டு ஏராளமாகச் சம்பாதிக்கும் இப்பத்திரிகை நிர்வாகிகள் ஒருநாளும் திருந்தமாட்டார்கள்; எதிர்வாதம் செய்துகொண்டேயிருப்பார்கள். ஆகையால், துக்ளக் ஆசிரியர் 'சோ'வும், துர்வாசரும் இவ்விஷயத்தில் சில பத்திரிகைகளாவது திருந்த வேண்டும் என்றும் எண்ணம் உடையவர்களாயிருந்தால், காமகோடி பீடாதிபதிகள் இருவரையும் அணுகி, ''இதயம், விகடன், கல்கி முதலான வாரப்பத்திரிகைகளையும், சில மாதப்பத்திரிகைகளையும் நடத்தும் மணியன், பாலசுப்பிரமணியன், கி. ராஜேந்திரன் முதலானவர்கள் உங்களுடைய பக்தர்கள்; நீங்கள் சொன்னுல் தட்டமாட்டார்கள். அவர்களிடம் 'எங்களுடைய அருளுரைகளையும், உருவப் படங்களையும், எங்களைப்பற்றிய பாராட்டுரைகளையும் வெளியிடும் உங்கள் பத்திரிகைகளில், மட்டரகமான கதைகளையும் நிர்வாணப் படங்களையும் கீழ்த்தரமான சினிமாச்செய்திகளையும் வெளியிடுவது எங்களுக்கே அவமானமாயிருக்கிறது. அத்தகைய கீழ்த்தரவிஷயங்களில்லாமல் நீங்கள் பத்திரிகை வெளியிடமுடியாமலிருந்தால், எங்களைப்பற்றிய விஷயங்கள் வெளியிடுவதை அடியோடு நிறுத்திவிடுங்கள். எங்களைப்பற்றிய விஷயத்தை வெளியிட்டேயாகவேண்டுமெனில், கீழ்த்தரமான முற்கூறிய விஷயங்களை வெளியிடாதீர்கள்' என்று உத்தரவிடுங்கள்'' என்று பிரார்த்திக்கவேண்டும். இவர்கள் பிரார்த்தனைக்கு இணங்கி அவர்கள் முற்கூறியபடி உத்தரவிட்டால் இதயம், விகடன், கல்கி முதலான சில பத்திரிகைகளாவது திருந்தக் கூடும். இதுவே நமது ஆலோசனை. இத்தலையங்கத்தை அச்சிட்டு 4—5—83 அன்று துக்ளக் ஆசிரியருக்கு அனுப்பியிருக்கிருேம். அவர் நாம் கேட்டுக்கொண்டுள்ளபடி காமகோடி பீடாதிபதிகளைப் பிரார்த்தித்து, சில பத்திரிகைகளாவது திருந்துவதற்கு வழி வகுப்பார் என்று நம்புகிருேம். என்ன நடக்கிறது என்று பார்த்து, ஆனி-மீ' ஸுதர்சனம் இதழில் இதுபற்றித் தலையங்கம் எழுதுவோம்.



ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-36] [ஒளி-7,8

# 'துக்ளக்'கின் தடுமாற்றம் காமகோடி பீடாதிபதிகளின் பொறுப்பு

[ஸுதர்சனம் ஆசிரியர்]

சென்ற (வைகாசி மாதம்) ஸுதர்சனம் தலையங்கத்தில்—'துக்ளக்' துர்வாசரின் கட்டுரைகள் குறித்து எமது ஆலோசனையை 'துக்ளக்' ஆசிரியர் 'சோ'வுக்கு அனுப்பி நாட்டின் நலன் கருதி அவ்வாலோசனையின்படி உத்தரவு பிறப்பிக்குமாறு காமகோடி பீடாதிபதிகளைப் பிரார்த்திக்கும்படி அவரைக் கேட்டுக்கொண்டிருந்தோம். அதற்கு இன்று (4—6—83) வரையில் அவரிடமிருந்து யாதொரு பதிலுமில்லை. ஆயினும், இதயம் பத்திரிகையில் தம்மையும் துர்வாசரையும் தரக்குறைவாகத் தாக்கியிருந்த மணியனுக்கு 1—6—83 துக்ளக்கில் எழுதியிருக்கும் பதிலில், "இப்படி, பச்சை வியாபாரி என்று தன்னைத்தானே பிரகடனப்படுத்திக் கொண்டுள்ளவரே! ஒரே கடையில் செக்ஸையும் சங்கராச்சாரியாரையும் வியாபாரம் செய்து அப்பெரியவருக்கே இழுக்குத்தேட முயற்சிக்கும் 'இதயம்' ஆசிரியரே!...சாக்கடைத் தண்ணீரை விற்பனை செய்துவரும் 'இதயம்' அந்த மோசடி வியாபாரம் பெருகுவதற்காக சாக்கடைத் தண்ணீர் பாட்டிலுக்கு சங்கராச்சாரியார் லேபிளை ஒட்டி விற்கவும் துணிந்து விட்டது" என்று எழுதியதன் மூலம், 'சோ' ஓரளவுக்கு நேர்மையைக் காட்டியிருக்கிறார்; ஆயினும் முழுநேர்மையைக் காட்ட மனமில்லை. தங்களுடைய உருவப்படங்கள், அருளுரைகள், தங்களைப் பற்றிய பாராட்டுக்களை இந்தக் காமரசப் பத்திரிகைகளில் வெளியிடக்கூடாது என்று உத்தரவிடக் காமகோடி பீடாதிபதிகளைப் பிரார்த்திக்க பயப்படுகிறார். ஏன் இந்தத் தடுமாற்றம்? பிரார்த்தித்தாலும் பயனிருக்காது என்று நினைக்கிறாரோ?

இதயம், தாய், விகடன், கல்கி முதலான பத்திரிகைகள் வெளியிடும் 'சாக்கடைத் தண்ணீர்' பாட்டிலுக்குத் தங்களுடைய முழு ஆதரவுடன் தங்களுடைய லேபிளை ஒட்டும்படி அனுமதித்திருப்பவர்கள் காமகோடி பீடாதிபதிகளே எனும் வெளிப்படையான உண்மையை 'சோ' மறைக்கப் பார்க்கிறார். இதயம் வெளியிடும் தேவிதரிசனக் கட்டுரைகள், விகடன், கல்கி வெளியிடும் தல யாத்திரைக் கட்டுரைகள், 'தாய்' முதலான பத்திரிகைகளில் வரும் மற்றும் பல கட்டுரைகள் அனைத்தும் காமகோடி பீடாதிபதிகளின் முழு ஆதரவுடன் வெளிவருபவையே என்பது அப்பத்திரிகைகளிலேயே காணக்கிடக்கிறது. காலஞ்சென்ற கண்ணதாசன் ஆதாரமில்லாமல் குலசேகராழ்வாரை சைவராகச் சித்திரித்து எழுதிய 'சேரமான் காதலி' எனும் நாவல் ஆபாஸமான பல 'ஸெக்ஸ்' விஷயங்களைக் கொண்டது. அதை அவ்வப்போது படித்துக் காமகோடிப் பெரியவர் ஊக்குவித்து வந்ததாகவும், அதனாலேயே அந்த நாவலுக்கு சாகித்ய அகாடமி பரிசு கிடைத்ததாகவும் பத்திரிகைகளில் வந்த செய்தி நமது ஸுதர்சனர் பதிவிலும் வெளியிடப் பெற்றது. ஜெகசிற்பியன் முதலான மற்றும் பலரது நாவல்களில் காமகோடி பீடாதிபதியின் தூண்டுதலினால் வைஷ்ணவ த்வேஷம் பரப்பப்பட்டு வருவதைக் கடந்த பல வருடங்களாக நாம் ஸுதர்சனத்தில் எடுத்துக்காட்டி வருகிறோம். காமகோடிச் சிறிய பீடாதிபதி 'தாய்' பத்திரிகையைப் படிக்கும் படத்தைத் தாங்கிவந்தது தாயின் 15—8—82 இதழ். அதற்குப் பிரதியாக இப்பத்திரிகை இவரை 'நடமாடும் தெய்வம்' ஆக்கிவிட்டது. இப்பத்திரிகைகள் சோரம் போகும் கதைகளையும் நிர்வாணப்படங்களையும் வெளியிடாவிட்டால் அடுத்த மாதமே திவாலாகிவிடும் என்பது அனைவரும் அறிந்தது. பொதுமக்களில் பெரும்பான்மையினர் அதையே விரும்புகையால், இன்று ஆபாஸம் இல்லாமல் லக்ஷக்கணக்கில் வியாபாரம்செய்யும் கதைப் பத்திரிகைகளை விலைப்படுத்தமுடியாது. ஆகையால் இவற்றைக் குறைகூறுவதைக் காட்டிலும், இவற்றில் பலவற்றுக்குப் போஷகராயிருந்து இவற்றைத் தங்கள் விளம்பரத்திற்கும், விருப்பத்தை நிறைவேற்றவும் பயன்படுத்திக்கொள்ளும் இரு காமகோடி பீடாதிபதிகளையும் அம்முறையைக் கைவிட்டு, ஆபாஸ வெளியீடுகளைக் கண்டிக்கும்படி செய்யவேண்டியதே நாட்டின் நலனை விரும்பும் 'துக்ளக்' போன்ற பத்திரிகைகளின் கடமையாகும். 'துக்ளக்' இதைச் செய்யத் தயாராயில்லாவிடில், துர்வாசர் கட்டுரைகளின் நேர்மை நடுநிலையாளர்களின் ஐயத்திற்குரியதாகவேயிருக்கும்.

'துக்ளக்'கின் 1—6—83 இதழின் அட்டைப்படம் அரசியலைக் கிண்டல் செய்ய வடகலை வைஷ்ணவர்களின் மதக்குறியான திருமண் காப்பைப் பயன்படுத்திக்கொள்கிறது. அத்திருமண்காப்பை இழிவு படுத்தும்முறையில் நாத்திகரான அண்ணாவின் பெயரை அத்துடன் இணைத்து 'அண்ணா நாமம் துணை' என்று அதன்கீழ் அச்சிட்டுள்ளது. வடகலை வைஷ்ணவர்களுக்குத் தனிப்பெரும் ஆசாரியரும், ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவராலும் கவிதார்க்கிக ஸிம்ஹம் என்றும், வேதாந்தாசார்யர் என்றும் கொண்டாடப்படுபவரும், கோயில்கட்டி வழிபடப்படுபவருமான தேசிகரை இழிவுபடுத்தும் முறையில் விசாரணைக் கமிஷனுக்கு அவரை உவமையாக்கி, ''ஸ்ரீமதே ஸ்ரீவம்பு தேசிக விசாரணைக் கமிஷனே நம:'' என்று கேலி செய்திருக்கிறது. ஸ்ரீதேசிகருக்கு ''**வம்புதேசிகர்**'' என்று அடைமொழி கொடுத்திருப்பது மிகவும் கண்டிக்கத்தக்கது. கிறிஸ்தவமதக்குறியான சிலுவையையோ, முஸ்லிம் மதக்குறியான பிறையையோ இப்படி இழிவுபடுத்தியிருந்தால் துக்ளக் காரியாலயம் இந்நேரம் தூளாகியிருக்கும். ''வம்பு ஏசு'' என்றோ, ''வம்பு முகம்மது நபி'' என்றோ, ''வம்பு சங்கரர்'' என்றோ அச்சிட்டிருந்தால் பெருங்கிளர்ச்சி ஏற்பட்டு, அடுத்த துக்ளக் வெளிவர முடியாதபடி ஆகியிருக்கும். இளைத்தவர்களான வைஷ்ணவர்களையும், அவர்களுடைய மதக்குறியையும் இப்படிப் பல முறை துக்ளக் இழிவுபடுத்தியுள்ளது. இவ்வநீதியை நிறுத்திக் கொள்ளும்படி வைஷ்ணவ ஸமூஹம் முழுவதும் கிளர்ச்சி செய்ய வேண்டும். துக்ளக் ஆசிரியர் மன்னிப்புக் கேட்கும்வரை ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகா முதலான வடகலைப் பத்திரிகைகள் இக்கிளர்ச்சிக்குத் தலைமையேற்று நடத்தவேண்டுமென விரும்புகிறோம்.

காமகோடி பீடாதிபதிகளுக்குப் பல வருஷங்களாக விளம்பர சாதனங்களாக விளங்கும் பத்திரிகைகளின் யோக்யதை துக்ளக் துர்வாசர் கட்டுரைகளில் நன்கு அலசப்பட்டுவிட்டது. நாட்டின் நலனில் சிறிதாவது அக்கரையிருந்தால், காமகோடி பீடாதிபதிகள் இருவரும், வாராங்கனைகள்போன்ற இந்த வாரப்பத்திரிகைகளைக் கண்டித்து, 'இந்நிலை தொடர்ந்தால் இவற்றில் எங்களைப் பற்றிய எதுவும் வெளியிடக்கூடாது' என உத்தரவிடவேண்டும். இப் பொறுப்பை அவர்கள் நிறைவேற்றுகிறார்களா என்பதைப் பார்த்து ஸுதர்சனம் 'ஆவணி' இதழில் இதுபற்றி நாம் எழுதுவோம்.



# ஆலயநிலங்கள் நிலைக்கவேண்டும்

நம் தமிழ்நாட்டிலுள்ள ஆலயங்களுக்கு முற்காலத்தில் அரசர்களும் பிரபுக்களும் நிலங்களை எழுதிவைத்தார்கள். அவற்றின் வருமானத்தைக் கொண்டு ஆலயங்களில் ஆராதனங்களும், உத்ஸவங்களும் சிறப்பாக நடந்து வந்தன. நாட்டிற்கு சுதந்திரம் வந்து, மதச்சார்பற்ற அரசும், நாத்திக அரசும் ஆட்சிக்கு வந்தபின் வோட்டு வேட்டையாடும் அரசியல் வாதிகளால் கொண்டுவரப்பட்ட நிலச்சட்டங்களால் ஆலயநிலங்களுக்குக் குத்தகைகள் வசூலாகாமல், பல ஆலயங்கள் ஆராதனத்திற்கே வழியில்லாமல் நலிந்துவிட்டன. தற்போதுள்ள அரசின் அறநிலையமந்திரி ஆலயநிலங்களுக்கு நிலக்குத்தகைச் சட்டங்களிலிருந்து விதிவிலக்களிக்கப்போவதாகக் கூறிவருகிறார். ஆஸ்திகர்கள் அனைவரும் முதன்மந்திரிக்கு எழுதி அதை விரைவில் செயல்படுத்தும்படி கடிதம் எழுதவேண்டும். ஆஸ்திகப் பத்திரிகைகள் தலையங்கங்கள் எழுதி அரசுக்கு அனுப்பவேண்டும். ஆஸ்திக சபைகள் தீர்மானம் நிறைவேற்றி அதன் நகல்களை ஆயிரக்கணக்கானோர் கையெழுத்துடன் முதல்வருக்கு அனுப்பவேண்டும். விரைவில் குத்தகைக்காரர்களே அற்பவிலையில் நிலத்தை வாங்குவதற்கு உரிமைதரும் சட்டத்தைக் கொண்டுவரப்போவதாகவும், அதற்கு ஆலயநிலங்களுக்கும் விதிவிலக்கில்லையென்றும் மந்திரிகள் பேசிவருகிறார்கள். ரூ. 10000 முதல் (நகரங்களில்) ஒரு லக்ஷம் வரையில் விலைபோகக்கூடிய நிலத்திற்கு ரூபாய் நாலாயிரத்திற்குள் விலைநிர்ணயிக்கப்போகிறார்களாம். இச்சட்டத்திற்கும் ஆலயங்களுக்கு விதிவிலக்கு அளிக்காவிட்டால் ஆலயசொத்துக்களைக் கொள்ளையடிக்க வழிவகுக்கும். இது குறித்தும் ஆஸ்திகப் பத்திரிகைகளும், சபைகளும், பொதுமக்களும் முதன்மந்திரிக்கு எழுதவேண்டும். அரசு செவிசாய்க்காவிட்டால் கிளர்ச்சிகளும், வழக்குகளும் நடத்தத் தயாராயிருக்கவேண்டும்.

# ஓர் நற்செய்தி

இத்தலையங்கங்களை நாம் அச்சிடும் தருவாயில், நமது நண்பர் கீதாசார்யன் ஆசிரியர் ஸ்ரீவேங்கடகிருஷ்ணன் அவர்களிடமிருந்து ஓர் கடிதம் வந்தது. அதில் 'ஞானபூமி'யின் சார்பில் ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியை திரு. மணியன் பேட்டிகாணப் போயிருந்தபோது தாமும் கூடச் சென்றதாகவும், அப்போது திரு. மணியன் ஹிந்துக்களிடையே ஒற்றுமைக்கு ஸுதர்சனம் ஆசிரியரும் ஒத்துழைக்கவேண்டும் என்னும் விருப்பத்தைத் தெரிவித்ததாகவும், "அடுத்தபடி இதுபற்றி அவரோடு ஒரு பேட்டி நடத்தினுல் அவர் ஒற்றுமைக்கு வழி காட்டுவார்" என்று தாம் கூறியதாகவும், திரு. மணியன் இசைந்ததாகவும் ஸ்ரீவேங்கடகிருஷ்ணன் எழுதியுள்ளார். கீதாசார்யன் ஆசிரியர் பதரி யாத்திரையிலிருந்து திரும்பியபின் (ஜூன் இறுதியில் அல்லது ஜூலையில்) இந்த பேட்டியை நடத்தலாம் என நிர்ணயித்ததாகவும் எழுதியுள்ளார். இது நடந்து ஒற்றுமைக்கு வழியேற்பட அனைவரும் ஆதிபரம்பொருளைப் பிரார்த்திப்போம்.

# 'துக்ளக்'கின் நேர்மை

இம்மாதம் முதல் நாலு பக்கங்களிலுள்ள தலையங்கங்களை ஜூன் தொடக்கத்தில் துக்ளக்குக்கு அனுப்பினோம். அதைப் பார்த்ததும் தமது கடமையை உணர்ந்த துக்ளக் ஆசிரியர் — மணியனுக்குத் தாம் எழுதிய கடிதத்தில்,

"சில மாதங்களுக்கு முன்னால் சங்கராச்சாரியார் நடத்திய கலாசார விழாவில் கலந்துகொண்டு நான் பேசும்பொழுது பத்திரிகைகளின் இந்தப்போக்கை வன்மையாகக் கண்டித்தேன். 'இம்மாதிரிப் பத்திரிகைகளில் தங்கள் படங்களோ, கருத்துக்களோ வெளிவருவதைத் தாங்கள் விரும்பவில்லை என்று சங்கராச்சாரியார் போன்ற பெரியவர்கள் ஒரு அறிக்கை விட வேண்டும்' என்றும் கூட அதே மேடையில் கேட்டுக் கொண்டேன்".

என்று எழுதியிருக்கிறார். கலாசார விழாவில் காமகோடிச் சிறிய பீடாதிபதியைத் தாம் கேட்டுக்கொண்டதை—சில ஆயிரம்பேர்களே அறிந்த விஷயத்தை—லக்ஷக்கணக்கான துக்ளக் வாசகர்கள் அறியும்படி வெளியிட்டதன்மூலம், 'துக்ளக்' தனது நேர்மையைக் காட்டி விட்டது. சிறிய பீடாதிபதி காமகோடிப் பெரியவரையும் கலந்து கொண்டு 'துக்ளக்' கேட்டுக்கொண்டுள்ளபடி அறிக்கைவிடுவார் என்று நம்புகிறோம். என்ன நடக்கிறதென்று பார்த்துக்கொண்டு ஆவணி மாத ஸுதர்சனம் தலையங்கத்தில் இதுபற்றி மேலும் எழுதுவோம்.

# துக்ளக்கின் வைஷ்ணவத்வேஷம் நீங்குமா ?

"துக்ளக்"கின் வைஷ்ணவத்வேஷப் போக்கைக் கண்டித்து நாம் எழுதிய தலையங்கத்தை ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவுக்கும், ஸ்ரீரங்கநாத பாதுகாவிற்கும் அனுப்பினோம். ஸ்ரீரங்கநாதபாதுகாவின் ஆசிரியர் "'துக்ளக்'கின் போக்கை வன்மையாகக் கண்டிக்கிறோம்" என்னும் தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். கட்டுரையின் கடைசியில் "இது போன்ற விஷயங்களில் தவறாமல் பார்த்துக் கண்டிக்கும் 'ஸுதர்சனம்' ஆசிரியரை மனமாரப் பாராட்டுகிறோம். நீங்கள் எடுக்கும் இதுபோன்ற பொது பிரச்னைகளுக்கு எங்கள் ஆதரவைத் தர சித்தமாயிருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்" என எழுதியிருக்கிறார். ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவும் ஆடிமாத இதழில் துக்ளக்கின் போக்கைக் கண்டிக்கும் என நம்புகிறோம்.

# புராணங்கள் பற்றிய ஓர் ஆராய்ச்சி

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B L., அட்வகேட்.
(ஆசிரியர் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்") திருச்சி-620 017.

[ மே, 1983 ஸப்தகிரியில் வெளிவந்தது. ]

விஷ்ணுவைத் தாழ்த்தியும் சிவனை உயர்த்தியும் கூறும் புராணக் கதைகள் பல பத்திரிகைகளில் கட்டுரைகளாக எழுதப்படுகின்றன. சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவாலும் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே 'பகையணங்காழியும் பால் வெண் சங்கமும் ஏந்திச் செங்கண் நெடியோனுநிற' திருமால் நிற்குமிட மாகப் பாடப்பெற்ற திருவேங்கடத் திருக்கோவிலின் சார்பில் வெளி வரும் ஸப்தகிரியிலும் திருமாலைத் தாழ்த்திக் கீழ்க் கூறும் இத்தகைய கட்டுரைகள் அடிக்கடி வெளிவருகின்றன. ஆகையால் இக்கதைகள் உண்மையானவையா, அல்லவா என்பதை நடுநிலை நின்று ஆராயும் இக்கட்டுரையை எழுதுகிறோம்.

## இக்கதைகளில் சில பின்வருமாறு:

1. திருமால் பன்றியாய்ச் சிவனுடைய அடியைத் தேடினார். 2. திருமால் தனது தாமரைக்கண்ணைப் பிடுங்கிச் சிவனுக்கு அர்ச்சனை செய்தார். 3. சிவன் திருமால் எடுத்த மத்ஸ்யாவதாரம், கூர்மாவ தாரம், வராகாவதாரம் ஆகியவற்றை அங்கபங்கப்படுத்தினார். 4. நரசிம்மாவதாரத்தை சரப உருக்கொண்டு சிவன் அழித்தார். 5. திரிவிக்கிரமாவதாரத்தின் தோலையுரித்துச் சட்டையாகப் போர்த்துக் கொண்டு சீர்காழியில் சட்டநாதராகக் காட்சியளிக்கிறார். 6. ராம பிரான் ராமேச்வரம் முதலான பல இடங்களில் லிங்கப்ரதிஷ்டை செய்து சிவனைப் பூசித்தார். தலபுராணங்களில் திருமாலைத் தாழ்த்தி யும், சிவன், சக்தி முதலான தெய்வங்களை உயர்த்தியும் கூறும் நூற்றுக்கணக்கான கதைகள் உள்ளதாக விகடன், இதயம், ஞான பூமி முதலான பத்திரிகைகளில் கட்டுரைகள் வெளிவருகின்றன.

இக்கதைகள் உண்மையாயிருந்தால் நம்நாட்டு மிகப்பழைய நூல்களில் இவை கையாளப்பட்டிருக்கவேண்டும். அப்படிக் கையாளப் பட்டிருக்கின்றனவா என்பதை ஆராய்வோம். 1. நம் நாட்டில் மிகப் பழைய பிரமாண நூல்களான வேதங்களில் இக்கதைகளில் ஒன்றுகூட இல்லை. 2. வேதங்களுக்கு அடுத்தபடி மிகப்பழைமையான ஸ்ரீராமா யணத்திலும், மஹாபாரதத்திலும் இக்கதைகள் எதுவுமில்லை. 3. அடுத்தபடி மிகப்பழைமையானவையான ஸுப்ரஸித்தமான ஸ்ம்ருதிகளிலும் இக்கதைகளில் ஒன்றுகூட இல்லை. 4. காளிதாஸன் முதலான பழைய சிவ பக்தர்களான வடமொழிக் கவிஞர்களும் தமது காவியங்களில் குறிப்பாக சிவனைப் பற்றிய குமார ஸம்பவகாவியத்தில் இக்கதைகளில் ஒன்றையும் கையாளவில்லை. 5. பிராசீனர்களான மதாசார்யர்கள் எவரும், குறிப்பாக ஆதிசங்கரரும் பாஷ்ய நூல்களில்

இக்கதைகளைத் தொடவே இல்லை. 6. தமிழ் நூல்களை எடுத்துக் கொண்டால் மிகப்பழைய நூல்களான சங்கநூல்களில் பரிபாடல் முதலானவற்றில் திருமாலே பரம்பொருளாக முழங்கப்பட்டிருப்பதை யும், மற்ற எந்த தெய்வத்துக்கும் இப்பெருமை சொல்லப்படா திருப்பதையும், முருகனையும், சிவனையும் பற்றிய சங்கநூல் பாடல்களில் எதிலும் முற்கூறிய கதைகளில் ஒன்றுகூட எடுக்கப்படாமலிருப்பதை யும் காண்கிறோம். சுருங்கக் கூறினால் வடமொழி நூல்களில் தாமஸ புராணங்கள் என்று பிரஸித்திபெற்ற சைவம், ஸ்காந்தம் முதலான சைவ புராணங்களிலும், நாயன்மார்களின் தேவார திருவாசகங் களிலுமே இக்கதைகள் தலை காட்டுகின்றன. அவற்றுக்கு முற்பட்ட எந்த வடமொழி, தென்மொழி நூல்களிலும் இவை அடியோடு தொடப்படவில்லை என்று விளங்குகிறது. இதிலிருந்து மிகப்பழைய காலத்தில் திருமால் ஒருவனே பரம்பொருளாகக் கொள்ளப்பட்டான் என்றும், பிற்காலத்தில் மற்ற தெய்வங்களின் பக்தர்கள் தங்கள் தங்கள் தெய்வங்களைப் பரம்பொருளாகக் காட்டுவதற்காக முற்கூறிய பற்பல புராணக்கதைகளை எழுதி வைத்துக்கொண்டனர் என்றும் தெளிவாக விளங்குகிறது. " அக்₃நிரவமோ தே₃வதாநாம் விஷ்ணு: பரம: " [யஜுர்வேதம் தைத்திரீய ஸம்ஹிதை 5-5] [தேவதைகளுக்குள் அக்னி மிகத் தாழ்ந்தவன். தேவதைகளுக்குள் விஷ்ணுவானவன் தனக்கு மேல் ஒருவரில்லாதபடி மிகப்பெரியவனான பரமன்] என்று வேதம் விஷ்ணுவை தேவதைகளுக்குள் பரமனாகப் பேசியிருப்பதற்கு முரணாகவுள்ள இக்கதைகள் அக்காரணத்தாலேயே பிற்காலத்திலும் சான்றோர்களால் ஆதரிக்கப்படவில்லை என்று விளங்குகிறது.

கட்டுரையாசிரியர்க்கு.......

[ஸப்தகிரி ஆசிரியர் எழுதியது]

ஐயா, வைணவர்கள் மட்டுமின்றி மற்றைய சமயத்தாரில் பலரும் தங்கள் குலதெய்வமாகக் கருதி வழிபடும் பெருமையுடைய திருவேங்கட வனின் பேரருளால் வெளிவரும் 'ஸப்தகிரி' எந்தவித சமயவேறு பாடின்றிக் கதை, கட்டுரைகளை தாங்கிவருவது தாங்கள் அறிந்ததே. அவ்வாறு பிரசுரிக்கப்படும்போது அவ்வவ் சமயம் சம்பந்தப்பட்ட புராணங்கள், ஸ்தல புராணங்கள் கூறும் செய்திகளை அவை சுமந்து வருவது தவிர்க்க முடியாத ஒன்றாகும். அப்படி வெளியிடும்போதும், மற்றைய சமயக் கடவுள்களை, தனிப்பட்ட முறையில் இகழ்ந்து இதுவரையில் ஸப்தகிரியில் கதை, கட்டுரைகள் எழுதப்படவில்லை. தாங்கள் குறிப்பிட்டுள்ள ஒரு சில சமயநிகழ்ச்சிகளை ஸப்தகிரியில் வெளிவருவதற்குக் காரணம், ஒருவரை தாழ்த்தவும், மற்றவரை உயர்த்தவும் அல்ல. கடவுளர்கள் தாங்கள் புரியும் திருவிளையாடல் களின்மூலம், இந்த சமயத்தாருக்கு தெரிவிக்கும் செய்தி என்ன என்பதைக் காட்டத்தான். அச்செய்தியும் தாங்கள் அறிந்ததே. எனி னும் தங்களுடைய, மற்றும் தங்களைப் போன்றோரின் மன, மத

உணர்வுகளுக்கு மதிப்பளிக்கும் வகையில், தங்களுடைய மேலான கருத்துக்களை நாங்கள் மனமுவந்து ஏற்றுக்கொள்கிறோம்.

### ஸுதர்சனம் ஆசிரியரின் பதில்

"மற்றைய சமயக் கடவுளர்களை, தனிப்பட்ட முறையில் இகழ்ந்து ஸப்தகிரியில் கதைகள் வருவதில்லை" என்பது உண்மை. ஆனால் வேத சாத்திரங்களும் சான்றோர்களும் ஒருமுகமாகப் பரம்பொருளாகக் கூறும் திருமாலை இகழ்ந்து தாமச புராணங்களில் கூறும் கதைகள் ஸப்தகிரியில் அடிக்கடி வருகின்றனவே. அத்துடன் 22ம் பக்கத்தின்கீழ்.

உ ஓம் விக்னேஸ்வராய நம: "வேதோநித்யம் அதீயதாம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" [ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் அம்மா ஓம் காமாக்ஷி நம: ஓம் சந்திரசேகரேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம: ஓம் ஜயேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம:] இந்த அடைப்பினுள் உள்ளதை 108 தடவை எழுதி (யாரும் எந்த மொழியிலும் எப்பொழுதும் எழுதலாம்.) அத்துடன் கூட ரூ. 5 (ரூபாய் ஐந்து மட்டும்) மணியார்டர் மூலம் கீழ்க் கண்ட முகவரியில் சமர்ப்பிக்கவும். "வேதஒளி" படமும், புனித பிரசாதமும் அனுப்பப்படும். எல்லாம் நன்மைக்கே. எல்லாம் நல்லதே நடக்கும். அனுப்ப வேண்டிய முகவரி: B. K. மகாலிங்கம், D-16-A, பவர்சாலை, பிளாக்-27, நெய்வேலி-607 803. தமிழ்நாடு.

என்று ஓர் விஷயம் வெளியிடப்பட்டுள்ளது. இதில் உள்ள வாசகங்கள் அத்வைதமதச் சார்பாகவும், தமிழ் வடமொழி இலக்கணங்களுக்கு முரணாகவும், காமகோடி பீடாதிபதிகளுக்கு விளம்பரம் அளிப்பதாகவும், ரூ. 5 பணத்தைப் பலரிடமிருந்து பறிக்க வழிவகுப்பதாகவும் உள்ளன. இத்தகைய அருவருக்கத்தக்க செய்திகளை வெளியிடுவது நியாயமா? 16-ம் பக்கத்தில் "கம்பன் கண்ட சமரச சன்மார்க்கம்" என்னும் தலைப்பில், ஓராதாரமும் காட்டாமல்,

"கவி இராமாவதாரத்தை விஷ்ணுவின் அவதாரமாக மட்டும் கூறவில்லை. மும்மூர்த்திகளும் ஒருங்கே வந்து இராமனாக அவதரித்தார்கள் என்று அனுமன் வாயிலாக வெளியிடுகிறான். பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவர்க்கும் முதலான மூல பொருளே இராமனாக அவதரித்தது என்று கூறியது, கம்பனுடைய சமரச உணர்ச்சியை தான் வெளிகாட்டுகிறது."

என்று எழுதப்பட்டுள்ளது. இதை மறுத்து நாம் ஒரு கட்டுரை எழுதினால் ஸப்தகிரி வெளியிடுமா? திருமாலைத் தாழ்த்திக் கூறும் கதைகளையும், விவாதத்திற்கு இடமளிக்கக்கூடிய விஷயங்களையும் சப்தகிரி வெளியிடாமலிருப்பது நன்று. வெளியிடுவது தவிர்க்கமுடியாதெனில், அவை பற்றிய மறுப்புகளையும் தயங்காமல் வெளியிடுவதே நேர்மையாகும்.

—ஸுதர்சனம் ஆசிரியர்.



ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்
சோதி-36] [ஒளி-2

# திராவிடர் கழகத்தை வரவேற்கிறோம்.

திராவிடர்கழகமும் அதன் தலைவரான திரு கி. வீரமணி அவர்களும் சுதர்சனத்திற்கு உறுப்பினராகியிருக்கிறார்கள். சில மாதங்களாகவே நமது ஸுதர்சனர் பதில்களில் பல பகுதிகள் 'விடுதலை' பத்திரிகையில் காமகோடி சங்கராசாரி யர்களைப் பற்றிய விமர்சனங்களில் பயன்படுத்தப்பட்டு வருவ தாக நண்பர்கள் பலர் கூறினார்கள். ஊர்கள் தோறும் பொது மேடையில் "சங்கராச்சாரி-யார்?" என்னும் தலைப்பில் திரு. கி. வீரமணி நிகழ்த்தும் சொற்பொழிவுகளிலும் நமது கட்டு ரைகள் பயன்படுத்தப்பட்டு வருவதாக அறிகிறோம். விரோதிக்கு விரோதி நண்பன் என்ற முறையிலும், காமகோடி சங்கராசார்யர்களைப் பற்றிய செய்திகளைப் பெறுவதற்கும் இப்போது ஸுதர்சனம் வாசகர் வட்டத்தில் சேர்ந்திருக்கி றார்கள் என்று தோன்றுகிறது.

இந்தக் குறுகிய அளவோடு நில்லாமல், சங்ககாலத் திற்கு முன்பிருந்தே தமிழர் சமயமாய் இருந்துவரும் வைணவ சமயத்தைப் புரிந்துகொள்ளவேண்டும் என்னும் பரந்த நோக்குடன் அவர்கள் ஸுதர்சனத்தை அணுக வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம். வைணவசமயம் பிரத்யட்சத்தை (நேரில் பார்ப்பதை) அடிப்படையாகக் கொண்ட பகுத்தறிவுக்குப் பெருமதிப்பு அளிப்பது. வேதத் திற்கும் பிரத்யட்சத்துக்கும் முரணான புராணப்பகுதிகளை வைணவம் ஏற்றுக்கொள்வதில்லை. பிரத்யட்சத்தினால் அறிய முடியாத பரம்பொருளைப்பற்றிய செய்திகளை அறிவதற்கே

நாம் வேதத்தையும் அதை ஒட்டியிருக்கும் இதிகாச புராணங்களையும் ஆதாரமாகக் கொள்கிறோம். மிகச் சமீபகாலத்தில் கற்பிக்கப்பட்ட தல புராணக்கதைகளை நாம் பொருட்படுத்துவதில்லை. சங்ககாலச்சான்றோர்களின் நிலையும் இதுவேயாயிருந்தது. இவ்வுண்மையைக் கழகத்தினர் புரிநதுகொண்டால் அவர்களுக்கு சகிப்புத் தன்மை வளரும்.

நாத்திக வாதம் நெடுங்காலமாக இருந்து வருகிறது. என்றும் இருந்து வரும். ஆயினும் நாத்திகர்களுக்கும் சகிப்புத் தன்மை வேண்டும். நமது ஆத்திக சகோதரர்களான காஞ்சி காமகோடி சங்கராசார்யர்களும், அவர்களது சீடர்களால் நடத்தப்பெறும் வலிமைமிக்க பத்திரிகைகளும் சகிப்புத்தன்மை சிறிதுமில்லாமல் வைணவத்தை அழிக்கப் பல வருடங்களாக அரும்பாடுபடுகின்றனர். அதனாலேயே நாம் அவர்களைப் பற்றி எழுதுகிறோம். இந்த சகிப்புத் தன்மை திராவிடக் கழகத்தினர்க்கு ஏற்பட்டால் அது நாட்டுக்கு மிகவும் நல்லது. ஆத்திகர்களிடையேயும், ஆத்திக நாத்திகர்களிடையேயும் சகிப்புத்தன்மை இல்லாவிட்டால் தற்போது இலங்கையில் நடக்கும் அட்டூழியங்களைப்போன்ற தீச்செயல்கள் நம் நாட்டிலும் நடக்கக்கூடும். இதைத் தவிர்க்க நாத்திகர்களுக்கும் சகிப்புத் தன்மை வளரவேண்டும் என்று நாம் ஆதிபரம்பொருளாம் நாரணனை இறைஞ்சுகின்றோம். இம்முறையிலேயே திராவிடர் கழகத்தினரை நாம் ஸுதர்சனம் வாசகர் வட்டத்துள் வரவேற்கின்றோம்.

## இலங்கைத் தமிழர்களை இராமபிரான் காப்பானாக.

விபீஷணனுக்கு மிகப் பிற்காலத்தில் அரக்கர்கள் பௌத்தர்களாக மாறிவிட்டனர் என்று தோன்றுகிறது. அரக்கத்தனமான செயல்களை அங்கு வாழும் தமிழர்களைக் குறித்துச் செய்து வருகிறார்கள். யௌத்தர்களின் இயல்வை அறிந்தே நமது ஆழ்வார்களும், ஆசார்யர்களும், நாயன்மார்களும் பௌத்த மதத்தை இந்நாட்டை விட்டு விரட்டினார்கள். இலங்கையிற் குடியேறிய பௌத்தர்கள் இப்போது தங்கள் இயல்வைக் காட்டுகிறார்கள். மதிலிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைக்கும் திருவரங்கன் தமிழர்களைக் காப்பானாக. இலங்கையில் அரக்கர்களை அழித்து விபீஷண ராஜ்யத்தை ஏற்படுத்திய இராமபிரானும் இலங்கையில் தமிழர்களை ரக்ஷிப்பானாக.

# வாரப் பத்திரிகைகளும் 'நடமாடும் தெய்வங்'களும்

சென்ற 426, 427, 428 ஸுதர்சனம் இதழ்களில் துக்ளக் துர்வாஸரின் கட்டுரைகள் பற்றி நாம் எழுதிய தலையங்கங்களின் தொடர்ச்சியாக இத்தலையங்கம் எழுதப்படுகிறது. இதயம், கல்கி, விகடன், தாய் முதலான பத்திரிகைகளில் சோரம்போகும் கதைகளும், காமரச நாவல்களும் மிகுதியாக வருகின்றன என்பதை எவரும் மறுக்கமுடியாது. அவற்றில் வரும் சித்திரங்களும் நம் நாட்டுப் பண்பாட்டுக்கு முரண்பட்டவையாய், பெண்களை அரைநிர்வாணமாகக் காட்டுகின்றன. மேல்நாட்டு உடைகளைப் பெண்களுக்கு அணிவிக்கின்றன. இதனால் நம்முடைய அடுத்த தலைமுறையினர் படிப்படியாக நம்நாட்டின் பண்பாட்டிலிருந்து விலகிக்கொண்டே வருகின்றனர் என்பது கண்கூடு. இந்நிலை தொடர்ந்து நடைபெற்றால் அடுத்த தலைமுறையில் நமது பண்பாடு அடியோடு அழிந்துவிடும். குடும்பக்கட்டுப்பாடுகள் குலைந்துவிடும். இத்தகைய செயலைச்செய்யும் பத்திரிகைப் பேர்வழிகளை ஆகஸ்ட் துக்ளக் இதழில் "பத்திரிகை உலகப் படுபாதகர்கள்" என்று துர்வாஸர் குறிப்பிடுவது மிகப் பொருத்தமேயாகும்.

இத்தகைய படுபாதகச் செயலுக்கு இப்பத்திரிகைகளால் நடமாடும் தெய்வங்களாக ஆக்கப்பட்ட காமகோடி பீடாதிபதிகள் பல வருஷங்களாகப் பேராதரவு அளித்துவருகிறார்கள். இப்பத்திரிகைகளில் இவர்களுக்குப் பல வருடங்களாக அளவுக்குமீறிய விளம்பரம் கிடைத்துவருகிறது. துக்ளக்கில் துர்வாஸர் இப்பத்திரிகைகளால் நாட்டுக்குத் தொடர்ந்து விளையும் கேடுகளை விரிவாக விளக்கிய பின்பே இது பலருக்கு விளங்கிற்று. நாட்டின் நன்மையில் அக்கறையிருந்தால் இப்பத்திரிகைகளில் கீழ்த்தரமான கதைகளும் சித்திரங்களும் வெளியிடாமலிருக்கும்படி காமகோடி பீடாதிபதிகள் கேட்டுக்கொள்ளவேண்டுமென்றும், தொடர்ந்து வெளிவந்தால் தங்கள் படங்களோ, கருத்துக்களோ இவற்றில் வெளிவரக்கூடாது என்று உத்தரவிடவேண்டும் என்றும், நாமும் துக்ளக் ஆசிரியரும் பீடாதிபதிகளுக்கு எடுத்துச் சொல்லிப் பல மாதங்கள் ஆகிவிட்டன. காமகோடி பீடாதிபதிகளுக்கு அப்படி அறிக்கை வெளியிட மனமில்லை. 'நாடு எக்கேடு கெட்டாலும் நமக்கென்ன? நமக்கு விளம்பரமும் பிரசாரஸாதனமும் கிடைத்தால்போதும்' என்று இவர்கள் எண்ணுகிறார்கள் என்று தெளிவாக விளங்குகிறது. குறிப்பாக, வைஷ்ணவத்தைத் திரித்துக் கூறவும், விஷ்ணுவை இழிவுபடுத்தவும் பல வருடங்களாகத் தாம் பயன்படுத்திவரும் இப்பத்திரிகைகளோடுள்ள உறவை இவர்கள் கைவிட மாட்டார்கள் என்பது நாம் எதிர்பார்த்ததே. ஸந்யாஸிகள் தொடவும்

தகாத இப்பத்திரிகைகளை வாரந்தோறும் படிக்கும் இவர்களிடம் மதநம்பிக்கையுள்ள அறிவாளிகள் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்றும், இப்பத்திரிகைகளில் வெளிவரும் இவர்களுடைய மதக்கருத்துக்களை அவற்றில் வெளிவரும் கீழ்த்தரமான கதைகளைப் போலவே கருதவேண்டும் என்றும் உணர்த்திநிற்கின்றோம்.

# ஸ்ரீரங்கநாதபாதுகைக் கட்டுரைகள்

சென்ற மாதம் ஸுதர்சனமும், உபயவேதாந்த ஆசார்ய பீட பத்திரிகையும் இணைந்து வெளியிட்ட அண்ணா ஸ்வாமி நினைவு மலரில் ஆசார்யபீட பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி எழுதியிருந்த சில விஷயங்கள் குறித்து ஸ்ரீரங்கநாதபாதுகையின் ஆசிரியரும், ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமியும் பாதுகையில் ஆக்ஷேபம் தெரிவித்திருக்கிறார்கள். ஆக்ஷேபத்திற்குரிய அப்பகுதிகளை எடுத்துவிட்டு நாம் அதை வெளியிட்டிருக்கலாம் என்பது அவர்களுடைய வாதம். இரு பத்திரிகைகளும் இணைந்து வெளியிட்ட மலரில் ஒருவருடைய வாக்யங்களை எடுக்க மற்றொருவருக்கு உரிமையில்லை. ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் ஸ்வாமி பாதுகையின் ஆக்ஷேபங்களுக்கு ஆசார்யபீட பத்திரிகையில் ஸமாதானம் உரைக்க இருக்கிறார். அதில் கண்டு கொள்ளலாம்.

ஸ்ரீ உ.வே. மதுராந்தகம் ஸ்வாமி தமது கட்டுரையில்—பரமபதித்த காஞ்சீ அண்ணங்கராசார்யஸ்வாமி கீர்த்திமூர்த்தியான பரகால மடஸ்வாமியிடம் உபாயாநுஷ்டானம் (ப₄ரந்யாஸம்) செய்துகொண்டதாகவும், அது மைசூர் பிராந்தத்தில் பலருக்குத் தெரியும் என்றும் எழுதுகிறார். இது பிராமாணிகமாயிருந்தால் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி இந்நிலவுலகில் இருந்தபோதே இவர் இதை எழுதியிருக்கவேண்டும். அப்படி எழுதியிருப்பதாகத் தெரியவில்லை. அவர் பரமபதித்தபின்பு அஸந்தர்ப்பமாக இதை எழுதுவதிலிருந்து இச்செய்தி அப்ராமாணிகம் என்றே விளங்குகிறது. உண்மையில், இது ப்ராமாணிகமாகில், இதுபற்றிய அண்ணா ஸ்வாமியின் கடிதத்தின் புகைப்படம் அல்லது நடந்த ப்ரக்ரியையின் புகைப்படம்போன்ற ஏதாவதொரு ஆதாரத்தைப் பாதுகா பத்திரிகையில் வெளியிடவேண்டும். அப்படி ஆதாரமில்லாவிடில் மறைந்த ஓர் மஹானைப்பற்றி இப்படி எழுதியதற்கு அனுதாபம் தெரிவிக்கவேண்டும். பாதுகா பத்திரிகை நேர்மையுடன் இரண்டிலொன்றைச் செய்யுமா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

—O—